# விடுதலைக்குமுன் தமிழ் நாவல்களில் பெண்கள்

முனைவர் எம்.ஏ. சுசீலா

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை

முனைவர் மு. வரதராசனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு-7

(5, 6—9—1994)

Dr. Mu. Varatharacanar Endowment Lecture-No.7.

# Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title | : | Vidutalaikku Mun Tamil Naavelkalil Penkal |
| Author | : | M. A. SUSEELA, Department of Tamil, Fatima Collage, Madurai. |
| Publication & Copyright | : | International Institute of Tamil Studies, T. T. T. I. Post, Taramani, Madras-600 113 |
| Publication No. | : | 234 |
| Language | : | Tamil |
| Date of Publication | . | December 1995 |
| Edition | : | First |
| Paper wed | : | 16 Kg Creamwove |
| Size of the Book | : | 1/8 Demmy |
| Printing Types used | : | 10 Point |
| No. of Copies | : | 1200 |
| No. of Pages | : | 144 |
| Price | : | Rs. 30/- (Rupees Thirty only) |
| Printers | : | Chitra Printo Graphy Madras-14 |
| Artist | : | Sathia |




வெள்ளி விழா வெளியீடு

# அணிந்துரை

டாக்டர் ச. சு. இராமர் இளங்கோ
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

'பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே
ஊமை என்று பெண்ணை உரைக்கு மட்டும் உள்ளடங்கும்
ஆமை நிலைமைதான் ஆடவர்க்கும் உண்டு
புலன் அற்ற பேதையாய்ப் பெண்ணைச் செய்தால் அந்
நிலம் விளைந்த பைங்கூழ் நிலைமையும் அம்மட்டே'

—பாரதிதாசன்

பெண்ணையும் இன்பப் பொருட்களுள் ஒன்றாகக் கருதிய காலம் மாறி இன்று ஆணுக்குப் பெண் நிகர் என்ற குரல் சமூகத்தில் ஒலித்துக்கொண்டிருக்கிறது எனில் அதற்குக் காரணம் மேலே சுட்டிய பாரதிதாசன் கவிதைகள் போன்று சான்றோர் பலர், சிந்தனையாளர் பலர் எழுப்பிய உரிமைக் குரலின் பலமே ஆகும். பெண்ணின் முன்னேற்றத்தை, சமூக விடுதலையைப் பல ஊடகங்கள் வாயிலாக இவர்கள் வெளியிட்டனர். நாவல் வகையும் அவற்றுள் ஒன்று.

இச்சித்திரிப்பு 'விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில்' எவ்வாறு காணப்பட்டது என்பது இந்நூலாசிரியர் அணுகிய முறை. 'பூனைகளால் எலிகளுக்கு விடுதலை உண்டாகுமா? எங்காவது நரிகளால் ஆடு கோழிகளுக்கு விடுதலை உண்டாகுமா? ஆண்களால் பெண்களுக்கு விடுதலை கிடைக்கவே கிடைக்காது என்பதை மாத்திரம் உறுதியாக நம்பலாம்' என்ற பெரியாரின் கூற்றில் நம்பிக்கை கொண்டவர் போலும் இந்நூலாசிரியர். பெண்களுக்காகக் குரல் கொடுக்குமுகமாகத் தன்

சிந்தனைகளை இந்நூலில் தந்துள்ளார். இவரது பெண்ணியக்கச் செயல்பாடுகளின் பங்களிப்பாகப் பெண் விடுதலை பற்றிய உணர்வை இந்நூல் வெளிப்படுத்து கிறது. சிறந்ததொரு நூலை அளித்த இந்நூலாசிரியர் பாராட்டிற்குரியவர்,

டாக்டர் மு. வரதராசனார் அறக்கட்டளையை நிறு வனத்தில் நிறுவிய சான்றோர்க்கு நன்றி. இச்சொற் பொழிவை ஏற்பாடு செய்து, சிறந்த முறையில் நடத்திய திருமதி முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கும் நன்றி.

நிறுவன நற்செயல்கள் அனைத்திற்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி அமைச்சர் பேராசிரியர் கா. பொன்னுசாமி அவர்களுக்கு என்றும் எங்கள் நன்றி. தமிழ் வளர்ச்சி- பண்பாட்டுத்துறைச் செயலாளர் அவர்களுக்கும் எங்கள் நெஞ்சம் நிறைந்த நன்றி.

நூலை நன்முறையில் அச்சிட்டு அளித்த சித்ரா அச்சகத்தினர்க்கும் எங்கள் நன்றி.

—இயக்குநர்

# முன்னுரை

''மனித இனத்தின் சரிநிகர் மதிப்பைப் பெற வேண்டிய பெண்ணினம், சமுதாயத்தில் அசைக்க முடியாதபடி உருவாகிப்போன ஆணாதிக்கச் சிந்தனைப் போக்குகளால், காலங்காலமாகப் பல சித்திரவதைகளுக்கும் சீரழிவுகளுக்கும் ஆளாக நேர்ந்தது என்பது, மறுக்கவும் மறைக்கவும் இயலாத வரலாற்று உண்மையாகும். இன்றைய மாறியுள்ள சூழலில் கூடப் பெண் குறித்த அடிப்படையான சமூக மனப்போக்குகளில் முழுமையான மாற்றங்கள் நேர்ந்திராத காரணத்தினாலேயே பெண்ணியக் கோட்பாடுகளும், பெண்ணியக்கச் செயல்பாடுகளும் இலக்கிய, சமூகக் களங்களில் வலுப் பெற்று வருவதைக் காணமுடிகிறது.

தமிழில் சமூக நாவல்களின் தோற்றம் நிகழ்ந்த காலக்கட்டம், இந்தியச் சமூகத்திலும் — குறிப்பாகத் தமிழ்ச் சமுதாயத்திலும், பெண் முன்னேற்றம் சார்ந்த மறுமலர்ச்சிச் சிந்தனைகள் முகிழ்க்கத் தொடங்கியிருந்த நேரம்! காலத்தின் அந்தக் குரலைத் தங்கள் படைப்புகளில் பதிவு செய்யவும், பெண் மறுமலர்ச்சியைத் தங்கள் எழுத்துகளை ஊடகமாக்கி முன்னெடுத்துச் செல்லவும் தொடக்ககால எழுத்தாளர்கள் காட்டிய ஆர்வமும், அதற்காக அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளும் நாம் என்றென்றும் போற்றி நினைவுகூரத்தக்க பெருமையும், தகுதியும் வாய்ந்தவை. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுந்த பல நாவல்கள், அன்றைய காலச் சூழ்நிலையில், குடும்ப, சமூகத் தளங்களில் பெண்ணின் வாழ்நிலை எவ்வாறிருந்தது என்பதைக் காட்டுகிற சமூக ஆவணங்களாகவே விளங்கியிருக்கின்றன. அவற்றிலிருந்து கிடைக்கும் தகவல்களைக் கால வரிசைப்படி தொகுக்குப்பொழுது, காலந்தோறும் பெண்ணின்

நிலையில் படிப்படியாக ஏற்பட்டுவந்த மாற்றங்களையும் அவற்றின் வழி அறிய முடிகிறது.

விடுதலைக்கு முன் எழுந்த தமிழ் நாவல்கள் பலவும் கிடைப்பதற்கு அரிதாகிப்போன இன்றைய நிலையில், நமக்குக் கிட்டியிருக்கும் செய்திகளையேனும் தொகுத்தும் பகுத்தும் வைப்பதும், அவற்றை ஆய்வுக்கு உட்படுத்துவதும் தமிழாய்வின் தலையாய கடமைகளுள் ஒன்றாகிறது. இந்த அடிப்படையில், 'காலப் போக்கில் தமிழ்ச் சமூக நாவல்களில் பெண்மைச் சித்திரிப்பு' என்ற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வை '80களில் நான் மேற்கொண்டபொழுது, 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கி '80கள் வரை எழுதப்பட்டு வெளிவந்துள்ள ஆயிரக்கணக்கான நாவல்களைப் பயிலவும், அவற்றிலிருந்து பெண்ணின் சமூக நிலை தொடர்பான செய்திகளைத் தொகுக்கவும் வாய்ப்பு கிடைத்தது. அத்தரவுகளை ஆதாரமாகக்கொண்டு, இந்திய விடுதலைக்கு முன்னுள்ள காலக்கட்டம்வரை எழுந்த தமிழ் நாவல்கள், பெண் குறித்த நிலைப்பாட்டை எவ்வாறெல்லாம் சித்திரித்துள்ளன என விளக்குவதே இந்நூலின் நோக்கமாகிறது. பெண்ணின் சமூகநிலை மாற்றத்திற்கு எழுதுகோல் வழியாகத் தங்கள் பங்களிப்பைப் பொறுப்புணர்வோடு செய்திருக்கும் தொடக்கக் கால எழுத்தாளர்களுக்குப் பெண்ணினத்தின் சார்பாகச் செலுத்தப்படும் மிகச் சிறியதொரு அஞ்சலியாகவே இம்முயற்சியை நான் கருதுகிறேன்.

ஆய்வுத்துறையில் என்னை நெறிப்படுத்தி ஊக்குவித்துத் தக்க வழிகாட்டுதல்கள் அளித்த மதுரை காமராசர் பல்கலைக் கழக முன்னாள் தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் மு. சண்முகம் பிள்ளை அவர்கட்கு நான் என்றும் நன்றிக் கடப்பாடுடையேன்.

சென்ற நூற்றாண்டின் இறுதியிலும், இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும் வெளிவந்த, கிடைப்பதற்கு அரிதான புதினங்கள் பலவற்றை நான் படிப்பதற்குக் கோட்டையூர் திரு. ரோஜா முத்தையா அவர்களின் நூலகமும், மன்னார்குடி கே. ஆர். எம். அறக்கட்டளை நூலகமும், சென்னை மறைமலையடிகள் நூலகமும் தோன்றாத்துணையாக அமைந்தன. மேலும் நாவ

லாசிரியை வை. மு. கோதைநாயகி அவர்களின் நூல்கள் பலவற்றை எனக்குத் தந்து உதவிய அவரின் குடும்பத்தாரும் என் நன்றிக்கு உரியவர்கள்.

முனைவர் திரு. மு. வரதராசனாரின் பெயரில் அறக்கட்டளை அமைத்து, 1994ஆம் ஆண்டு செப்டம்பர் 5,6 ஆகிய இரு நாட்களும் **''விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள்''** என்ற தலைப்பில் நான் சொற்பொழிவாற்றக் களம் அமைத்துத் தந்ததோடு, அப்பொழிவுகள் என்றென்றும் நின்று நிலைக்கும் வகையில் நூல் வடிவமும் தந்து என்னைப் பெருமைப்படுத்தியுள்ள சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தினருக்கும், நிறுவன இயக்குநர் முனைவர் திரு. ச. சு. இராமர் இளங்கோ அவர்கட்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகள்! அறக்கட்டளைப் பொழிவுக்கு ஏற்பாடு செய்து சிறப்புற அதனை அமைத்துத் தந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பேராசிரியை முனைவர் சிவகாமி அவர்களுக்கும், நான் சொற்பொழிவாற்றிய காலக்கட்டத்தில் இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கும் என் நன்றிகள் உரியன.

28-1-96 **எம். ஏ. சுசீலா**

**மதுரை**

# பொருளடக்கம்

# அறிமுகம்

இலக்கியப் படைப்புக்கள், தனிப்பட்ட எழுத்தாளர்களின் கற்பனையில் கருவாகி உருப்பெற்றபோதும், காலத்தின் குரலாகவே கருதப்பட்டு வருகின்றன. இலக்கியத்தைச் சமூக நடப்பின் வறட்டுத்தனமான பிரதிபலிப்பாகக் கொள்வதை விட, நெடியதொரு வரலாற்றின் சாரத்தையே சுருக்கித்தரும் செறிவான பிழிவாக—சமூக மாற்றத்தின் நாடியைப் பிடித்துக் காட்டும் நிலையானதோர் ஆவணமாகக் கொள்ளுதல் ஏற்றதாக அமைகிறது. இன்றைய சூழலில், இப்பண்பை, வேறெந்த இலக்கிய வகையைக் காட்டிலும், நாவல் இலக்கியம் மிகுதியாகப் பெற்றிருப்பதற்கு, ஆழ, அகலங்களுடன் கூடிய அதன் விரிவான கட்டமைப்பே காரணமாகிறது. குறிப்பிட்ட காலச்சூழலில், குறிப்பிட்ட இடத்தில் வாழும் மனித இனத்தின் ஒழுகலாறுகள் மீது, பொருளாதார, சமூக மாற்றங்கள் ஏற்படுத்தும் தாக்கத்தை உற்று நோக்கி, அப்பாதிப்புக்களைச் சித்திரிப்பதில், நாவல் வகைகளுள்— குறிப்பாகச் சமூக நாவல் சிறந்ததொரு பங்கினைப் பெற்றிருக்கிறது.[1] சமுதாயத்தில் நாள்தோறும் ஏற்பட்டு வரும் பலவகையான மாறுதல்களைச் சித்திரிப்பதற்கும், கால ஓட்டத்தில் புதியன புகும்போது, வழிவழி மரபுகள், நம்பிக்கைகள், மதிப்புக்கள் ஆகியவை அவற்றோடு முரண்படும் தன்மையை வெளிப்படுத்துவதற்கும், சமூக நாவல், ஏற்றதொரு கருவியாகக் கொள்ளப்பட்டு வருகிறது. ‘‘புனைகதை, கலாசிருஷ்டியே எனினும், சமுதாய மாற்றத்தை, மாறும் சமுதாயத்தின் நிலையைக் காட்டும் வரலாற்றுச் சான்றாகவும் விளங்குகின்றது. புனைகதைகள்—சிறப்பாக நாவல்கள்—சமகாலச் சான்றாக,

---

1. Joseph T. Shipley (Ed.), Dictionary of world Literary Terms, P. 286.

வரலாற்றாசிரியராலும், சமூகவியலாசிரியர்களாலும் போற்றப் படுகின்றன' '[2] என்பார்; கா. சிவத்தம்பி.

மேற்குறித்த கருத்துக்களின் அடிப்படையில், நூறு ஆண்டு களுக்கும் மேற்பட்ட வரலாறும், வளர்ச்சியும் பெற்றுள்ள தமிழ்ச் சமூக நாவல்களில், விடுதலைக்கு முற்பட்ட காலக்கட்டத்தில் எழுந்த நாவல்களைச் சமூக ஆவணங்களாய்க் கொண்டு, இந்தக் காலச்சூழலில், தமிழ்நாட்டுப் பெண்களின் சமூக நிலையில் நேர்ந் துள்ள குறிப்பிடத்தக்க மாற்றங்களைக் கால மாறுபாடுகளுக் கேற்ப அவை எங்ஙனம் பதிவு செய்துள்ளன என்பதை வெளிப் படுத்துவது, இக்கட்டுரைத் தொடரின் நோக்கமாகிறது.

பெண்களைக் குறித்து மேற்கொள்ளப்படும் எத்துறை ஆய்வா யினும், அது, பெண்கள் சார்ந்த சமூகச் சிக்கல்களை அனைவரும் அறியும் வண்ணம் வெளிக்கொணர்வதையும், இயன்றவரை, அவற்றை ஒழிக்கும் வழிமுறைகள் பற்றிச் சிந்திக்கத் தூண்டு வதையும் இலக்காகக் கொள்ளுதல் வேண்டுமென்ற வழிகாட்டு தலையும்[3] இவ்வாக்கம், கருத்திற் கொண்டிருக்கிறது.

பெண்கள் சார்ந்த சமூகச் சிக்கல்கள், காலப்போக்கில் அடைந்துள்ள மாற்றங்களைத் தமிழ் நாவல் வரலாற்றின் அடிப் படையில், கால வரிசை முறைப்படித் துலக்கிக்காட்டும் இம் முயற்சியில், கீழ்க்காணும் முறையில் சில நோக்கங்கள் வகுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

1. தமிழில் நாவல்கள் அரும்பத் தொடங்கிய காலக் கட்டத்திலிருந்து இந்திய நாடு விடுதலையடையும் காலம்வரை வெளிவந்துள்ள நாவல்கள், ஒவ்வொரு காலக்கட்டத்திலும், மகளிர் சார்ந்த எந்தச் சமூகப் பிரச்சினைக்கு எந்த முறையில் அழுத்தம் தந்து சித்திரித்துள்ளன என்பதைக் காணுதல்.

2. பெண்கள் சார்ந்த சமூகச் சிக்கல்களில் சில, தமிழ் நாவல் வளர்ச்சியோடு, காலப்போக்கில் வளர்ச்சியடைந்ததையும், வேறு

---

2. கா. சிவத்தம்பி, **நாவலும் வாழ்க்கையும்**, ப. 20.

3. Workshop on Methodology for Women's Studies, Mother Teresa Women's University, Kodaikanal, 24-26 Sept. 1987.

சில சிக்கல்கள் வீழ்ச்சியடைந்ததையும், சில பிரச்சினைகள் புதிதாக முளைவிடத் தொடங்குவதையும் குறிப்பிட்டுச் சுட்டிக் காட்ட முனைதல்.

3. காலந்தோறும் நாவல்கள் சித்திரிக்கும் மகளிர் சார்ந்த பிரச்சினைகளை, உரிய சமூகவியற் காரணங்களுடன் ஒப்பு நோக்கி விளக்குதல்

4. பெண்களின் சமூகப் பிரச்சினைகளைக் கால மாறுபாடு களுக்கேற்பச் சித்திரிப்பதில், தமிழ்ச் சமூக நாவல்கள், எந்த அளவுக்கு, நடப்பியற் சூழலுடன் ஒத்தியல்கின்றன என்பதை மதிப்பீடு செய்தல்.

# கருத்துநிலைகளும் நாவற்போக்குகளும்

## கருத்துநிலை வரையறை

சென்ற நூற்றாண்டின் இறுதிக் கட்டத்திலிருந்து, இந்நூற்றாண்டின் முதற்பாதி வரை, தமிழகப் பெண்களின் சமூக நிலையில் குறிப்பிடத்தக்க பாதிப்புக்களை ஏற்படுத்தியதில், கீழ்க் காணும் ஆறு கருத்துநிலைகளும் இன்றியமையாத பங்கினைப் பெற்றிருக்கின்றன.

1. இளமை மணமும் விதவையர் நிலையும்
2. பெண் கல்வி
3. அரசியற் சூழல்களும் பெண்ணின் நிலைப்பாடும்
4. வரதட்சிணை
5. கற்புக் கோட்பாடு
6. பெண்ணுரிமை

விடுதலைக்கு முன் எழுந்த தமிழ் நாவல்கள், மேற்குறித்த கருத்து நிலைகளைச் சித்திரித்துள்ள தன்மை, இக்கட்டுரைத் தொடரில் விளக்கப்படுகிறது. இவ்வாறு குறிப்பிட்ட சில கருத்து நிலைகள் மட்டும் இங்குத் தேர்ந்துகொள்ளப்பட்டதற்குச் சில அடிப்படைகள் உண்டு.

19ஆம் நூற்றாண்டில் நிலவிய மகளிர் சார்ந்த மிகப் பெரிய சமூகத் தீமைகளைக் கால வரிசை முறையிலும், அவை விளைவிக்

கும் கேடுகளுக்கு ஏற்றவாறும் சமூகவியலார் பின்வருமாறு வரிசைப்படுத்துவர்.[1]

1. 'சதி'
2. கைம்மைத் துயரும் மறுமண மறுப்பும்
3. பலதார மணம்
4. இளமை மணம்
5. சொத்துரிமை மறுப்பு

இவற்றுள் 'சதி' என்னும் வழக்கம், பெரும்பாலும் தமிழ் வரலாற்று நாவல்களிலேயே இடம் பெற்றிருக்கிறது. இவ்வழக்கம் பற்றிக் **கிளாரிந்தா** (1915) என்னும் ஆங்கில நாவலை எழுதிய மாதவையாவும்கூட, மகாராட்டிர வரலாற்றுப் பின்னணியிலேயே அதனை உருவாக்கியுள்ளார்.

தமிழ்ச் சமூக நாவல்களைப் பொறுத்தவரை, அவற்றின் தொடக்க நிலையில், இளமை மண, கைம்மை வழக்கங்களின் சித்திரிப்பும், பெண் கல்வியை வற்புறுத்தும் வகையிலான செய்திகளுமே பலதார மணம், சொத்துரிமை மறுப்பு ஆகிய பிரச்சினைகளை விடவும் மேலோங்கிக் காணப்படுகின்றன இக்காரணத்தினாலேயே, இங்கு வரையறுத்துக் கொள்ளப்பட்டுள்ள ஆறு கருத்துநிலைகளுள், இவ்விரண்டும், முறையே முதல் இரு இடங்களையும் பெற்றுள்ளன. அரசியற் சூழல்களோடு பெண்களின் நிலையை இணைத்துக் காட்டும் வகையிலான மூன்றாவது கருத்து நிலை வெளிப்பாடு, விடுதலைக்குச் சற்று முன்னெழுந்த காலக் கட்டத்தில்—ஒத்துழையாமை இயக்கம், உப்புச் சத்தியாக்கிரகம் முதலிய காந்தீயச் சார்பு பெற்ற நாட்டு விடுதலைப் போராட்டத்தில் பெண்கள் பங்கேற்கத் தொடங்கிய பிறகே நாவல்களில் இடம் பெறத் தொடங்குகிறது.

வரதட்சிணையால் பெண்ணுக்கு ஏற்படும் பாதிப்புக்களைக் காட்டுவதும், கற்புக் கோட்பாட்டின் பலவகைப் பரிமாணங்களை வெளிப்படுத்துவதும், பெண் விடுதலைக்கான விழிப்புணர்வை

---

1. Vina Mazumdar, "The Social Reform Movement in India—From Ranade to Nehru," Indian Women From Purdah to Modernity, B. R. Nanda (Ed.) p. 48.

ஏற்படுத்துவதும் சமகாலப் படைப்பிலக்கியங்களில் காணக்கூடிய இயல்பாக இருப்பினும், இக்கூறுகள், விடுதலைக்கு முன்னுள்ள நாவல்களிலும் வெளிப்பட்டிருக்கின்றன. முதலில் குறிப்பிடப் பட்ட மூன்று கருத்து நிலைகள் போல, விடுதலைக்கு முற்பட்ட காலச் சூழலில் இவை மிகுதியாகக் காணப்படவில்லையென் றாலும், பெண்களின் வாழ்வில் பாதிப்பை ஏற்படுத்துவதில், சமூகவியற் கண்ணோட்டத்தில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் பெற்றிருப்பவை என்ற அடிப்படையில், இக்கருத்துக்களும் இவ்வாக்கத்திற்குரியனவாகத் தேர்ந்து கொள்ளப்பட்டிருக்கின் றன.

## நாவற்போக்குகள்

### நாவல் தெரிவுகள்

1879ஆம் ஆண்டு முதல் 1947ஆம் ஆண்டு வரையிலான காலக் கட்டத்தில், ஆயிரக்கணக்கான சமூக நாவல்கள், தமிழில் வந்திருத்தல் கூடும். கருப்பொருளோடு கூடிய அவற்றின் விவரப் பட்டியல், கால வரிசைப்படி இன்னும் முழுமையாக்கப்படவில்லை. தற்கால இலக்கியம் பற்றிய திறனாய்வு நூல்கள், ஒவ்வொரு காலக்கட்டத்திலும் தோன்றிய சமூக நாவல்கள் பற்றிய செய்தி களை ஓரளவு திரட்டிக் கூற முயன்றுள்ளன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெளியீடான 'தமிழ் நாவல்கள் (அகரவரிசை)' என்னும் நூல், 1983ஆம் ஆண்டுவரை வெளிவந் திருக்கும் 6298 நாவல்கள் குறித்த விவரக் குறிப்புக்களை நாவல் தலைப்புக்களின் அகர வரிசைப்படி அளிக்கிறது.[2]

தமிழ் நாவல்களின் எண்ணிக்கை, துல்லியமாகத் தெரியாத நிலையில்—இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலும், சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் வெளியான பல நாவல்கள், இன்று கிடைத்தற்கரிதான சூழலில்—அரிதின் முயன்று தேடிக் கிடைத்த நாவல்களை அடிப்படையாகக் கொண்டு, இவ்வுருவாக்கம் அமை கிறது. கட்டுரைகளின் கருப்பொருளோடு நெருங்கிய தொடர் புடைய இருபத்தாறு (26) நாவல்கள், முதன்மைச் சான்று மூலங் களாகவும், ஓரளவு தொடர்புடைய எண்பத்து நான்கு (84)

2. வே. சீதாலட்சுமி, தமிழ் நாவல்கள் (அகரவரிசை).

நாவல்கள், துணைச் சான்று மூலங்களாகவும் அமைத்துக்கொள் ளப்பட்டு அவற்றிலிருந்து கிடைத்த செய்திகளின் அடிப்படையில் கட்டுரைகள் உருப்பெற்றுள்ளன. நாவல்களின் விவரப்பட்டியல், இறுதியில் தரப்பட்டிருக்கிறது.

**நாவல்களின் பொதுவான போக்கும் மாறுபட்ட போக்கும்**

தமிழில் சமூக நாவல்கள் அரும்பத் துவங்கியிருந்த தொடக்கக் காலக்கட்டத்தில், பெண்கள் சார்ந்த சீர்திருத்தக் கருத்துக்களே அவற்றில் அதிகமாக இடம்பெற்றிருந்திருக்கின்றன. ''...ஆரம்ப கால நாவல்களில்... பெண்ணின் சுதந்திரமும், உரிமையும் வலியுறுத்தப்படுகின்றன. சாதி, சமயத்தின் பேரால் பெண்ணினத் துக்கு இழைக்கப்படும் கொடுமைகள் சுட்டிக் காட்டப் பெறு கின்றன. பெண் விடுதலை பற்றிய விழிப்புணர்ச்சி தூக்கலாகத் தெரிகிறது''[3] என்று, அந்நாவல்களின் போக்கு, மதிப்பிடப் படுகிறது. 19, 20 ஆம் நூற்றாண்டுகளில், மேனாட்டார் தொடர்பால் ஏற்பட்ட சமூக, பொருளாதார மாற்றங்கள், குடும்ப, சமூக உறவுகளிலும் பல மாறுதல்களைக் கொணர்ந்தன என்றும், இம் மாறுதல்களைச் சித்திரிக்கையில், தமிழ் நாவல்களில் பெண்ணின் நிலை. முதன்மைப்படுத்தப்பட்டதென்றும், இப்போக் கிற்குச் சமூகவிய லடிப்படையில் பின்வருமாறு காரணம் காட்டுவோருமுண்டு.

''பாரம்பரியப் பண்பாட்டின் தொடர்ச்சி முறிவைச் சித்திரிக்கக் குடும்பம் எனும் சமூக நிறுவனத்தின் அச்சாணியான பெண் (தாய், மனைவி, தமக்கை, தங்கை) முதன்மை நிலைப் பட்டது, ஆச்சரியமன்று. மேனாட்டுச் சமூக, அறத்தாக்கங்கள் காரணமாக முதன்முதலிற் கவனத்தை ஈர்த்தது, இந்திய சமூகத்தில் பெண்ணின் நிலையேயாகும்.''[4]

தமிழின் முதல் நாவலாசிரியராகக் கருதப்படும் வேதநாயகம் பிள்ளை முதல், பரபரப்பான துப்பறியும் நாவல்களை எழுதிக் குவித்த எழுத்தாளர்கள் வரை — படைப்பாளிகள் பலரும், பெண்ணின் சமூகநிலை குறித்த முற்போக்கான மனப்பான்மை,

---

3. தி. பாக்கியமுத்து, ''தமிழ்ப் புனைகதைளில் பெண்கள் (1875—1925)'', **இலக்கியத்தில் பெண்கள்**, தி. பாக்கியமுத்து (ப. ஆ.), ப. 45

4. கா. சிவத்தம்பி, **நாவலும் வாழ்க்கையும்**, ப. 55.

தம் படைப்புக்களில் வெளிப்பட வேண்டுமென்பதிலேயே ஆர்வம் காட்டியிருக்கின்றனர். இப்பொதுப்போக்கிலிருந்து மாறுபட்டு, இளமை மண, கைம்மை வழக்கங்களை ஆதரிப்பதாகவும், பெண் கல்வியை எதிர்ப்பதாகவும் கூடச் சில நாவல்கள் இக்காலக் கட்டத்தில் தோன்றியுள்ளன.

(தீனதயாளு-ச.ம. நடேச சாஸ்திரி 1900; நளின சுந்தரி அல்லது நாகரிகத் தடபுடல்—சுப்பிரமணிய சிவா 1914; வீர வஸந்தா அல்லது சுயேச்சையின் பரிபவம்—வை. மு. கோதை நாயகி 1930; அபராதி—வை. மு. கோதைநாயகி 1945)

பெண்களின் முன்னேற்றம் தொடர்பான கருத்துக்கள், சமுதாயத்தில் பரவத் தொடங்கிய காலச் சூழ்நிலையில், முற்போக்கு மனப்பான்மை கொண்ட சீர்திருத்தவாதிகளும், எழுத்தாளர்களும் கூட மரபு வழிப்பட்ட கருத்துக்களை அடியோடு எதிர்க்கும் துணிவினைப் பெற்றிருக்கவில்லை. கூடியவரை—மரபுடன் முரண்படாமல்—அதனுடன் சமரசம் செய்து கொண்ட படியே பெண்ணின் சமூகநிலையை உயர்த்துப் மிதவாதப் போக்கே, தொடக்க நிலையில் மேலோங்கியிருந்தது.[5] இத்தகைய சமூக மனப்போக்கின் எதிரொலியாகவே, மாறுபட்ட போக்குடைய மேற்குறித்த நாவல்களும் தோன்றியிருக்க வேண்டுமென்பதால், அவையும் இக்கட்டுரைத் தொடருக்குரிய முதன்மைச் சான்று மூலங்களாக ஏற்கப்பட்டுள்ளன.

---

5. Jana Matson Everelt, Women and Social Change In India, pp. 65—66.

# இளமை மணமும் விதவையர் நிலையும்

சமூகப் பிரச்சினைகளில், தலைமுறைக்குத் தலைமுறை மாற்றம் ஏற்படுதல் இயற்கை. அவ்வக்காலங்களில் கடுமையாக நிலவும் பிரச்சினைகளுக்கேற்பவே இலக்கியங்களின் போக்கும் அமைகிறது. தமிழில் சமூக நாவல்கள் அரும்பத் தொடங்கிய காலக்கட்டத்தில், இளமை மணக் கொடுமைகளும், விதவையர்க்கு இழைக்கப்படும் தீங்குகளும் சமுதாயத்தில் மலிந்திருந்தமையால் தொடக்கக் கால நாவல்களும் இப்பிரச்சினைகளை எதிரொலித் திருக்கின்றன. பெண்கள், கல்வியறிவு பெற்று வேலைக்குச் செல்லத் துவங்கிய பிறகு, மேற்குறித்த சிக்கல்கள் கூர்மழுங்கிப் போய், வேறு வகையான பிரச்சினைகள் நாவல்களில் இடம் பெறத் தொடங்கியிருக்கின்றன.

19ஆம் நூற்றாண்டின் இறுதியில், இந்திய சமூகத்தில், இளமை மண, கைம்மை வழக்கங்கள், பெரும்பாலும் ஒன்றோ டொன்று இணைந்த சிக்கல்களாகவே நிலவி வந்தன. இதற்குத் தகுந்த காரணமும் இருந்தது. மிக இளம் வயதில் திருமணம் செய்துவைக்கப்பட்ட மணமக்களுள், ஒருவர் இறக்க நேரிட்டால், மற்றவர், துணையை இழந்து துன்புறும் அவலம், மருத்துவ வசதிகள் போதிய அளவில் முன்னேற்றம் பெற்றிராத இந்நூற் றாண்டின் தொடக்கத்தில் மிகுதியாகக் காணப்பட்டது.[1] இழப்பு ஆணுடையதாக இருக்கையில், அவனுக்கு மறுமண வாய்ப்பு மறுக்கப்படவில்லை; ஆயின் துணையை இழப்பவள் பெண்ணாக அமைந்து விட்டாலோ, அவளது எதிர்காலமே இருட்டடிப்புச் செய்யப்பட்டது. தன் கணவனின் முகத்தைக்கூடச் சரியாகப் பார்த்திராத ஐந்து வயதே நிரம்பிய குழந்தைப் பெண்ணாயினும், காலமெல்லாம் விதவையென்ற பட்டத்துடன் அவள் வாழ வேண்டிய நிலை ஏற்பட்டது.[2]

---

1. Tara Ali Baig, India's Woman Power, P. 117
2. Ibid.

1930ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம், 'சார்தா சட்டம்' என்ற பெயரில் நடைமுறைப்படுத்தப்பட்ட 'குழந்தை மணத் தடுப்புச் சட்டம்', ஆசார மனப் போக்குடைய மூத்த தலைமுறையினரின் ஆதிக்கத்தைச் சற்றே அசைத்தது. சட்டச் செயலாக்கத்துடன், இளமை மண எதிர்ப்புணர்வைத் தூண்டுவதில் வேறு சில காரணங்களும் துணை நின்றன. நகர்மயமாதல், தொழிற் பெருக்கம் ஆகிய காரணங்களால், கூட்டுக்குடும்ப அமைப்புக்கள், இப்பருவத்தில் சிதையத் தொடங்கின. இரண்டாம் உலகப் போரின் விளைவாய் நேர்ந்த பொருளாதார மாற்றங்கள், நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த மக்களின் வாழ்க்கை மதிப்புக்களில் மாற்றங்களை உண்டாக்கின. பெண், கல்விகற்று, வேலை பார்ப்பதற்கான வாய்ப்புக்கள், சமூகத்தில் மிகுந்தன. நாட்டில் விரைவாக எழுச்சி பெற்று வந்த தேசிய இயக்கமும், புதிதாக உருப்பெற்ற சில மகளிர் அமைப்புக்களும் பெண்களின் மறு மலர்ச்சிக்குத் தூண்டுகோலாயின. சாதிக் கட்டுத்திட்டங்களில் விளைந்த நெகிழ்ச்சிகள், காதல், கலப்பு மணங்களை ஊக்கு வித்தன. இவ்வாறான சூழலில், இளமை மண வழக்கம், சமூகத்தினின்றும் படிப்படியாக மறைந்து, பெண்ணின் திருமண வயது உயரத் தொடங்கிற்று.[3]

விதவையர்க்கு இழைக்கப்பட்டு வந்த கொடுமைகள், ஓரளவு குறையும் நிலையும் விடுதலைக்குச் சற்று முன்னுள்ள காலகட்டத்திலிருந்து ஏற்படலாயிற்று. மறுமணம் என்ற தீர்வை அளிப்பதில், சமூகத்தில் ஒரு தயக்க உணர்வு நிலவியபோதும், கல்வி, தொழிற்பயிற்சி முதலானவற்றை வழங்கி, விதவையர்க்குப் பொருளாதாரத் தற்சார்பளிக்கும் முயற்சி, அத்தருணத்தில் மிகுதியாக மேற்கொள்ளப்படலாயிற்று.[4]

---

3.

| ஆண்டு | வயது ஆண் | வயது பெண் |
|---|---|---|
| 1901 — 1910 | 20.2 | 13.2 |
| 1911 — 1920 | 20.5 | 13.6 |
| 1921 — 1930 | 18.4 | 12.6 |
| 1931 — 1940 | 20.2 | 15.0 |
| 1941 — 1050 | 91.8 | 15.4 |

—A. R. Gupta, Woman in Hindu Socity, P. 77.

4. Kamaladevi Chattopadhayay, Indian Women's Battle for Freedom, P. 55.

விடுதலைக்குப் பின்னுள்ள காலத்தில், மேற்குறித்த சிக்கல்கள், சமூகத்தில் பரவலாக நிகழ்வதற்குரிய சூழல்கள், மேலும் குறைந்தன. இருபாலார்க்கும் உரிய திருமண வயது, சட்ட அடிப்படையில் வரையறுக்கப்பட்டிருப்பதோடு, வேறு சில சமூக மாற்றங்களும், நடப்பியல் வாழ்வில் பாதிப்புக்களை ஏற்படுத்தியிருக்கின்றன. பெண்ணின் கல்வி, வேலை வாய்ப்புக்கள் பெருகியுள்ள இன்றைய சூழலில், சில பெண்கள், திருமணமே புரிந்து கொள்ளாமல், முதிர் கன்னியராக வாழும் நிலையும் சமுதாயத்தில் நிலவி வருகிறது. இவற்றால் இளமை மண வழக்கம் இன்று அருகி வருவதோடு, சில பெண்களின் வாழ்வில் கட்டாயக் கன்னிமை மேற்கொள்ளும் நிலையும் நேரிட்டிருக்கிறது.

இன்றைய சூழலிலும், ஆங்காங்கே சில இளமை மணங்கள் நிகழ்ந்துவந்த போதும், 1879 ஆம் ஆண்டு முதல் 1947 ஆம் ஆண்டு வரையிலுள்ள காலத்தில் நிலவியதைப்போல் — பெண்ணின் சமூக நிலையே வீழ்ச்சியுறும் வகையில், மிகக் கடுமையாக அவை நிகழ்ந்துவந்த நிலை, இன்று மாறிவிட்டதென உறுதியாகக் கூறலாம். மாறாக, விதவை மறுமணம், இன்றும் கூட மனத்தடையுடனேயே ஏற்கப்பட்டு வருகிறது. ''விதவை மறுமணச் சட்டம் இயற்றப்பட்டு ஒரு நூற்றாண்டுக்கு மேலாகியும், இன்னும் கூட இந்தியச் சமூகம், மனத்தடைகளின்றி அதனை ஏற்கத் தயங்குகிறது'' என்பார் சுசீலா மேத்தா.[5]

## நாவல்களில் இளமை மணமும் விதவையர் நிலையும்

இளமை மணத் தீங்குகளும், விதவையர்க்கு இழைக்கப்படும் கொடுமைகளும் நாவல்களில் சித்திரிக்கப்பட்டுள்ள போக்கு, கீழ்க்காணும் ஐந்து உட்பிரிவுகளில் பகுத்தாய்வு செய்யப்படுகிறது.

1. இளமை மண, கைம்மை வழக்கங்கள் நடைமுறையில் பின்பற்றப்படுவதற்கு நாவல்கள் காட்டும் காரணங்கள்.
2. குறிப்பிட்ட வழக்கங்கள் எதிர்க்கப்பட்டதற்கு நாவல்கள் தரும் விளக்கங்கள்.
3. சிக்கல்களை ஆதரிப்போர் — எதிர்ப்போர் குறித்த சித்திரிப்பு
4. சிக்கல்களுக்கு நாவல்கள் வழங்கும் தீர்வுகள்

5. Sushila Mehta, Revolution and Stadus of Women in India, P. 47

5. நாவல்களில் நடப்பியல் உண்மைகளின் நேரடி வெளிப்பாடு.

## இளமைமண, கைம்மை வழக்கங்கள் நடைமுறையில் பின்பற்றப் படுவதற்கு நாவல்கள் காட்டும் காரணங்கள்

பெண்ணுக்கு இளமையில் மணம் செய்து வைப்பதற்கும், விதவையான பின்னர் அவளைக் கடுமையாக நடத்துவதற்கும் சமயச் சார்போடு ஒட்டிப் பிணைந்துவிட்ட மரபுவழி மனப்போக்கே தலையாய காரணம் என்பது நாவல்கள் எடுத்துரைக்கும் செய்தி யாக அமைகிறது.

கி.மு. 300 ஆம் ஆண்டு முதல், கிறித்துவ சகாப்தத்தின் தோற்றம் வரை நிகழ்ந்த மாற்றங்களே, பெண்களின் உயர்நிலை யில் வீழ்ச்சியினை ஏற்படுத்தி, அவர்களின் சமூகநிலையிலும் பல மாற்றங்களை விளைவித்தன என்பர், சமூகவியலார்.[6] இக்காலக் கட்டத்தில், பெண்ணுக்குக் கல்வி மறுக்கப்பட்டது; இல்லத்தைப் பராமரித்துக் குழந்தைகளைப் பெற்றெடுத்துப் பாரம்பரியத் தொடர்ச்சிக்கு உதவுவதே பெண்ணின் பணி எனச் சுருக்கப் பட்டது. சமூகத்தில் சமயம் அதிகச செல்வாக்குப் பெற்றதால், புதிய சமூக அமைப்பை நியாயப்படுத்தும் பல வழக்கங்கள், மத நூல்களில் இடைச் செருகல்களாகச் சேர்க்கப்பட்டன. இளமை மண வழக்கமும், இவற்றில் ஒன்றெனலாம்.

''பருவம் அடைந்த பின், ஒரு பெண் தந்தை வீட்டில் இருக்கக் கூடாது'' என வற்புறுத்தும் போதாயன தரும சூத்திரக் கருத்தும்,[7] ''பருவமடைந்த பிறகும் தன் பெண்ணுக்கு மணம் செய்விக்காமல் வீட்டில் வைத்திருக்கும் தகப்பன், உயிரோ டிருக்கும் கருவை அழித்த குற்றத்திற்கு ஆட்படுகிறான்'' என்னும் யாக்ஞவல்கியரின் கூற்றும்,[8] மேற் குறித்த காரணத் தினாலேயே மக்களிடம் செல்வாக்குப் பெற்றன.

இளமை மண வழக்கத்திற்குப் பிறிதொரு சமூகக் காரணமும் உண்டு. ஓர் ஆணின் தந்தைமை, பெண்ணின் கற்பு நெறியினா

---

6. B. Kuppuswami, Social Change in India, P 241.

7. Quoted in K. M. Kapadia, Marriage and Family in India, P. 138.

8. Quoted in A S. Altekar, The Position of Women in Hindu Curilization, P. 56.

லேயே உறுதிப்படுவதால், அவளது கற்பின் மீது ஐயம் ஏற்படக் கூடிய வாய்ப்புக்கு இடங்கொடுக்கச் சமுதாயம் விரும்பவில்லை. அதனைத் தவிர்ப்பதற்காகவே பெண்ணின் கற்பின் மீது பழி எழுவதற்கு வாய்ப்பில்லாத மிக இளம் பருவத்தில், பெண்களை மணம் செய்து கொடுத்துத் தம் பொறுப்பைக் கழித்துக் கொண் டிருக்கின்றனர்.[9] மேலும், பழங்காலத்தில் நிலவிய கூட்டுக் குடும்ப அமைப்பு முறைப்படி, ஓர் ஆண்மகன், தானே பொருளீட்டும் திறன் பெற்ற பிறகுதான் திருமணம் செய்து கொள்ள வேண்டு மென்ற தேவையில்லை. இதுவும், இளமை மணம் பரவுவதற்குச் சாதகமான ஒரு சூழலை ஏற்படுத்தியது.

மேற்குறித்த வழக்கங்கள், சமய அடிப்படையிலான சட்டங் களாகக் கால்கொண்டதற்கான தோற்றுவாயைச் சமூகவியல் எடுத்துக்காட்ட, அதே அடிப்படையில், இவ்வழக்கங்கள், சமூக வாழ்வில் ஆழமாக வேரூன்றிக் கிளைத்துவிட்ட பான்மையினை நாவல்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், நாராயணன், கோபாலன் ஆகிய இருவருமே இளமை மணம் செய்துகொண்டு, அதன் தீமை களையும் முற்றிலுமாக உணர்ந்தவர்கள். அவர்கள் பெற்ற கல்வியின் தாக்கம், பழைய மரபுகளைக் கண்மூடித்தனமாகப் போற்றும் போக்கிலிருந்து விடுபடுமாறு அவர்களைத் தூண்டு கிறது. தங்கள் பெண்களுக்குப் போதிய வயது வந்த பின்னரே திருமணம் செய்யவேண்டுமென இருவரும் முடிவெடுக்கிறார்கள். எனினும் அவர்களின் பெற்றோரும், உறவினரும் பழைய சம்பிர தாயங்களைக் காரணங்காட்டி மரபு வழிப்பட்ட நியதிகளினின்றும் அவர்கள் விலகிப் போகாத வண்ணம் தடுக்கிறார்கள். பெண், பருவமடைந்துவிட்டால், எத்தனை பொருள் கொடுத்தாலும், அவளுக்கேற்ற வரன் கிடைப்பது கடினமென்றும் 'கன்னிகா தானம்' செய்வதற்கென நிர்ணயிக்கப்பட்ட வயது கடந்து செய்யப் படும் திருமணம், சமூகத்தில் மதிப்புப் பெறுவதில்லை என்றும் அவர்கள் எண்ணுவதை அந்நாவல் வெளிப்படுத்துகிறது. இவ் வாறான மூத்த தலைமுறையினரின் போக்கை எண்ணி, "'ருதுவான பின்பே விவாகம் என்பதெல்லாம் வீண் கனவு தானோ?'' என்று மனம் நொந்து பேசுகிறான் நாராயணன்.[10]

---

9, Ibid.

10. **பத்மாவதி சரித்திரம்**, ப. 297.

**முத்து மீனாக்ஷி** நாவலிலும், சம்பிரதாய மரபுகளை மீறுவதி லுள்ள தயக்கம் காரணமாகவே, விதவையான தன் தங்கை முத்து மீனாக்ஷியின் மறுமணத்தை, வீட்டிலுள்ள தன் மனைவிக்கும் தெரியாமல் நடத்தி வைக்கிறான் அவள் அண்ணன். மறுமணம் செய்துகொண்ட முத்து மீனாக்ஷியையும், அவள் கணவனையும் இருபக்க உறவினரும் விலக்கி வைக்கின்றனர். குடியிருக்கும் தெருவில், அடுப்புக்கு நெருப்புக்கூடத் தராமல் அவர்களைச் சாதி விலக்குச் செய்கிறார்கள்.

**சுந்தரி** நாவலில், வழிவழி வந்த மரபுகளின் காரணமாகப் பதினொன்று வயதேயான கதைத் தலைவி சுந்தரியின்மீது கட்டா யக் கைம்மை சுமத்தப்பெறுகிறது, தன் உள்ளத்தில் மறுமண எண்ணம் தலையெடுக்கும்போது, அது சாத்திர விரோதமானது என்று எண்ணியே தன் நெஞ்சை அடக்கி வைக்கிறாள் சுந்தரி. கட்டாயக் கைம்மையை நியாயப்படுத்தும் சாத்திரங்கள், ஆண் களின் சுயலாபம் கருதி, ஒருதலைப்பட்சமாக இயற்றப்பட்டவை என்றும், சம காலத்துக்கு அவை பொருத்தமில்லாது போன பின்பும், மனிதர்கள் தங்கள் வசதி கருதி, விடாப்பிடியாக அவற் றைக் கைக்கொள்ள நினைக்கிறார்கள் எனவும், இந்நாவல், ஆசிரியர் கூற்றாகவும், பிற பாத்திரக் கூற்றுக்களாகவும் பல இடங்களில் பின்வருமாறு எடுத்துரைத்து வன்மையாகக் கண்டிப் பதைக் காண முடிகிறது.

**''சாத்திரம் சாத்திரம் என்று பேய்போலக் கூடிக் கொள்ளு வார்கள். ஓர் ஏற்பாட்டிலே லாபத்தை அடைந்துகொண்டு வரும் மனிதர்கள், அதை மாற்ற இடங்கொடுப்பார்களா?''**[11]

**''குப்பையில் போடு அய்யா இந்தத் தப்பித சாஸ்திரத்தை யெல்லாம்''**[12]

சுப்பிரமணிய பாரதியின் **சந்திரிகையின் கதை** நாவலில் ''......ஆண் மக்கள் எழுதி வைத்திருக்கும் நீசத்தனமான சுயநல சாஸ்திரத்தைக் கிழித்துக் கரியடுப்பில் போட்டுவிட்டுத்''[13] துணி வுடன் சென்னை சென்று, மறுமண முயற்சியில் ஈடுபடுமாறு இளம் விதவையாகிய விசாலாட்சியை, அவள் அண்ணி தூண்டுகிறாள்.

---

11. **சுந்தரி,** ப. 118.
12. **மேலது,** ப. 208.
13. **சந்திரிகையின் கதை,** ப. 9.

**யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** என்ற நாவலில், கதைத் தலைவி காமாட்சியின் தந்தை, விதவை மறுமணம் என்பது. கடவுளின் விருப்பத்திற்கே மாறானது என்னும் கருத்தைக் கொண்டிருப்பவர். கோதைநாயகியின் **உணர்ச்சி வெள்ளம்** நாவலில், விதவையான மதுரமும், அவள் தந்தையும் மறுமணம் பற்றிச் சிந்திக்கவே தயங்குபவர்கள். **விஜயம்** நாவலில், தாய் தந்தையரை இழந்து, தன் தாத்தாவின் ஆதரவில் வாழும் விஜயத்தின் மீது சம்பிரதாய, (ஸ்) மிருதி வழக்குகளைச் சான்று காட்டிக் கைம்மை நிலை, வலுக்கட்டாயமாகத் திணிக்கப்படுகிறது.

மரபுப்பிடிப்பு, சமூகத்தில் இறுக்கமாக நிலவிய காலச்சூழலின் வெளிப்பாடாகவே நாவல்களில் இடம் பெறும் சித்திரிப்புக்களும் அமைந்திருக்கின்றன. மேற்குறித்த வழக்கங்கள் ஆதரிக்கப்பட்டதாக நாவல்கள், நடப்பியல் நிலையில் காட்டியபோதும், படைப்பாளிகள், அவற்றுக்கு எதிரான கருத்துக்களுக்கே அதிக அழுத்தம் தந்து, பாதிக்கப்பட்ட பெண்கள்மீது அனுதாபம் தோன்றும் வகையில் தம் படைப்புக்களை உருவாக்கியுள்ளன ரென்பது. குறிப்பிடத்தக்கது.

இக்காலக் கட்டத்தில் எழுந்த நாவல்களில், சுப்பிரமணிய சிவாவின் **நளினசுந்தரி**யும், வ. மு. கோதைநாயகியின் **அபராதி**யும் முறையே இளமை மணத்திற்கு ஆதரவாகவும், விதவை மறுமணத்தைக் கண்டித்தும் எழுதப்பட்டவை.

நளினசுந்தரியின் கதைத் தலைவன் நாராயணசாமி, ஆங்கிலக் கல்வியின் தாக்கம் பெற்றவனாக இருந்த போதும், இளமையில் மணம் செய்விக்கப்படாமல், பருவமடையும் பெண்களின் நடத்தை, ஐயுறத்தக்கது என்றும், மறுமணம் புரிந்து கொள்ளும் விதவையர், ஒழுக்கக் கேடுடையவர்களென்றும் எண்ணம் கொண்டிருப்பவன்.[14] **அபராதி** நாவலில் பத்தொன்பது வயதில் விதவையான மஞ்சுளா, மறுமணம் செய்து கொண்டது மரபுக்கு முரணானதென்று ஆசிரியர், தம் கூற்றாலும், அவளைச் சார்ந்த உறவினர், மற்றும் அயலார் கூற்றாகவும் கடுஞ்சொற்களால் இழித்துரைக்கிறார்.[15] கன்னி விதவையரல்லாத பெண்கள், தன் செயலைப் பாடமாகக் கொள்ளுமாறு கேட்டுக்கொண்டு, மஞ்சுளா தற்கொலை செய்து கொள்வதாக நாவலின் முடிவு அமைந்திருக்கிறது. கன்னி விதவையல்லாத ஒரு பெண்ணுக்கு

---

14. **நளின சுந்தரி**, ப. 70.

15. **அபராதி**, ப. 47, 51, 60, 69, & 74.

மறுமண உரிமையில்லை என்னும் கருத்து, இந்நாவலில் வற்புறுத்தப் பெற்றிருக்கிறது. ஆயின் பருவமடைவதற்கு முன்பே விதவையராகிவிடும் பெண்கள் மறுமணம் செய்து கொள்ளலா மென்ற எண்ணம், இந்நாவலாசிரியருக்கு இருப்பதை, இவரது பிற நாவல்கள் வழி அறிய முடிகிறது.

### குறிப்பிட்ட வழக்கங்கள் எதிர்க்கப்படுவதற்கு நாவல்கள் தரும் விளக்கங்கள்

இளமைமண, கைம்மை வழக்கங்களைச் சித்திரிப்பதோடு மட்டுமல்லாமல், அவற்றுக்கு எதிராகப் போராடுவதும் நாவலாசிரியர்களின் நோக்கமாக விளங்கியிருக்கிறது.

### இளமை மண எதிர்ப்பு

தமிழின் தொடக்கக் கால நாவற் படைப்புக்களில் இளமை மண எதிர்ப்பு, தீவிரமாக இடம் பெறுவதற்குக் காலச்சூழலே காரணமா கிறது. 1 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதலாகவே சமூக மறுமலர்ச்சிக்கான அறிகுறிகள், இந்தியாவில் தென்படத் தொடங்கின. ஆரிய, பிரம்ம சமாஜங்கள், மேற்குறித்த வழக்கங் களைக் கண்டித்தன. ஈசுவர சந்திரவித்தியாசாகர், இரானடே, விவேகானந்தர், காந்தியடிகள் எனப் பலரும் இச் சமூகத் தீமை களைக் களையும் பணியில் முனைந்தனர். சமூக மனப்போக்கிலும், காலப்போக்கில் சில மாற்றங்கள் ஏற்படத் தொடங்கின. ''உறுப்புக்கள் போதிய வளர்ச்சியடைவதற்கு முன்பாகவே செய்யப்படும் இளமை மணத்தால், பெண், மிக இளமையிலேயே பலவீனமடைகிறாள்; சிறு பெண்களுக்குத் திருமணத்தின் பொருளோ, அதன் பொறுப்புக்களோ முழுமையாகத் தெரிந் திருக்க வாய்ப்பில்லை; புகுந்த வீட்டில் கடும் உழைப்பைத் தாங்குமளவுக்கு அவர்களுக்கு உடல் உரம் இருப்பதில்லை. திருமணம் என்றால், நல்ல ஆடை, அணிகலன், இனிப்புக்கள் ஆகியவை தவிர அவர்களுக்கு வேறு சிந்தனை இருப்ப தில்லை''[16] என்றெல்லாம் இளமை மணத்தின் விளைவுகளை விரிவாக எடுத்துரைத்துச் சமுதாயத்தை அறிவுறுத்தும் பணியில் அன்னிபெசண்ட் அம்மையார் ஈடுபட்டிருந்தார். டாக்டர் முத்து லட்சுமி ரெட்டி, சகோதரி சுப்புலட்சுமி முதலியோரும் இப்பணி யில் முனைந்து செயலாற்றினர்.

இத்தகைய காலச் சூழலில் எழுந்த நாவல்கள், இளமை மணத்தின் விளைவுகளைக் கதைப்போக்கில் விவரித்துக்

---

16. Neera Desai, Woman in Modern India, P. 109.

காட்டுவதன் வாயிலாக, அத்தீமைக்கு எதிரான மனப்போக்கைத் தூண்டுவதற்கு முயன்றிருக்கின்றன. இளமை மணத்தின் உடனிகழ்வாய்ச் சில வேளைகளில் நேர்ந்துவிடும் கைம்மை நிலை, குழந்தைப் பருவத்தில் திருமணம் செய்வதால் பெண்ணுக்கு நேரும் உடல் நலக்குறைவு ஆகிய தீய விளைவுகளைச் சுட்டிக்காட்டி, இளமை மணத்திற்கு எதிரான மனப்போக்கை நாவல்கள் தூண்டுகின்றன.

பிளேக், காலரா முதலிய கொள்ளை நோய்கள் மிகுந்திருந்த இந்நூற்றாண்டின் தொடக்கத்தில், இறப்பு விகிதம் கூடுதலாக இருந்ததென்றும், அதனாலேயே இளம் விதவையரின் எண்ணிக்கையும் அதிகமாயிற்றெனவும், தாரா அலிபெய்க் குறிப்பிடுவார்.[17] **பத்மாவதி சரித்திரம், முத்துமீனாக்ஷி, சுந்தரி, சந்திரிகையின் கதை** எனத் தொடக்கக்காலத் தமிழ்நாவல்கள் பலவற்றிலும் இளமை மணம் செய்து வைக்கப்பட்ட பெண் கைம்மையடைதல் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. குறிப்பாக, **முத்துமீனாக்ஷி** நாவலில் இச்சூழல், விரிவாகக் காட்டப்படுகிறது. வாந்திபேதியால் பாதிக்கப்பட்டு முத்துமீனாக்ஷியின் கணவன் திடீரென இறந்துபட, அவள் விதவையாகிறாள். பிற படைப்புக்களில், கணவன் இறந்த சூழல் விரிவாகக் காட்டப் பெறவில்லை.

இளமை மணத்தால் பெண்ணுக்கு நேரும் உடல் நலக்குறைபாடுகள், **பத்மாவதி சரித்திரம், முத்துமீனாக்ஷி** நாவல்களில் விளக்கப் பெறுகின்றன.

குழந்தைப் பருவத்தில் மணம் செய்விக்கப்பட்ட ஆயிரம் பெண்களில் நூறுபேர், பிள்ளைப்பேற்றின்போது இறக்கக்கூடிய வாய்ப்பிருப்பதாக மருத்துவ அறிக்கைகள் குறிப்பிடும் அறிவியல் உண்மை,[18] **பத்மாவதி சரித்திரம்** நாவலில் கதைப்போக்கில் காட்டப்படுகிறது. பத்து வயதில் திருமணம் செய்து கொண்ட கோபாலனின் மனைவி கல்யாணி, பருவமடைந்தது முதல் அடுத்தடுத்துக் குழந்தைகள் பெற்று, உடல் நலம் குன்றி, மிக இளம் வயதிலேயே இறந்து போகிறாள். "குழந்தைப் பருவத்தி

---

17. Tara Ali Baig, Op cit, P. 117.

18. Quoted in Kamaladevi Chattopadhayay, Op. cit, P. 56

லேயே புருஷனுடன் வாழத்தொடங்கி, மற்றச் சாதிகளில் பெண்களுக்கு விவாகமாகும் வயதிற்குள் இரண்டு பிள்ளைகளும் பெற்று, மூன்றாந்தரமும் சூலுற்றதனால் விளைந்த தீங்குதான் அது''[19] என; அதற்குரிய காரணத்தை, ஆங்கில மருத்துவரின் கூற்றாக நாவலில் விளக்குகிறார், மாதவையா.

முத்துமீனாக்ஷி நாவலில், ஒன்பது வயதில் திருமணம் செய்விக்கப்பட்ட முத்துமீனாக்ஷி, பருவமடைவதற்கு முன்பே மாமியார் வீட்டிற்கு அனுப்பப்பட்டு விடுகிறாள். அங்கு, காலை நாலரைமணி முதல், இரவு பத்துமணி வரை, அவள், கடுமையான வீட்டு வேலைகளில் ஈடுபடுகிறாள். அவள் பருவமடையும் வரை, அவளால் தன் மகனுக்குப் பயனில்லையென எண்ணும் அவளது மாமியார், கலைமானின் கொம்பைத் தேய்த்துப் பாலிற் கலக்கியும், இலந்தை இலையை எருமைத்தயிரில் கலந்து தந்தும், செயற்கை வழிகளில் அவளைப் பருவமடையச் செய்ய முயற்சிக்கிறாள். அவள், பருவமடையும் முன்பே, வலுக்கட்டாயமாக அவளுடன் உடலுறவு கொள்ளுமாறு, தன் மகனையும் தூண்டுகிறாள். பின்னாளில், முத்துமீனாக்ஷி பருவமடைந்த பின்னர், விரைவில் அவள் கருவுறுதற்காகப் பிள்ளைப்பூச்சி ஒன்றை உயிரோடு விழுங்கச்சொல்லி, அவளை வற்புறுத்துகிறாள். இவற்றாலெல்லாம், அவளின் உடல் நலம் சீர்குலைகிறது.

மிக இளம் வயதில் திருமணம் செய்விக்கப்படும் பெண்ணுக்குத் திருமணத்தின் பொருள் பற்றியும், தனக்கு வாய்க்கும் கணவனைப்பற்றியும் சிந்திக்கும் அறிவு முதிர்ச்சி இருக்க வாய்ப்பில்லை. **பத்மாவதி சரித்திரம்** நாவலில், கோபாலனின் மனைவி கல்யாணி, திருமணத்தின் பொழுது அம்மானையும், பல்லாங்குழியும் விளையாடிக்கொண்டிருக்கும் சிறுமியாகக் காட்டப்படுகிறாள். முத்துமீனாக்ஷி, தான் அணிந்திருக்கும் புதுப்புடவை. நகை முதலியன தவிரப் பிற சிந்தனைகள் அற்றவளாய்ச் சித்திரிக்கப்படுகிறாள். இவ்வாறு அறிவு முதிராத இளம் வயதில் செய்விக்கப்படும் திருமணங்கள், பொருந்தா மணங்களுமாகிவிடுகின்றன என்று காட்டுவதும் இந்நாவல்களின் நோக்கமாகிறது. மேற்குறித்த இரு நாவல்களிலும், இளமை மணங்கள், பொருந்தா மணங்களுமாகிவிடுவது, குறிக்கத்தக்கது.

இளமை மணத்தின் விளைவுகளைத் தமிழின் தொடக்கக்கால நாவல்கள் காட்டுவதுபோல 1930ஆம் ஆண்டிற்குப் பின்னெழுந்த

---

19. பத்மாவதி சரித்திரம், ப. 265

படைப்புக்கள், விரிவாகச் சித்திரிக்கவில்லை. இளமை மணம் இடம்பெற்றுள்ள நாவல்களிலும்கூட, அதன் உடனிகழ்வாய் நேரும் கைம்மையால் விளையும் துன்பங்களே அவற்றில் முன்னுரிமைப்படுத்திக் காட்டப்படுகின்றன. இதற்குச் சமூகவியல் அடிப்படையில் விளக்கம் கூற முடிகிறது. 1930க்கு முன்னுள்ள காலக் கட்டத்தில், இளமை மணம் மிகுதியாக நிகழ்ந்தது. அதனை அடுத்தடுத்த காலச் சூழல்களிலோ இளமை மணம், படிப்படியாகத் தவிர்க்கப்படலாயிற்று. முதற்காலக் கட்டத்தில் நிகழ்ந்த இளமை மணம் காரணமாக விதவை நிலை அடைந்த பெண்களே இக்காலச் சமுதாயத்தில் மிகுதியாகக் காணப்பட்டனர். 1931ஆம் ஆண்டின் மக்கள்தொகை அறிக்கைப்படி, 10 வயதிற்கு உட்பட்ட 51,000 விதவையர் இருந்ததை அறிய முடிகிறது.[20] எனவே, இளமை மணக்கொடுமைகளை எதிர்ப்பதைக் காட்டிலும், கைம்மைத் துன்பங்களை மிகுதியாகச் சித்திரித்துக் காட்டி, அந்த அவலநிலைக்குத் தீர்வு காண முயல்வதே படைப்பாளிகளின் நோக்கமாயிற்று.

**கைம்மை நிலை எதிர்ப்பு:** இளமை மண விளைவுகளை எடுத்துக்காட்டி, அதற்கு மாறான எதிர்ப்புணர்வைத் தூண்டியது போலவே கைம்மை நிலையின் கொடுமையான விளைவுகளைச் சித்திரிப்பதன்மூலம், சமூக எதிர்ப்புணர்வைத் தூண்டுவது, நாவல்களின் பொதுப் போக்காக அமைகிறது.

கைம்மை நிலையடைந்த பெண்ணுக்குப் புறக்கோலத்தில் செய்யப்பட்ட மாற்றங்கள் (தலைமுடியினை மழித்தல், வெள்ளாடை அணிவித்தல் முதலியன), சமூகத்தில் அவளுக்கு இழைக்கப்படும் அவமதிப்பு, அவளது சார்புநிலை, அவளின் கற்புக்கு நேரும் ஆபத்து அல்லது பழி, மேற்குறித்த கொடுமைகளால் அவள் முறை பிறழ்ந்த உறவு கொள்ளும் நிலைக்கோ, தற்கொலை முயற்சிக்கோ தள்ளப்படும் நிலை, அவளுக்கு விளையும் பொருளாதாரப் பிரச்சினை (ஜீவனாம்சம்) ஆகியவை, கைம்மை நிலையின் விளைவுகளாக நாவல்களில் இடம் பெற்றுள்ளன.

**புறக்கோல மாற்றம்:** விதவையரின் அழகிய தோற்றம் கண்டு, ஆடவர்கள் விருப்பம் கொள்வதைத் தடுப்பதற்கும், மறுமண எண்ணம் அவர்களுக்கு ஏற்படாமல் விலக்குவதற்கும் புறக்கோலங்

---

20. Quoted in Kamaladevi Chattopadhayay, Op. cit., P. 54

களில் மாற்றங்களைச் செய்யும் வழக்கம், சமுதாயத்தில் நிலவி வந்திருக்கிறது. உடன்கட்டையேறும் வழக்கத்தில், விதவை உயிரிழந்து துன்புற்றாளென்றால், இவ்வாறான வழக்கங்கள் அவளை உயிருள்ள நடைப்பிணமாக்கின என்பார், மார்க்கிரெட் கோர்மெக் என்னும் சமூகவியலறிஞர்.[21] இவ் வழக்கங்களுள். விதவையின் தலைமுடியை மழிக்கும் மரபே மிகவும் குரூரமானது. இது, வட இந்தியாவைக் காட்டிலும், தென்னிந்தியாவில்—அதிலும் குறிப்பாக அந்தண இனத்தவரிடத்திலேயே மிகுதியாக நிலவி வந்திருப்பதாக, அல்டேகர் குறிப்பிடுகிறார்.[22] தலைமுடி நீக்கப்பெறாத அந்தண விதவை, புனிதமற்றவளாகக் கருதப் பட்டாள்; அவளிடமிருந்து நீரருந்துவதும் கூடப் பாவமெனக் கருதப்பட்டது.

தொடக்கக் காலத் தமிழ் நாவல்களில் அந்தண இனத்தைச் சார்ந்த எழுத்தாளர்களால் படைக்கப்பட்ட, அவ்வினப் பின்னணி கொண்ட படைப்புகள் பல, வெளிவந்தன. அவற்றில், தலை முடிகளைதல் உள்ளிட்ட புறக்கோல மாற்றங்கள் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. தம் இனத்தைச் சார்ந்த பெண்கள் படும் துன்பங்களை நேரடியாக அறிந்திருந்த படைப்பாளிகள், அவற்றுக்கு அழுத்தம் தந்து தீர்வுகாணும் ஒரு முயற்சியாக, இவற்றை விளக்கமாக விவரித்திருக்கக்கூடும்.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், இருபது வயதுகூட நிரம்பியிராத இளம் விதவைப் பெண் சாவித்திரி, தலைமுடியில்லாத தன் தோற்றத்தைக் கண்ணாடியில் கண்டு, மயக்கமுற்று வீழும் காட்சியை உணர்ச்சி பொங்கச் சித்திரிக்கிறார், மாதவையா. **முத்துமீனாக்ஷி**, **சந்திரிகையின் கதை** ஆகிய நாவல்களில், முதலில் விதவைப் பெண்களின் தலைமுடி நீக்கப்பட்டாலும், மறுமண முயற்சி தொடங்கப்பட்ட பிறகு, அவர்கள் முடிவளர்த்துக் கொள்கின்றனர். அதனாலேயே உறவினரின் தூற்றுதல் களுக்கும், சாதி விலக்கினுக்கும் ஆளாகின்றனர். **சுந்தரி** நாவலில் மட்டும் சுந்தரியின் அண்ணி உறுதியாக நின்று, அவள் 'அவக் கோலம்' செய்யப்படாமல் தடுத்து விடுகிறாள். அதனாலேயே அக்குடும்பம், சம்பிரதாய மரபுகளை மீறிய பழிக்கு ஆளாகிறது.

---

21. Margaret Cormack, The Hindu Woman, P. 164.

22. A. S. Altekar, Op. cit, P. 161.

1930ஆம் ஆண்டுக்குப் பின்னர், அந்தணரல்லாத பிற இனப் பின்னணியிலும் இளமை மண, கைம்மைக் கொடுமைகளைச் சித்திரிக்கும் நாவல்கள் எழத் தொடங்கின.[23] உயர்குலத் தோராய்க் கருதப்பட்டவர்களைத் தவிரப் பிறரிடத்தில் விதவை மறுமணம் இயல்பாக ஏற்கப்பட்டு வந்ததால், அவர்களிடம் கைம்மைத் துன்பங்கள், முதலில் பாதிப்பை ஏற்படுத்தவில்லை யென்றும், நாளடைவில், உயர் குலத்தாருடன் தாமும் ஒருங்கு வைத்து எண்ணப் படவேண்டுமென்ற மேல்நிலையாக்க உணர்வி னால் விதவை மறுமணம், அவர்களிடத்திலேயும் மறுக்கப்படலா யிற்று என்றும் கபாடியா என்பார் குறிப்பிடுவது, இங்கு நினைவு கூரத் தக்கது.[24] எனினும் விதவையரின் தலைமுடி மழித்தல் முதலிய தீமைகள், அந்நாவல்களில் காட்டப்படவில்லை. அந்தணப் பின்னணி கொண்ட நாவல்களிலேயே அதனைக் காண முடிகிறது.

வை.மு. கோதைநாயகியின் **உணர்ச்சி வெள்ளம்** நாவலில், ஏழு வயதில் விதவையான மதுரத்திற்குத் தொடக்கத்தில் தலைமுடி நீக்கப்படவில்லை. பின்னர், காலப் போக்கில், பெரிய வர்களின் 'ஆசார'த்திற்கு அது, தடையாக இருப்பதாக வீட்டா ரால் கருதப்பட்டு, மதுரத்தின் இருபத்திரண்டாவது வயதில் நீக்கப்படுகிறது. **விஜயம்** நாவலில், கதைத் தலைவியின் தலை முடியை எடுக்கலாமா, வேண்டாமா என விவாதிப்பதற்குப் பெண் களின் அவசர ஆலோசனைக் கூட்டம் ஒன்று நடந்ததையும், குறிப்பிட்ட விதவையின் இளம் வயதை மனதிற்கொண்டு, அவள் பருவமடையும் வரை அச்சடங்கு ஒத்திவைக்க முடிவு செய்யப் பட்டதையும் எள்ளலுடன் காட்டுகிறார், நாவலாசிரியர் வ.ரா.[2]

இளம் விதவையரின் புறக்கோலச் சீரழிப்பைச் சித்திரிப்பதில் தொடக்கக் கால நாவல்களை விட, அவற்றை அடுத்து எழுந்த படைப்புக்கள் சற்று நெகிழ்வான நிலையினை வெளிப்படுத்தி யிருப்பது, காலப்போக்கில் விதவையர்பால் சமூகப் பரிவு மிகுந்து வந்த சூழலின் எதிரொலியாகவே அமைகிறது.

---

23. யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன் (முதலியார்); விசாலாட்சி அல்லது கட்டு நீங்கிய காரிகை (நாட்டுக் கோட்டை நகரத்தார்)

24. K. M. Kapadia, Op. cit., P. 143.

25. விஜயம், பக். 75, 76.

**சமூக அவமதிப்பு:** புறக்கோலம் சிதைக்கப்பெற்ற காரணத்தினாலேயே விதவைப் பெண்கள், சகுனத் தடையாகவும், தீவினைக்குக் காரணமானவர்களாகவும் பழிக்கப்பட்டுச் சமூகத்தால் அவமதிப்புச் செய்யப்பட்டனர்.

**முத்து மீனாக்ஷி** நாவலில், விதவையான முத்து மீனாக்ஷியை அவள் அண்ணி, சகுனத்தடையாக எண்ணுவதோடு, தன் குழந்தையை அவள் வைத்திருப்பதைக்கூட விரும்பாமல் தடுக்கிறாள். 'சுந்தரி—சகுனத் தடை' என்ற பெயரில், தனி ஒரு இயலையே அமைத்துச் **சுந்தரி** நாவலில், இவ்வழக்கத்தினை வன்மையாகச் சாடுகிறார், ஆசிரியர் வ. ரா. **உணர்ச்சி வெள்ளம்** என்ற படைப்பில் கன்னி விதவையான மதுரம், அபசகுனமாக எண்ணப்பட்டு, நெருங்கிய உறவினர்களின் திருமணங்களில் கூடக் கலந்துகொள்ள இயலாமல் ஒதுக்கி வைக்கப்படுகிறாள். இளம் பெண்ணின்மீது கட்டாயக் கைம்மையைச் சுமத்தி, அவளை வலுவில் 'அவக்கோலம்' செய்ததுமன்றிப் பிறகு, அந்தக் கோலத்திற்காகவே அவளைக் 'கம்மனாட்டி' என்றும் சகுனத்தடை' என்றும் பழிக்கும் வழக்கத்தை **விஜயம்** நாவல், கடுமையாகச் சாடுகிறது.

விதவை மறுமணத்தைக் கண்டிக்கும் போக்கில், இக்காலக் கட்டத்தில் எழுதப்பட்ட **நளினசுந்தரி, அபராதி** ஆகிய இரு நாவல்களும், விதவையர்க்கு இழைக்கப்பட்ட 'அவக்கோல'ங்களையும், அவமதிப்புக்களையும் ஆதரித்துப் பேசுகின்றன. பழங்காலத்தில், மதங்களின் பெயராலும், சாத்திரங்களின் பெயராலும் விதவையர்க்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்ததனாலேயே அவர்கள், கற்பு நிலை தவறாதிருந்தனரென்றும், அவற்றிலிருந்து நெகிழ்வளிப்பதால் விதவைத் தாய்மாரும்கூட மறுமணம் செய்ய முனைகின்றனரென்றும் **அபராதி** நாவல், அவ்வழக்கங்களை நியாயப்படுத்தி உரைக்கிறது.

**சார்புநிலை:** இளம் வயதில் விதவையராகிக் காலம் முழுவதும் கைம்மை நோன்பினைக் கடைப்பிடிக்கும் பெண்கள், பிறரைச் சார்ந்தே வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர். கணவனது சாவுக்கு அவர்களே காரணமெனக் கணவனின் உறவினர் அவர்களைப் பழித்ததால், புகுந்த வீட்டில் அவர்கட்கு இடமில்லை. கல்வி பயின்று, பொருளாதாரத் தற்சார்பு பெறுவதற்கு வாய்ப்பில்லாத சூழலில், தம் பிறந்த வீட்டு ஆண் உறவினர்களைச் சார்ந்தே அவர்கள் வாழவேண்டியதாயிற்று. அங்கும்

கூடச் சில வேளைகளில் அவர்கள், சுமையாக எண்ணப் பட்டதையும், வேலையாள்போல நடத்தப்பட்டதையும் சமூக வியலார் குறிப்பிடுகின்றனர்.[26]

இவ்வாறான சார்பு நிலை, விடுதலைக்கு முற்பட்ட தமிழ் நாவல்களில் மிக விரிவாகக் காட்டப்பட்டிருக்கிறது.

**முத்துமீனாக்ஷி** நாவலின் கதைத்தலைவி, விதவையானதும் தன் கணவன் வீட்டில் சம்பளமில்லாத வேலைக்காரி போலக் கடுமையாக உழைத்து வந்ததை "...ஏதாவது அதிகமாய்ப் பேசினால் வெளியே அடித்துத் துரத்திவிடுவார்களென்று பயந்து, ஒன்றுக்கும் வாய் திறவாமல் நாய்போல் உழைத்து வயிறு வளர்த்து வந்தேன்"[27] என்று அவள் கூற்றாக நாவலாசிரியர் எடுத்துக்காட்டுகிறார். **விஜயம்** நாவலில், கதைத் தலைவி விஜயம், தன் தாத்தாவைச் சார்ந்து வாழ்கிறாள். சித்தி வீட்டிலும், அண்ணன் வீட்டிலும், சில வேளைகளில் பேறுகால உதவிக்குக் கொழுந்தன் வீட்டிலுமாக மாறி மாறிச் சம்பள மில்லாத வேலைக்காரியாக விதவைப்பெண் உதைபந்தாக அலைக்கழிக்கப்படும் நிலை, **உணர்ச்சி வெள்ளம்** நாவலில் விளக்கமாகக் காட்டப்படுகிறது. **யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** நாவலில், விதவையாகிய காமாட்சி, அவள் தந்தை யாலேயே ஒரு சுமையாகப் பழிக்கப்படுகிறாள். தான் இறந்த பிறகும் கூட மகனின் சார்பிலேயே தன் மகள் வாழவேண்டுமென எண்ணும் அவர், அதனாலேயே தம் ஆயுள் காப்பீட்டுத் தொகையை அவள் பெயருக்கு எழுதி வைக்காமல், தன் மகன் பெயருக்கே எழுதி வைக்கிறார்.

**கற்பின்மீது விளையும் பழி/முறைபிறழ்ந்த உறவு :** உறவின ரைச் சார்ந்தவராய்ப் பாதுகாப்பான வீட்டுச் சூழ்நிலையில் வாழ்ந்தபோதும், ஆண் உறவினரால் விதவையர்க்குத் தீங்கு நேர்ந்ததென்றும், அத்தருணங்களில் அவர்கள் கருச்சிதைப்பு செய்துகொள்ளவோ, தற்கொலை புரியவோ முனைந்தன ரென்றும் நடப்பியல் உண்மைகளைக் குறிப்பிட்டுக் காட்டிக் கபாடியா என்பார் எடுத்துரைக்கிறார்.[28] **முத்துமீனாக்ஷி**, **சந்திரிகையின் கதை** ஆகிய நாவல்கள், இவ்வாறான நிகழ்வு

26. Margaret Cormack, Op. cit., P. 164.
27. முத்துமீனாக்ஷி, ப. 57.
28. K. M. Kapadia, Op. cit., P. 174.

களுக்குச் சான்று பகர்கின்றன. எனினும், இவ்விரு படைப்புக் களிலுமே முறையே முத்துமீனாக்ஷியும், விசாலாட்சியும் துணி வோடு தங்களை மீட்டுக்கொண்டு விடுகின்றனர். இவ்வாறன்றித் தவறான உறவுக்கு இணங்கிப்போகும் விதவையரும் உண்டு. **சுந்தரி** நாவலில், இத்தகைய நிலைக்குத் தள்ளப்பட்ட பெண் களைக் காண முடிகிறது. முறையற்ற வழியில் தாய்பெற்ற குழந்தைகளுக்குச் சமூக மதிப்பினைத் தர இயலாத நிலையில், அவற்றைக் கொலை செய்யும் நிலைக்குக்கூட அவர்கள் தூண்டப் பட்டதைக் ''கம்மனாட்டிக் கலியாண மில்லாததினாலேதான் குளத்திலும், ஆற்றிலும் குழந்தை எலும்புகள் அகப்படு கின்றன''[29] என்று அப்படைப்பு காட்டுகிறது.

முறையான மறுமணம் மறுக்கப்பட்டுக் குடும்ப வாழ்விலும், புறக்கணிப்புக்கு ஆளாகும் விதவையர் பலர், பரத்தமை வாழ்வைத் தேர்ந்து கொள்ள முற்பட்டதை அன்றைய சமூக நடப்பிலும் காண முடிந்தது. அது பற்றியே விதவையர் மறுவாழ் வில் தீவிரமாய்க் கருத்துச் செலுத்திய இராசாராம் மோகன்ராய், ''விதவைக்கு மறுமணம், பரத்தமை, தற்கொலை என மூன்று வழிகளே உள்ளன''[30] என மனம் நொந்து குறிப்பிட்டாரென்பது, இங்குக் கருதத்தக்கது.

விதவையர், முறையற்ற உறவு கொள்ளுவதற்குரிய சூழல் களைத் தொடக்கக்கால நாவல்களை விட, அடுத்துள்ள காலக் கட்டங்களில் எழுந்த படைப்புக்கள் மேலும் விரிவாய்ச் சித்திரிக் கின்றன. **முத்துமீனாக்ஷி** நாவலில் விதவையான கதைத்தலைவி, புகுந்த வீட்டாரின் கொடுமை தாங்க இயலாது சலிப்புற்ற நிலை யில், தன்னிடம் தவறாக நடக்க முயலும் உறவினனோடு ஓடி விடலாமா என்று ஒருகணம் எண்ணினாலும், பின்பு உடனே அச் சிந்தனையை மாற்றிக்கொண்டு விடுகிறாள். அங்கும், மனச் சபலத்திற்கு ஆட்பட்டு அவள் அவ்வாறு எண்ணவில்லை; மாமியார் கொடுமையே அங்ஙனம் எண்ணுமாறு அவளைத் தூண்டுகிறது. மாறாகச் சற்றுப் பின்னெழுந்த நாவல்களாகிய **விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** ஆகியவற்றில் கதைத்தலைவியரான விதவையர், தாமே மனமொப்பி, அச் செயலுக்குத் துணிந்து விடுகின்றனர்.

---

29. **சுந்தரி**, ப. 292.

30. மு. மரகதவல்லி, **மாதர் மறுமணம்**—மலர் 2, இதழ் 9, 1938; ப. 24இல் ஆளப்பெற்றுள்ளது.

விஜயம் விதவையானதும், எந்த வடிகால்களுமின்றி வீட்டில் முடக்கப்பட்ட நிலையில் எதிர்வீட்டு இளைஞனால் ஈர்க்கப்பட்டு, அவனிடம் தன்னை இழந்து விடுகிறாள். அவன், அவளை மணந்து கொள்ள முன்வராத நிலையில் தன் கருவைச் சிதைத்து விடுகிறாள். வீட்டுக்குள் முடக்கப்படும் விதவைப் பெண்ணுக்கு இல்வாழ்வுக்கான தூண்டுதல்கள் மிகுதியாக ஏற்படுகின்றன என்பதை விஜயத்தின் கூற்றாக ஆசிரியர் வை.ரா. எடுத்துரைக்கிறார்.[31] தான், கௌரவமாகக் கெட்டுப் போகும் வழியினையே, தன் உறவினர்கள் தேடி வைத்துவிட்டதாக அவள், அவர்களைக் குற்றஞ் சாட்டுகிறாள்.

**யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** என்ற நாவலில், காமாட்சி விதவையானதும் மறுமணம் புரியத் தடைவிதிக்கும் அவள் தந்தை, தன் மகன் மனைவியை இழந்த மூன்றாவது நாளே அவனுக்கு மறுமண ஏற்பாடு செய்கிறார். மனைவியை இழந்திருக்கும் அவர், ஒரு விதவையுடன் முறையற்ற தொடர்பும் கொண்டிருக்கிறார். இச்சூழலில் வாழும் காமாட்சி, தன் காதலனும் தன்னை மறுமணம் புரிய மறுத்துவிட்ட சூழலில், முறைபிறழ்ந்த உறவு கொள்ளும் நிலைக்குத் தூண்டப்பட்டு விடுகிறாள்.

**உணர்ச்சி வெள்ளம்** என்ற படைப்பில், மதுரத்தின் மீது தவறில்லாத நிலையிலும், அவள் கற்பின் மீது பழி சுமத்தப்படுவதோடு, அவள் கருவுற்றிருப்பதான வதந்தியும் பரப்பப்படுகிறது. ஊர்ப்பழிக்கு அஞ்சும் அவள் தந்தை, அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாய்க் கூறி, மாட்டுக் கொட்டிலில் அடைத்து வைத்து, நீராகாரத்தை மட்டுமே உணவாக அளிக்கிறார். இவற்றிலிருந்து விடுபட எண்ணித் தற்கொலைக்கு முயன்றாலும், அவள் கருவுற்றதை மறைக்கவே அவ்வாறு செய்கிறாளென்ற பழி எழுகிறது.

**பொருளாதாரப் பிரச்சினை :** விதவையரின் சொத்துரிமை பற்றிக் குறிப்பிடும் அல்டேகர், வேதக் காலத்தில், விதவை மறுமணம் ஏற்கப்பட்டு வந்ததால், அவர்கட்குச் சொத்துரிமை மறுக்கப்பட்டதெனவும், கி.மு. 300க்குப் பின்பு, விதவை மறுமணம் தடை செய்யப்பட்ட பின்னர், மறுமணம் செய்து கொள்ளாத விதவைக்குக் கணவனின் சொத்தில் ஓரளவு உரிமை

31. விஜயம், 89, 90, 93, 94.

உண்டென ஏற்கப்பட்டதெனவும் குறிப்பிடுகிறார்.[32] 'இந்துப் பெண்கள் சொத்துரிமைச் சட்டம்' நடைமுறைப்படுத்தப்படும் வரையில், விதவைப் பெண், கணவனின் சொத்தில், சட்டப்பூர்வ மாக உரிமை கொண்டாட இயலவில்லை. அவளுடைய பராமரிப்புச் செலவு (ஜீவனாம்சம்) மட்டுமே புகுந்த வீட்டாரைச் சேர்ந்ததாக இருந்தது. மேற்குறித்த சட்டம் நடைமுறைக்கு வந்த பிறகே கூட்டுக்குடும்பச் சொத்திலும் கூடக் கணவனின் பங்குக்கு விதவைப் பெண் உரிமை கொண்டாட ஓரளவு வழி பிறந்தது.[33]

விதவையர்க்குச் சட்ட அடிப்படையில் அளிக்கப் பெற்ற பொருளாதாரப் பாதுகாப்புக்கள் இவ்வாறிருக்கவும், சமுதாய நிலை, இவற்றுக்கு மாறாக இருந்ததையே நாவல்கள் எடுத்துக் காட்டுகின்றன. கணவனின் சொத்தில் உரிமை வழங்காவிட்டா லும், பராமரிப்புச் செலவாகிய ஜீவனாம்சத்தையும்கூட விதவைப் பெண்கள், புகுந்த வீட்டிலிருந்து போராடியே பெறவேண்டிய நிலை இருந்ததென்பது, அவற்றில் வெளிப்படுகிறது.

மேற்குறித்த பிரச்சினை, தமிழின் தொடக்கக்கட்ட நாவல் களில் இடம் பெறவில்லை. அவை, விதவைப் பெண்ணின் பிறந்த வீட்டாரைச் செல்வநிலையில் மேம்பட்டவராகவும், அவளை ஆதரிக்க மறுக்காதவராயும் காட்டியுள்ளதால் இச்சிக்கல் அவற்றில் எழுவதற்கு இடமில்லை. அடுத்தடுத்த காலக் கட்டங் களில் எழுந்த படைப்புக்களே விதவையர்க்கு நேரும் பொருளா தாரச் சிக்கலுக்கு முதன்மையளிக்கின்றன.

**உணர்ச்சி வெள்ளம்** என்னும் நாவலில், விதவையான மதுரத்தின் தந்தை, அவளது மாமனாரிடம் அவள் சார்பில் ஜீவனாம்சம் கோருகிறார். மாமனார், முதலில் மறுத்தாலும் பிறகு மனமிரங்கி அவள் பெயருக்கு நிலத்தை எழுதிவைக்கிறார். அதை, அவளது தந்தையும், மாற்றாந்தாயுமே ஏமாற்றிப் பறித்துப் கொண்டு விடுகின்றனர். அவர்களைச் சார்ந்து வாழ்ந் தாக வேண்டிய நிலையில், மதுரமும் அதற்கு உடன்பட்டு விடுகிறாள். வ.ரா.வின் **விஜயம்** நாவலில், கதைத்தலைவி

---

32. A. S. Altekar, Op. cit., 250—52.

33. Lotika Sarkar, "Jawaharlal Nehru and the Hindu Code Bill" B. R Nanda (Ed.), **Indian Women From Purdah to Modernity**, PP. 89, 90.

விஜயத்தின் புகுந்த வீட்டார், அவள் கணவனின் இறப்புக்கு அவளையே காரணமாக்கிப் பழித்துவிட்டு, அதனாலேயே அவளுக்கு 'ஜீவனாம்சம்' தரும் பொறுப்பிலிருந்தும் தப்பித்துக் கொள்கின்றனர். விதவையரின் ஜீவனாம்ச வழக்குகள் பல, அக்காலத்தில் நீதி மன்றங்களில் நடைபெற்று வந்ததையும், தீர்ப்பு, விதவையர்க்குச் சார்பாக இருந்தாலும் கூட முழுத் தொகையினையும் அளிக்காமல் வட்டிக்காக மட்டுமே அவர்களைப் பல நாட்கள் அலையவிட்டனர் என்பதையும் அந்நாவல் விரிவாக எடுத்துரைத்து, அக்காலச் சமூக நிலையை வெளிப்படுத்துகிறது.[34]

**யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** நாவலில், காமாட்சியின் தந்தை, அவளுக்காக ஜீவனாம்சம் கேட்க முயலாததுடன், விதவைக்குச் சொத்துரிமை வழங்கப்படுவதையும் கடுமையாக எதிர்ப்பவர். விதவை மகளுக்குச் சொத்தில் பங்கு தந்தால், அது, முறையற்ற உறவு கொள்ள அவளை ஊக்குவிக்குமெனக் கருதுபவர் அவர்.[35]

## 3. சிக்கல்களை ஆதரிப்போர்—எதிர்ப்போர் குறித்த சித்திரிப்பு

நாவல்களில், இளமை மண. கைம்மை வழக்கங்களை ஆதரிப்பவர்களாகச் சம்பிரதாய மரபுகளை அதிகமாகக் கடைப்பிடிக்கும் மூத்த தலைமுறையினரும், கல்விப் பயிற்சி பெறாத பெண்களுமே பெரும்பாலும் காட்டப்பட்டிருக்கின்றனர். கல்வி கற்றுப் புதிய சிந்தனைகளைக் கொண்டுள்ள இளைஞர்கள், இத்தீமைகளின் எதிர்ப்பாளர்களாக வடிக்கப்படுகின்றனர். இவ்விரு தரப்பினருக்கும் இடையே நாவல்களில் ஏற்படும் மோதலே, தீர்வை நோக்கிக் கதையை இட்டுச் செல்கிறது.

**முத்துமீனாக்ஷி, சுந்தரி** ஆகிய இரு நாவல்களிலும், இளமை மணத்தால் கைம்மையுற்ற பெண்களின் தமையன்மார், கட்டாய விதவை நிலையை எதிர்த்து, அவர்கட்கு மறுமணம் செய்து வைக்கின்றனர். இப்படைப்புக்களில், அப் பெண்களை மறுமணம் செய்ய முன்வருவோர், அவர்களின் தமையன்மாருக்கு நண்பர்களாகவே உள்ளனர். கல்வியால் விளைந்த முற்போக்குச் சிந்தனையால், அவர்கள், இக் கொடுமைகளை எதிர்ப்பதோடு, அவற்றுக்கு எதிராகச் செயல்படவும் துணிகின்றனர். படித்த இளைய தலைமுறையினர், இவ்வாறு செயல்படுகையில் கிராமத்

---

34. விஜயம், பக். 78, 79.
35. யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன், ப. 90.

திலுள்ள சில வேலையற்ற, படிக்காத இளைஞர்கள், போலி ஆசாரம் பேசி, விதவை மறுமணத்தை எதிர்ப்பதையும் **சுந்தரி** நாவல் காட்டுகிறது.[36]

மூத்த தலைமுறையைச் சார்ந்த உறவினரும், அயலவரும் இவ்வழக்கங்களை ஆதரிப்பதால், **முத்துமீனாக்ஷி** நாவலில், மறுமணம் புரிந்த தம்பதியர், சாதி விலக்குச் செய்யப்படுகின்றனர்; **சுந்தரி** நாவலில், கிராம மக்கள், சுந்தரியின் மறுமணத்தைக் கடுமையாக எதிர்ப்பதோடு, அவளின் தந்தைக்குக் கடன் கொடுத்தவர்களை, அவருக்கு எதிராகத் தூண்டிவிடவும் முயல்கின்றனர்.

தொடக்கக் கால நாவல்களில், மாறுபட்ட போக்குடையதாகிய **நளினசுந்தரியில்**, இவ்வழக்கங்களை ஆதரிப்போர் மட்டுமே காட்டப்படுகின்றனர். இந்நாவலில், மூத்த தலைமுறையினர் மட்டுமன்றி, இளைய தலைமுறையைச் சேர்ந்த கதைத்தலைவன் நாராயண சுவாமியும் இவற்றை ஆதரிப்பவனே. நாவலின் தலைவியாகிய நளினசுந்தரி, இளமையில் மணம்புரியாததும், அவள் தந்தை விதவையை மறுமணம் செய்துகொண்டதும் நாவலாசிரியர் சுப்பிரமணிய சிவாவின் கூற்றாலும் அப்படைப்பில் கண்டனம் செய்யப்பட்டுள்ளன.[37]

**உணர்ச்சி வெள்ளம், விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** ஆகிய மூன்று நாவல்களிலும், பாதிக்கப்பட்ட பெண்களின் ஆண் உறவினர்கள், இவ்வழக்கங்களை எதிர்க்க முயலவில்லை; அதனாலேயே அவர்களின் சிக்கல்கள் கடுமையாகின்றன. இந்தியக் குடும்ப அமைப்பில், ஆண் உறவினரின் பங்கு நிலை செலுத்தும் வலுவான ஆதிக்கத்தையே இது வெளிப்படுத்துகிறது.

## 4. சிக்கல்களுக்கு நாவல்கள் வழங்கும் தீர்வுகள்

இளமை மண, கைம்மை வழக்கங்களை நடப்பியற்போக்கில் படம் பிடித்துக் காட்டியதோடு நில்லாமல், அச்சிக்கல்களுக்குச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளத்தக்க தீர்வுகளைத் தரவும் படைப்பாளிகள் முயன்றிருப்பதை நாவல்கள் வெளிப்படுத்துகின்றன.

---

36. **சுந்தரி**, பக். 212—14.

37. **நளினசிந்தரி**, பக். 49, 50, 83.

**இளமை மணத்தீர்வு :** சமுதாய மனப்போக்கில் மாற்றமும், குழந்தை மணத்தடுப்புச் சட்டமும், இளமை மண வழக்கத்திற் கான தீர்வுகளாகச் சமூகவியலாரால் கூறப்பட்டவை. **பத்மாவதி சரித்திரம்** ஒன்றைத் தவிர, இளமை மணம் இடம்பெறும் பிற அனைத்து நாவல்களும், இளமை மணத்தைக் கைம்மை நிலை யுடன் இணைத்துக் காட்டியிருத்தலின், கைம்மைக் கொடுமைக்குத் தீர்வு கூறுவதற்கே அவை முன்னுரிமை வழங்குகின்றன. இளமையில் மணம்புரியும் சமூக மனப்போக்கு மாறவேண்டும் என்ற கருத்து, **முத்துமீனாக்ஷி, சந்திரிகையின் கதை, சுந்தரி, விஜயம்** ஆகிய நாவல்களில், கதைப்போக்கில் இடம் பெற்றுள்ள போதும், தீர்வு இன்னதெனக் குறிப்பிட்டுக் காட்டும் தன்மை, அவற்றில் இடம்பெறவில்லை. **பத்மாவதி சரித்திரம்** நாவலில் மட்டும், இளமை மணத்துக்குத் தீர்வு, பெண்கல்வி என்பது, குடுப்பிடப்படுகிறது. பெண்கல்வியால் இளமை மணங்கள் தவிர்க்கப்படக்கூடிய சாத்தியக்கூற்றினையே அந்நாவல், சுட்டுகிறதெனலாம். 'குழந்தை மணத் தடுப்புச்சட்டம்' இச் சிக்கலைத் தீர்க்கும் கருவியாக நாவல்களில் இடம்பெறவில்லை. **விஜயம்** நாவலில், ஒரு சிறு துணைச்செய்தியாக மட்டுமே அச் சட்டம் பற்றிய குறிப்பு அமைந்திருக்கிறது. சட்டத்தைவிடச் சமூக மனமாற்றமே இச்சிக்கலின் தீர்வுக்கு அடிப்படையாகும் என, நாவலாசிரியர்கள் எண்ணியிருக்கக்கூடும்.

**கைம்மை நிலைத்தீர்வு :** விதவை மறுமணமும், விதவை யர்க்குக் கல்விப் பயிற்சி தந்து, அவர்கள் பொருளாதாரத் தற்சார்பு பெற உதவுதலும் ஆகிய இரண்டும், கைம்மைத் துன்பங் களுக்குத் தீர்வுகளாகச் சமுதாயத்தில் எண்ணப்பட்டு வந்துள்ளன. எனினும் இவ்விரண்டனுள் இன்றைய நிலையிலும் கூட, விதவை மறுமணம் என்பது, மிகுந்த தயக்கத்துடனேயே ஏற்கப்பட்டு வரு கிறது. சீர்திருத்தவாதிகளின் தொடர்ந்த பிரச்சாரங்களும், சட்ட நடவடிக்கைகளும் விதவை மறுமணத்தைச் சமுதாயத்தில் பரவ லாக்க முயற்சித்த போதிலும், ஒரு விதவைப்பெண், தானாகவே விரும்பி மேற்கொள்ளும் கைம்மைநிலை, சமூகப் பாராட்டுக்கும், போற்றுதலுக்கும் உரியதாகவே தொடர்ந்து விளங்கி வருகிறது. கவிஞர்களும், புனைகதை ஆசிரியர்களும், சீர்திருத்தவாதிகளும் ஒருபுறம் விதவை மறுமணத்தின் தேவையை வலியுறுத்தினாலும், மரபுவழியில் கைம்மை நோன்பு மேற்கொள்ளும் பெண்களை இலட்சியப்படுத்தி, உயர்த்திக்காட்டவும் தவறவில்லை.[38]

---

38. K. M. Kapadia, Op. cit., P. 179.

குறிப்பாகக் கன்னியரல்லாத விதவையர் மறுமணம் செய்வதற்கு, இந்நூற்றாண்டின் தொடக்கத்தில், சமூக ஆதரவு மிகவும் குறைவாகவே இருந்தது. ''திருமணத்தில் கன்னித்தன்மையே வேண்டப்படுவதால் விதவையை மறுமணம் செய்துகொள்ளப் படித்த ஆண்களும்கூட முன்வருவதில்லை. நாற்பது வயதுக்கு மேல் மறுமணம் செய்துகொள்ள விரும்பும் தாரமிழந்த ஆடவர்களும் கூடக் கன்னி விதவையரையே நாடுகின்றனர். விதவையர்க்கு மறுமணத்தீர்வு வெற்றி பெறாமையால், அவர்கட்கு ஆசிரியத் தொழில் முதலிய வேலைவாய்ப்புக்களை அளிப்பதே உகந்தது''[39] என்று அக்காலச்சூழலில், தம் தகவலாளிகள் தெரிவித்த பல கருத்துக்களை மார்க்கிரெட் கோர்மெக் என்னும் சமூகவியலறிஞர் தொகுத்துத் தருகிறார்.

மேற்குறித்த இருவகைத் தீர்வுகளையும், நாவல்களில் காண முடிகிறது. எனினும், சமூகவியலார் கருத்துக்களை ஒட்டி, மறுமணத் தீர்வை விடவும், கல்வியும், தொழிற்பயிற்சியும் அளிக்கும் தீர்வே, சமுதாய நடப்பில் பெரும்பான்மையும் ஏற்கப்பட்டதை அவை காட்டுகின்றன.

இளமை மண, கைம்மை வழக்கங்கள் மிகக் கடுமையாக நிலவிய காலச் சூழலில் எழுந்த தொடக்கக்காலத் தமிழ் நாவல்கள் சிலவற்றில் (குறிப்பாக **முத்து மீனாக்ஷி, சுந்தரி, சந்திரிகையின் கதை**) கைம்மைத் துன்பத்துக்கு மாற்றாக மறுமணத் தீர்வு மட்டுமே குறிப்பிடப்பட்டிருப்பதும், அதுவும்கூட வெற்றி பெறுவதாகக் காட்டப்பட்டிருப்பதும், இலட்சியப்படுத்தப்பட்ட நிலையிலான சித்திரிப்பு என்றே கூறவேண்டும். தாங்கள் காண விரும்பிய தீர்வு—நடப்பியற் சமூகத்தால் ஏற்கப்படாவிடினும்—படைப்பாளிகள், துணிவோடு அதனை வெளிப்படுத்தத் தயங்கவில்லை என்பதையே இது காட்டுகிறது.

தமிழில் நாவல்கள் வெளிவரத் தொடங்கியிருந்த காலத்தில், விதவையர் சிக்கல்களை வெளிப்படுத்தும் நாவல்கள், வேறு பல இந்திய மொழிகளிலும் எழுதப்பட்டன; ஆயின் அவை, சிக்கல்களை மட்டும் விவரித்துக் காட்டினவேயன்றி, அவற்றுக்குத் தீர்வு கூற முற்படவில்லை. இந்திய மொழிகளைப் பொறுத்தவரை, விதவை மறுமணத்தை, இச்சிக்கலுக்குத் தீர்வாக உரைக்கும்

39. Margaret Cormack, Op. cit., P. 163.

நாவல்களில் மாதவையாவின் **முத்துமீனாக்ஷியே** முதலிடம் பெறுகிறது.[40] மாதவையா காட்டிய வழியில், தொடர்ந்து வ.ரா.வும் (**சுந்தரி**), சுப்பிரமணிய பாரதியாரும் (**சந்திரிகையின் கதை**), இத்தீர்வைத் தம் நாவல்களில் நடைமுறைப்படுத்திக் காட்டினர். இக்காரணம் பற்றியே, ''புரட்சிகரமான மனித நேசக் கொள்கையின் தந்தை''[41] என்று மாதவையாவை வருணிக்கிறார், நா. வானமாமலை. எனினும் அந்நாவல் எழுந்த காலத்தில், அதில் விதவை மறுமணத்தைத் தீர்வாக எழுதியமைக்காக, மாதவையா, கடும் கண்டனத்திற்கு ஆளாக்கப்பட்டார். 'இந்து' ஆங்கில நாளேடு, இத்தீர்வுக்காகத் தம்மைக் கடுமையாக விமர்சித்ததையும், பிறகு 21 ஆண்டுகள் கழித்து, அவ்விதழிலேயே தமது முற்போக்குக் கருத்துக்கள் வெளிவரத் தொடங்கியதையும், மாதவையா, **முத்துமீனாக்ஷி** நாவலின் இரண்டாம் பதிப்பிற்கு எழுதிய முன்னுரையில் குறிப்பிட்டிருப்பதைக் காண முடிகிறது.[42]

கன்னி விதவையரின் மறுமணத்திற்குச் சமூக மனத் தடைகள் குறைவாக இருந்ததால், தம் கதைத்தலைவியரை அவ்வாறு காட்டிச் சமூக அனுதாபத்தினைப் பெறுதலும், விதவை மறுமணத்தை அதன் வழியே நியாயப்படுத்தலும் தொடக்ககால நாவலாசிரியர்களின் நோக்கமாக இருந்திருத்தல் கூடும். மறுமணம் தீர்வாகக் காட்டப்படும் **சுந்தரி, சந்திரிகையின் கதை** ஆகிய படைப்புக்களின் தலைவியர், கன்னி விதவையராகவே சித்திரிக்கப்பட்டிருப்பது, இக்காரணத்தினாலேதான். மேலும், பெண் கல்வி போதிய வளர்ச்சி பெறாத இந்நூற்றாண்டின் துவக்க நிலையில், அதனை விடவும் மறுமணமே சிக்கலுக்கு உகந்த தீர்வென அவற்றின் ஆசிரியர்கள் எண்ணியிருக்க வேண்டும். பெண் கல்வி வளர்ச்சி பெற்று, அதன் விளைவாகப் பல சமுதாய மாற்றங்களும் நிகழத் தொடங்கிய அடுத்த காலக் கட்டத்தில் எழுந்த நாவல்கள், விதவை மறுமணத்துடன், விதவையர் கல்வி கற்றுப் பொருளாதாரத் தற்சார்பு பெறுவதையும் சிக்கலின் தீர்வாகக் காட்டுகின்றன. ஆயின், இவ்விரு தீர்வுகளையுமே அவை,

---

40. இரா. தண்டாயுதம், **சமூக நாவல்கள்**, சு. வேங்கடராமன் (மொ. பெ. ஆ.) ப. 206.

41. நா. வானமாமலை, ''இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்'', **தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்**, தி. பாக்கியமுத்து (ப. ஆ.), ப. 17

42. **முத்துமீனாக்ஷி**, ஆசிரியர் முன்னுரை, ப. iii.

குறிக்கோள் நிலையில் இலட்சியப்படுத்திக் காட்டாமல், நடப்பியல் தடைகளுடனேயே சித்திரிக்கின்றன.

1930ஆம் ஆண்டுக்குப் பின். விதவையர் சிக்கல்களைக் கூறும் படைப்புக்களில், மறுமணத்தைத் தீர்வாகக் காட்டும் மூன்று நாவல்களில் (**உணர்ச்சி வெள்ளம், விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்**), ஒன்றில் மட்டுமே (**யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்**)—அதுவும் மிகுந்த போராட்டத்திற்குப் பின்பே—அது, வெற்றி பெறுகிறது. பிற இரு நாவல்களிலும், குடும்ப உறவினரின் எதிர்ப்புக்களோடு, துணிந்து மறுமணம் புரிய முன் வருவோரும் எவரும் இல்லாத நிலையில், மறுமணத் தீர்வு, வெறும் ஆலோசனை என்ற அளவிலேயே மடிந்து போகிறது.

வ. ரா.வின் **விஜயம்** நாவல், மறுமணத் தீர்வைக் கதைத் தலைவியின் எண்ண ஓட்டத்தின் வழியாகப் பெரிதும் வலியுறுத்திக் காட்டுகிறது. கல்வியும், தொழிற்பயிற்சியும் அளித்துப் பொருளாதாரத் தற்சார்பு பெற வைத்தாலும், வெறும் சோற்றுப் பிரச்சினையோடு விதவையின் வாழ்வு முடிந்துவிடுவதில்லை என்பதையும், மறுமணமும் அவளுக்குத் தேவை என்பதையும் சிந்திக்கிறாள் விஜயம்.[43] இவ்வாறு விஜயத்தின் சிந்தனையில் தீவிரமாகக் காட்டப்படும் மறுமணத் தீர்வு, நடைமுறையில் வெற்றி காணுவதாக, அந்நாவல் காட்டவில்லை. பிற பாத்திரங்களின் பரிந்துரையாகக்கூட அத்தீர்வு, நாவலில் இடம்பெறவில்லையென்பதைக் காணுகையில், அத்தகையதொரு தீர்வைப் பரிந்துரைக்கக்கூடத் தயங்கும் சமுதாயச் சூழலையே அந்நாவல் காட்டியிருக்கிறதெனஅறிய முடிகிறது. 1917ஆம் ஆண்டில் எழுதிய **சுந்தரி** நாவலில், விதவை மறுமணத்தைக் குறிக்கோள் நிலையில் தீர்வாக்கிக் காட்டிய ஆசிரியர் வ. ரா., 1944ஆம் ஆண்டில் வெளிவந்த இந்நாவலில் விதவை மறுமணத்தை ஏற்பதிலுள்ள நடைமுறைச் சிக்கல்களை வெளிப்படுத்தியுள்ளாரெனலாம்.

இதே காலக்கட்டத்தில், வை.மு. கோதைநாயகி எழுதியுள்ள இரு நாவல்களில், **உணர்ச்சி வெள்ளம்**, கன்னி விதவையின் மறுமணத்தை ஆதரித்தும், **அபராதி**, தாயானபின் ஒரு விதவை மறுமணம் செய்து கொள்வதை எதிர்த்தும் அமைந்திருப்பதற்கான

---

43. விஜயம், ப. 103.

காரணத்தை அபராதி நாவலில், அவரே ஒரு பாத்திரக் கூற்றாகப் பின்வருமாறு எடுத்துக் காட்டுகிறார்.

''விதவா விவாகத்தை நான் வேண்டாமென்று சொல்ல வில்லையப்பா!...பாவம்! உலகமறியாத கன்னி விதவைகள்... கணவனைச் சரியாகக் கூடப் பாராத பரிதாபகரமான பாவிய விதவைகள் எத்தனை பேர் இல்லை? அம்மாதிரி அப்பழுக்கற்ற பரிசுத்தமான ஒரு விதவையைச் செய்து கொள்ளக் கூடாதா?... இப்படித் தாயான விதவையை மணம் செய்வது அடுக்கவே அடுக்காது. இது, அவள் கடவுளிடத்திலும், சமூகத்திலும் செய்யும் மகத்தான விபச்சாரமேயன்றி வேறில்லை.''[44]

கோதை நாயகியின் **கலாநிலையம்** என்னும் மற்றொரு புதினம், தானே மனம் விரும்பிக் கைம்மையினை ஏற்கும் பெண்ணின் மன உறுதியைப் பாராட்டும் வகையில் அமைகிறது. எனவே இந்நாவலாசிரியரின் பார்வையில், பெண், தானே விரும்பி ஏற்கும் கைம்மை முதல் நிலையிலும், கன்னி விதவையின் மறுமணம் அடுத்த நிலையிலும், பிற விதவையரின் மறுமணம் எதிர்ப்பிற்குரியதாகவும் கொள்ளப்பட்டிருப்பது, புலனாகிறது.

விதவையர் சிக்கலுக்குரிய இரண்டாவது தீர்வாகிய பொருளா தாரத் தற்சார்புநிலை வெற்றி பெறுவதையும், 1930ஆம் ஆண்டிற்குப்பின் எழுந்த நாவல்கள் காட்டவில்லை. தொடக்கக் காலச் சூழலை விடவும், இக்காலக்கட்டத்தில், விதவையர்க்கான கல்வி, தொழில் வாய்ப்புக்கள் மிகுந்திருப்பதை நாவல்களின் இடையிடையே இடம்பெறும் விதவையர் விடுதிகள், தொழிற் கூடங்கள் ஆகியன பற்றிய குறிப்புக்கள் எடுத்துக் காட்டுகின்றன. இது, ஆரம்பக்கால நாவல்களில் இடம்பெற்றிராத ஒரு வளர்ச்சி நிலையெனினும், இதனைப் பயன்படுத்தி, அவற்றில் இடம் பெறும் விதவைப் பெண்கள், மறுவாழ்வு பெற இயலவில்லை. அவ்வாறான வாய்ப்பை அவர்கள் பெறுவதை அவர்தம் உறவினர் உடன்படாததால், அத்தீர்வு, வெறும் செய்தி என்ற அளவில் மட்டுமே அவற்றில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## 5. நாவல்களில் நடப்பியல் உண்மைகளின் நேரடி வெளிப்பாடு

இளமை மண, கைம்மை வழக்கங்களின் சமுதாயக் கடைப்பிடிப்பைக் கற்பனைக் கதையாகக் கூறுவதோடு அமை

44. அபராதி, ப. 69.

யாது, அவற்றுக்கு எதிராகச் சமூகத்தில் இயங்கி வந்த அமைப்புக் கள், அவற்றில் பங்கேற்ற மனிதர்கள் ஆகிய பல நடப்பியல் உண்மைகளை நேரடியாகப் பதிவு செய்யும் ஆவணங்களாகவும், விடுதலைக்கு முன் எழுந்த சில நாவல்கள் விளங்கியிருப்பதைக் காணமுடிகிறது.

**இயக்கங்கள் :** இளமை மண ஒழிப்பிலும், விதவை மறுமண ஆதரிப்பிலும் பிரம்ம சமாஜமும், ஆரிய சமாஜமும் கொண்டிருந்த பங்கு, **சந்திரிகையின் கதை, யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** ஆகிய நாவல்களில் இடம் பெற்றிருக்கிறது. **சந்திரிகையின் கதையில்,** விசாலாட்சி, பிரம்ம சமாஜ முறைப்படி, மறுமணம் செய்து கொள்கிறாள். பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், விதவா விவாக சகாய சபை, சுயமரியாதை இயக்கம் ஆகிய அமைப்புக்கள் பற்றிய செய்திகளை **யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** என்னும் நாவல் குறிப்பிடுகிறது.

**தலைவர்கள் :** சுப்பிரமணிய பாரதியார் வாழ்ந்த சம காலத்தில், சென்னையில், விதவை மறுமணச் சீர்திருத்தவாதி களாக விளங்கிய ஜி. சுப்பிரமணிய ஐயர், வீரேசலிங்கம் பந்துலு முதலியோர், கதைப்பாத்திரங்களாகவே இடம்பெற்று, விசா லாட்சியின் மறுமணத்திற்கு உதவுவோராய்ச் **சந்திரிகையின் கதை** நாவலில் காட்டப்பெறுகின்றனர்.

1912ஆம் ஆண்டு முதல், சென்னையில் விதவையர் விடுதி நடத்தி, அவர்கள் மறுவாழ்வு பெறக் குறிப்பிடத்தக்க வகையில் பணியாற்றிய சகோதரி சுப்புலட்சுமி என்பார் பற்றியும், அவர் நடத்திய விடுதி பற்றியும், **யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** நாவல் குறிப்பிடுகிறது. இந்நாவலின் இரண்டாவது பதிப்பிற்குச் சுப்புலட்சுமி அவர்களே முன்னுரை வழங்கியிருப்பதும் குறிப்பிடத் தக்கது.

**சட்டம் :** குழந்தை மணத்தடுப்புச் சட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டபொழுது, வைதிக மனப்பான்மையுடையவர்களிட மிருந்து கடும் எதிர்ப்புக்கள் எழுந்தன. இச்சட்டத்தால் இந்து மதமே அழிந்துவிட்டதெனக் கூக்குரலிட்டோரும் உண்டு.[45] இவ் வுண்மை நடப்பின் வெளிப்பாட்டை **விஜயம்** நாவல், கதைத் தலைவியின் நினைவோட்டமாகப் பின்வருமாறு காட்டுகிறது.

---

45. Radhakrishna Sharma, Nationalism, Social Reform and Indian Women, P. 204.

''பெண்களின் கலியாண வயதைப் பதினான்குக்காவது உயர்த்த வேண்டும் எனச் சங்கற்பம் கொண்டு சட்டமாக்கப் பாடுபட்ட ஹரிவிலாஸசாரதா என்ற உத்தமரை வைதிகப் போர்வையிலிருந்தவர்கள் எப்படியெல்லாமோ தாக்கினார்கள். ...ஸநாதன தர்மத்துக்குச் சாரதா சட்டத்தால் ஆபத்து வந்து விட்டது என்று சிலர் கூப்பாடு போட்டார்கள்.''[46]

**மதமாற்றங்கள் :** இளமை மண, கைம்மை வழக்கங்கள், இந்து சமயத்தில், கடுமையாக நிலவிய சாதிக் கட்டுத்திட்டங் களாலும், மரபுவழி மனப்பான்மைகளாலுமே அதிகமாகக் கடைப் பிடிக்கப்பட்டதால், இக்கட்டுப்பாடுகள் வரம்பு மீறிய நிலையில், இந்து மதத்திலிருந்து பிற மதங்களுக்கு மக்கள் மதம்மாறிச் செல்லக்கூடிய சூழல் இருந்ததையும் நாவல்கள் சுட்டிக் காட்டின.

**முத்துமீனாக்ஷி** நாவலில், விதவை மறுமணம் செய்து கொண்டதால், சமூகம், தங்களைச் சாதிவிலக்குச் செய்வதைக் கண்ட முத்துமீனாக்ஷியின் கணவன், ''நம்மை இத்தப் பாழுலகம் எப்பொழுதுமே இப்படிச் சதித்தால் கிறிஸ்தவர்களாகி விடுவதே உத்தமம்... ஹிந்துக்களது மூடத்தனமான பொறாமையால் கிறிஸ்தவ மதம் இலாபமடையட்டும்''[47] என்கிறான். அந்நாவ லைத் தொடர்ந்து 1907ஆம் ஆண்டில் வெளிவந்த **காமாக்ஷி** என்ற மற்றொரு நாவல், விதவை மறுமணம் மறுக்கப்பட்ட நிலையில், கதைத்தலைவன் அருணாசலம், தன் குடும்பத்துடன் கிறித்துவ மதத்தில் சேர்ந்து விடுவதாகவே காட்டுகிறது. விதவை நிலைக் கொடுமை தாளாத காரணத்தால், வங்காளப் பிரிவினையின் பொழுது, இசுலாமியச் சிப்பாய்கள், தங்களைக் கடத்திச் செல்வ தற்கு இந்து விதவையரே ஆதரவளித்தனர் என்னும் உண்மை யினை விஜயம் நாவல் சுட்டிக்காட்டுகிறது.[48]

இளமை மண, விதவைச் சிக்கல்கள் சார்ந்த சமகால நிகழ்வு களும், அவற்றில் பங்குகொண்ட மனிதர்களும் நாவல்களில் இடம்பெற்றிருப்பது, சமகாலச் சமுதாயச் சிக்கல்களில், படைப் பாளிகள் கொண்டிருந்த உள்ளார்ந்த ஈடுபாட்டையே வெளிக் காட்டுகிறது.

---

46. விஜயம், ப. 133

47. முத்துமீனாக்ஷி, ப. 88

48. விஜயம், ப. 150.

**முடிவுகள்**

இந்நூற்றாண்டின் தொடக்கக் காலச் சமுதாயத்தில், இளமை மணமும், கட்டாயக் கைம்மையும் மிகுந்திருந்ததால், அச்சூழலில் தோன்றிய பல நாவல்கள் அவ்விரு தீமைகளையும் ஒருங்கிணைத்து, அவற்றின் விளைவுகளையும் விரிவாகச் சித்திரித்துக் காட்டுகின்றன. அதனையடுத்த காலக்கட்டத்தில், இளமை மணம், ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டபின், அதன் விளைவாக எஞ்சிய விதவையர் துன்பங்களே சமுதாயத்தில் அதிகமாகக் காணப்பட்டதால், அப்பொழுது பிறந்த நாவல்களில் கைம்மைநிலைத் துன்பங்களே விரிவாக விளக்கப்படுகின்றன.

இளமைமண எதிர்ப்பு என்பது, காலத்தின் கட்டாயமாகவே அமைந்திருந்த சூழ்நிலையில் எழுதப்பட்ட தொடக்கக்கால நாவல்கள், அவ்வெதிர்ப்புணர்வைத் தீவிரமாக வெளிப்படுத்தியிருக்கின்றன. இளமை மணம் பெண்ணின் உடல்நலச் சீர்குலைவிற்குக் காரணமாவதை எடுத்துக்காட்டியும், கன்னி விதவையரின் அவலத்தை விரிவாக எடுத்துரைத்தும் சமூக விழிப்புணர்வைத் தூண்ட அப்படைப்புக்கள் முயன்றிருக்கின்றன.

கைம்மையின் விளைவாகப் பெண்ணுக்குப் பல கொடுமைகள் இழைக்கப்பட்டபோதும்—குறிப்பாக விதவைப் பெண்ணின் புறக்கோலம் சீரழிக்கப்படும் அவலத்தை, அவ்வழக்கம் மிகுதியாக நிலவிய அந்தண இனப் பின்னணி கொண்ட தொடக்கக்கால நாவல்கள், மிகுதியாகச் சித்திரிக்கின்றன. பொருளாதாரச் தற்சார்பற்ற விதவையர், உறவினர்க்குச் சுமையாகும் நிலை, முறையான மறுமணம் மறுக்கப்பட்ட நிலையில். முறைபிறழ்ந்த உறவுகொள்ளும் நிலைக்கும், சில வேளைகளில் தற்கொலை முயற்சிக்கும்கூட அவர்கள் துணிந்துவிடும் போக்கு ஆகியனவற்றையும் நாவல்கள் வெளிப்படுத்துகின்றன.

சமூக மனமாற்றமும், பெண்கல்வியும் இளமை மணத்திற்கான தீர்வுகள் என்றும், மறுமணமும், பொருளாதாரத் தற்சார்பு நிலைக்கு வழியமைத்தலும் விதவையர் துன்பங்களுக்கான தீர்வுகள் என்றும் நாவல்கள் காட்டுகின்றன. இவற்றுள், மறுமணத் தீர்வு வெற்றி பெறுவதைக் குறிக்கோள் நிலையில் தொடக்கக்கால நாவல்கள் சித்திரிக்க, நடைமுறையில் அத்தீர்வு வெற்றி பெறாமல் போவதை, நடப்பியல் நிலையில் அடுத்தடுத்து எழுந்த நாவல்கள் எடுத்துரைக்கின்றன.

# பெண் கல்வி

தமிழில் நாவல்கள் அரும்பத் தொடங்கிய பருவம், இந்தியா வில் பெண் கல்வியின் மறுமலர்ச்சிக்காகப் பல இயக்கங்கள் தோன்றி, வளர்ந்து எழுச்சி கொள்ள முற்பட்ட காலக்கட்டமாக வும் அமைந்தது. பெண் கல்வி வளர்ச்சி பெற்ற காலப்பகுதியை, ''1887ஆம் ஆண்டு முதல் 1897ஆம் ஆண்டு வரை 'முன்னோட்டக் காலம்' என்றும், 1911ஆம் ஆண்டு முதல் 1935ஆம் ஆண்டு வரை 'விரைவான வளர்ச்சியை நோக்கிய செயல்பாட்டுக் காலம்' என்றும், 1935ஆம் ஆண்டு முதல் 1963ஆம் ஆண்டு வரை 'வளர்ச்சியின் விளைவுகளோடு சமுதாயம் ஒத்திசைவு கொண்ட காலம்' என்றும் மூவகைப் போக்குகளுடைய தாய்ப் பகுக்கிறார், ஸ்ரீதேவி என்னும் சமுதாயவியலறிஞர்.[1] அதிலும் குறிப்பாக, 1879ஆம் ஆண்டு முதல் 1930ஆம் ஆண்டு வரையிலான தொடக்கக் காலக்கட்டத்தில், பெண்கல்வி பற்றிய சிந்தனை, சமுதாயத்தில் விரைவான எழுச்சி பெற்று மலரத் தொடங்கியிருக்கிறது. இளமை மணம், கைம்மை, மரபுவழிப்பட்ட மூடநம்பிக்கைகள் முதலிய தளைகள் மிகுந்திருந்த அக்காலச் சூழலில், அவற்றிலிருந்து விடுபட்டுப் பெண்கள், தம் சமூக நிலையை உயர்த்திக்கொள்வதற்கு ஏற்றதொரு வழியாகச் சீர்திருத்த உணர்வுடையோரும், கல்வியாளர்களும் பெண் கல்வி யைப் பரிந்துரைத்து அதன் தேவையை வற்புறுத்தி வந்தனர்.

இந்நூற்றாண்டின் இடையில் நாட்டில் விளைந்த தொழிற் புரட்சிகளாலும், பொருளாதார மாற்றங்களாலும் பெண், கல்வி கற்று வேலை பார்ப்பது என்பது, பொருளாதாரப் பயன்பாடு கருதிய ஓர் ஆதாரத் தேவையாக மாற்றம் பெற்றது. தொடர்ந்து விடுதலைக்குப் பின்னுள்ள தற்காலத்தில், பெண் கல்வி, முதிர் நிலையை எட்டியிருப்பதோடு, அதன் உடனிகழ்வாக அலுவல்

1. S. Shridevi, A Century of Indian Womanhood, p.87

மகளிர் சிக்கல் போன்ற புதிய விளைவுகள் நேர்ந்திருப்பதையும் காணமுடிகிறது.

**தமிழ் நாவல்களில் 'பெண்கல்வி'**

தமிழ்ச் சமுதாயத்தில் பெண்கல்விபற்றிய விழிப்புணர்ச்சி கால் கொள்ளத் தொடங்கியிருந்த ஆரம்பநிலையில் எழுதப்பட்ட பல நாவல்கள் பெண்கல்வி என்னும் கருப்பொருளை மிக விரிவாகச் சித்திரித்திருக்கின்றன. இக்காலக் கட்டத்தில் எழுந்த துப்பறியும் நாவல்களிலும் கூட முன்னுரையிலோ, கதையின் இடையிலோ பெண்கல்வியைப் பரிந்துரைக்கும் குறிப்பு காணப்படுகிறது.* கதைப் போக்குடன் இணைத்தோ, கதையுடன் ஒட்டாத துணுக்குச் செய்தியாகவோ பெண்கல்வியை வற்புறுத்துவ தென்பது, இப்பருவத்தில் எழுந்த புதினங்களின் தனிப்பட்ட போக்காக விளங்கியிருப்பதையே இது காட்டுகிறது.

1930ஆம் ஆண்டிற்குப் பின்னுள்ள காலக்கட்டத்தில், தொடக்கக் கால நாவல்களைப் போல் பெண்கல்வியையே முதன்மைக் கருப்பொருளாகக் கொண்டு எழுதப்பட்ட படைப்புக் கள் அரும்பவில்லை. பெண்கல்வி குறித்த சிந்தனை, பொருந்தா மணம் முதலிய பிற பிரச்சினைகளோடு இணைக்கப்பட்டு அவற்றுக்குரிய மாற்றாகவே காட்டப்படுகிறது. சமூகத்தில் பெண் கல்வி சார்ந்த விழிப்புணர்வு, ஓரளவுக்கு விரைவாகவே வளர்ச்சி பெறத் தொடங்கிவிட்ட காலச்சூழலில் பிறந்தவை இந்நாவல்கள் என்பது, இதற்குரிய காரணமாதல் கூடும். நாடு, விடுதலை பெற்ற பிறகு, பெண்கல்விக்காகப் போராட வேண்டியிருந்த நிலை பெரும்பாலும் மாறிவிட்டதால், அந்த அடிப்படையில் நாவல்களை எழுதும் போக்கும் மாற்றம் பெற்றது; மாறாகக் கல்வியினால் பெண் இன்று பெற்றிருக்கும் பல வகை மீட்சிகளை விடுதலைக்குப் பின்னெழுந்த நாவல்கள் வெளிப்படுத்துகின்றன. கல்வி பெற்று அறிவு முதிர்ந்தாலும் மீள இயலாதபடி பெண்ணைப் பிணித்திருக்கும் வரதட்சிணை முதலிய சமூகத் தளைகளையும் அவை எடுத்துக்காட்டுகின்றன. இன்றைய சூழலில், கல்வியால் பெண்ணின் தனித்தன்மை வளர்ச்சியடைகையில் அவளது குடும்ப வாழ்வில் விளையும் சிக்கல்கள், குடும்பப் பணிக்கும், புறவுலகக்

---

* 1913ஆம் ஆண்டில் முதற்பதிப்பாக வெளிவந்த டி.எஸ்.டி. சாமி என்பாரின் 'கருங்குயில் குன்றத்துக் கொலை' என்ற துப்பறியும் நாவலின் முன்னுரையில் (ப. 4) ஆசிரியர் கூற்றாகப் பெண்கல்வியின் தேவை வற்புறுத்தப்படுகிறது.

கடமைக்கும் இடையே நேரும் பங்குநிலை மோதல் (role-conflict), பெண்ணின் புறவுலகத் தொடர்புகள் மிகுவதால் அவள் கற்புக்கு நேரும் அபாயங்கள் ஆகிய புதிய பிரச்சினைகளையும் அவை சித்திரிக்கின்றன.

விடுதலைக்கு முன் எழுந்த தமிழ் நாவல்களில் பெண்கல்வி, சித்திரிக்கப்பட்டிருக்கும் போக்கினைக் கீழ்வருமாறு பகுத்துக் காணலாம்.

1. **பெண்கல்வி எதிர்ப்புச் சூழல்**
2. **பெண்கல்வியின் நோக்கங்கள்**
3. **பெண்கல்வியை ஆதரிப்போரும், எதிர்ப்போரும்.**

**பெண்கல்வி எதிர்ப்புச் சூழல்:** கி.பி. 18, 19ஆம் நூற்றாண்டுகளில் 'சதி', 'இளமை மணம்', 'கட்டாயக் கைம்மை' ஆகிய சமூகத் தீமைகள் மலிந்திருந்த சூழலில், பெண்கல்வி முழுவதுமாய்ப் புறக்கணிக்கப்பட்டு, அவளது சமூகநிலை கடுமையாக வீழ்ச்சியுற்றது. இக்காலக்கட்டத்தில் பெண்கல்விக்கு எதிராகச் சமூகத்தில் மரபுவழிப்பட்ட, மூடநம்பிக்கைகள் சார்ந்த பல கடும் கண்டனங்கள் எழுப்பப்பட்டு வந்தன. எழுதப் படிக்க அறிந்த பெண் விதவையாகிவிடுவாளென்றும்,[2] கல்வி கற்ற பெண், கள்ளக்காதல் கொள்ள வழியேற்பட்டு விடுமென்றும்[3] பலவகையான கருத்துக்கள் மக்களிடையே நிலவி வந்ததாகச் சமூகவியலறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். குறிப்பிட்ட அளவுக்கு மேல் பெண்ணுக்குக் கல்வியளித்தால், அவள் மரபுவழிப்பட்ட பண்புகளைத் துறந்து, தாயாகவும் மனைவியாகவும் ஆற்ற வேண்டிய குடும்பக் கடமைகளைப் புறக்கணித்துவிடுவாளோ என்ற அச்சமும் ஒருவகையில் பெண்கல்வி எதிர்க்கப்படக் காரணமாயிற்று. பெண், கல்வி கற்றுப் பொருளீட்டுதல் கூடும் என்ற சிந்தனையே அக்காலத்தில் அரும்பாததால் பொருளாதாரப் பயன்பாட்டுக்கு உதவாதென்றும் அது எதிர்க்கப்பட்டது.

மேற்குறித்த எதிர்ப்புச்சூழல், விடுதலைக்கு முந்தைய தமிழ் நாவல்களில் மிக விரிவாகக் காட்டப்படுகிறது.

---

2. Kamaladevi Chattopadhayay, Indian Women's Battle for Freedom, p. 68; Neera Desai, Woman in Modern India, p. 212
3. Tara Ali Baig (Ed.), Women of India, p. 157

பெண், கல்வி பெறுவதால் மரபுவழிப்பட்டவையாக அவளோடு ஒட்டிக்கொண்ட குடும்பக் கடமைகள் பாதிக்கப்பட்டு விடுமென்ற அச்சம், அதை ஒட்டிப் புகுத்தப்பட்ட மூடநம்பிக்கைகள், பெண்ணின் ஒழுக்கம் சிதைவதற்குக் கல்வி களம் வகுத்துத் தந்து விடுமோவென்ற தயக்கம், பெண்கல்வியின் பொருளாதாரப் பயன்பாடு ஏற்கப்படாத காலச் சூழல் ஆகிய காரணங்களால் பெண்கல்வி, சமுதாயத்தில் எதிர்க்கப்பட்டு வந்ததை நாவல்கள் சித்திரிக்கின்றன. மாதவையாவின் **முத்துமீனாக்ஷி** நாவல், இக் காரணங்களனைத்தையுமே ''பெண்களைக் கற்பித்தால் அவர்கள் கடிதமூலமாய்ச் சோர நாயகர்களைத் தேடுவார்களென்றும், தங்கள் கணவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கமாட்டார்களென்றும், வீட்டு வேலை செய்ய மாட்டார்களென்றும், உத்தியோகஞ் செய்யப் போகாதவர்களுக்குப் படிப்பு அவசியமில்லையென்றும்...''[4] தொகுத்துரைப்பதைக் காணலாம்.

**மரபுவழி எண்ணங்களும் மூடநம்பிக்கைகளும்:** வழிவழியாக இல்லத்தைப் பராமரிப்பவளாகவும், குடும்பக் கடமைகளைச் செம்மையாக ஆற்றுவதற்கு உரியவளாகவும் மட்டுமே கருதப்பட்டு வந்த பெண், கல்வி கற்கத் தொடங்கிவிட்டால் இல்லக் கடமைகள் பாதிக்கப்பட்டு விடுமென்ற அச்சம், பெண்கல்விக்கு எதிராகப் பல மூடநம்பிக்கைகளும் கண்டனக் கணைகளும் தோற்றுவிக்கப் பட அடிப்படையாயிற்று.

''பெண், அடிமைத்தனத்திலேயே ஆழ்த்தப்பட்டுக் கிடக்க வேண்டுமானால், அவள் அறியாமையுடையவளாக இருத்தல் அவசியமாயிற்று. எனவேதான் ஆசார மனப்போக்குடையவர்கள், மரபுப்போர்வையில் பெண்கல்விக்கு எதிராகக் கடும்போர் தொடுத்தனர்'' என இம்மனப் போக்கினைக் கமலாதேவி சட்டோபாத்தியாயா என்பவர் விளக்குகிறார்.[5]

இம்மரபு வழிக்கண்டனங்களை நாவல்களும் வெளிப்படுத்துகின்றன.

மாதவையாவின் **பத்மாவதி சரித்திரம்** நாவலில் பத்மாவதி பெறும் கல்விப் பயிற்சியை அவள் தாயே எதிர்க்கிறாள். தன் மகள் கல்வி கற்பதைவிடக் குடும்பக் கடமைகளைக் கற்றுக் கொண்டால் போதுமென்ற மனப்பான்மையில் ஊறியவளாக

---

4. முத்துமீனாக்ஷி ப. 18
5. Kamaladevi Chattopadhayay, Op. cit, p. 68

அவள் இருக்கிறாள். ''போ, படி, போ; காரியமொன்றும் தெரியவேண்டாம், படித்தால் போரும்; போ, படி, போ''[6] என்று பத்மாவதி படிப்பதை அவள் பழித்துரைக்கிறாள்.

பத்மாவதி, தன் கணவன் நாராயணனுக்குச் சமமாகக் கல்வி கற்று, அவனுடன் ஆங்கிலத்தில் பேசுவதையும், வெளியிடங்களுக்கும், விருந்துகளுக்கும் செல்வதையும் அவள் பெற்றோர் விரும்பாததுடன் அதனையே காரணமாகக் காட்டி மகள் வீட்டிலிருந்தே வெளியேறி விடுகின்றனர். சொந்த மகளாகவே இருந்தாலும் கூடக் கல்விப் பயிற்சியால் கணவனுக்கு நிகரான சமத்துவத்தை அவள் பெறுவதை, அக்காலச் சூழலில் பெற்றோர் விரும்பவில்லை என்பதையே இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டுகிறது.

பெண் கல்விக்குப் பெண்களே எதிர்ப்பாக இருந்த சூழலை **ஐயசீலன்** நாவலிலும் காணமுடிகிறது. தான் கல்வி கற்காததால் பல மூடப் பழக்கவழக்கங்களுக்கு அடிமையாகியுள்ள காமாட்சி என்னும் துணைப் பாத்திரத்தின் வழி நாவலின் தலைமைப் பாத்திரமாகிய சரஸ்வதியின் கல்விப் பயிற்சி பழிக்கப்படுகிறது. திருமணத்திற்குப் பிறகும் சரஸ்வதி கல்வி பயில்வது, மரபுக்கு மாறானதென்றும், படிக்கச் செல்வதனால் அவள் பல ஆசாரப் பழக்கங்களைக் கைநழுவ விட்டுவிட்டாளென்றும் காமாட்சி குற்றம் சாட்டுகிறாள்.[7]

**ஸ்ரீதரன்** என்ற நாவலில், கதைத்தலைவி சீதையின் உயர் கல்வியை அவள் பெற்றோர் ஆதரிக்கின்றனர்; ஆயின் பிற உறவினரும், அயலாரும் அதனை எதிர்க்கின்றனர். வீட்டு வேலைகள், குழந்தைப் பராமரிப்பு ஆகிய பணிகள், கல்விப் பயிற்சியால் தடைப்படக் கூடுமென அவர்கள் கொண்டிருந்த அச்சம், ''பெண்கள் எப்போ படிக்கிறதுன்னு ஏற்பட்டுதோ அப்போ கலியாணம் பண்ணிக்கொள்ளப்படாது. எப்போ கலியாணம் ஆச்சோ அப்போ வேலைக்குப் போகக் கூடாது... கூழுக்கும் ஆசை, மீசைக்குமாசை எப்படி முடியும்''[8] என்று நாவலில் ஓர் உரையாடலாக வெளிப்படுகிறது.

---

6. பத்மாவதி சரித்திரம், ப. 28
7. ஐயசீலன், பக். 264, 267
8. ஸ்ரீதரன், ப. 37

மனைவியாகவும், தாயாகவும் ஒரு பெண் ஆற்றவேண்டிய கடமைகளுக்கும், வெளியிடங்களுக்குச் சென்று அலுவல் புரிய வேண்டிய நிலைக்கும் ஏற்படும் பங்குநிலை மோதல் **(role conflict)** சமகால நாவல்களில் இடம்பெறும் பிரச்சினையாகும். அது குறித்த சிந்தனை, தமிழ் நாவல்களின் தொடக்க நிலையி லேயே முளைவிடத் தொடங்கியிருப்பதை ஸ்ரீதரன் நாவல் காட்டு கிறது.

**பெண்ணின் ஒழுக்கம் சிதைவதான அச்சம் :** குடும்பப் பெண் களுக்குக் கல்விப் பயிற்சி மறுக்கப்பட்டு வந்த காலக்கட்டத்தில் பொதுமகளிர் எழுதப்படிக்க அறிந்தவராகவும், கலைகளில் தேர்ச்சியுற்றும் விளங்கினரென்றும், இந்நிலையைத் தவறாகப் புரிந்துகொண்ட பாமர மக்கள், கல்வி கற்றாலே பெண்கள் ஒழுக்கம் குலைந்து சீர்கெட்டு விடுவரென அஞ்சத் தொடங்கின ரென்றும் சமூகவியலறிஞர் ஒருவர் குறிப்பிடுகிறார்.[9] இதுபற் றியே ''பெண்ணுக்குக் கல்வியளிப்பதென்பது, அவள் கையில் கூர்மையானதொரு கத்தியைக் கொடுப்பதற்கு ஒக்கும்'' என்ற பழமொழியும் வழங்கி வந்திருக்கிறது.[10] இவ்வாறான சமூக மனப்போக்கினைப் ''படித்த பெண்களெல்லாம் சோர புருஷர் களுக்குக் கடிதமெழுதுவார்கள்; ஆகையால் பெண்கள் படிக்க லாகாது''[11] என்று உரையாடல் வழியாகக் குறிப்பிடும் **பத்மாவதி சரித்திரம்**, அதனைக் கதை நிகழ்ச்சியாகவும் அமைத்துக் காட்டு கிறது. கோபாலனின் தமக்கையான சாவித்திரி கல்வி கற்கும் பொழுது, அதனைக் காரணமாகக் கொண்டு, பக்கத்து வீட்டி லுள்ள நாகமையர் என்பவர், புத்தகத்தினுள் கடிதம் வைத்து அவளுக்கு அனுப்புகிறார். தன் தமையனின் துணையால் சாவித்திரி அவரிடமிருந்து தப்பித்துக் கொள்கிறாள். பெண் கல்வி யின் தேவையைத் தம் புதினங்களில் வன்மையாக வற்புறுத்தி யுள்ள மாதவையா, அதன் வழி அக்காலத்தில் நேர்ந்துவந்த அபாயத்தையும் இவ்வாறு சுட்டியிருத்தல் குறிப்பிடத் தக்க தாகும்.

---

9. A. S. Altekar, The Position of Women in Hindu Civilization, p. 24
10. Neera Desai, Op. cit. p. 212
11. பத்மாவதி சரித்திரம், ப. 53

மாதவையாவின் பிறிதொரு படைப்பாகிய **முத்துமீனாக்ஷி** என்னும் நாவலில், கதைத்தலைவியின் தந்தை, பெண்கள் கல்வி கற்றாலே கெட்டுப்போய் விடுவார்களென்ற எண்ணம் கொண்டவ ராக இருக்கிறார். ஓரளவு எழுதப்படிக்க அறிந்திருந்ததனாலேயே தன் இளைய மனைவி, தன்னுடன் குடும்பம் நடத்தாமல் விலகிப் போய்விட்டதாக அவர் நினைக்கிறார். அடிப்படையில் பெண் கல்வியின் மீது இவ்வாறான வெறுப்புணர்ச்சியைக் கொண்டிருப்ப தனால், தன் மகள் முத்துமீனாக்ஷி படிக்க, எழுதப் பழகுவதை அறிந்ததும் அவர் சினம் கொள்கிறார். ''முத்துவை யார் வாசிக்கச் சொன்னது? பெண்கள் வாசித்தால் கெட்டுப் போவார் கள். அவள் வாசிப்பதை உடனே நிறுத்தவும்''[12] என்று மக னுக்குக் கடிதமும் எழுதுகிறார்.

வ. ரா. வின் **விஜயம்** என்ற நாவலில் இடம்பெறும் விஜயத் தின் தாத்தாவும் இவ்வகையான அச்சம் கொண்டவரே. கல்வி கற்றுத் தொழில் புரிந்து தனித்து வாழும் பெண்கள் பற்றி அக்காலச் சமூகத்தில் நிலவிய தவறான எண்ணங்களை, ''தனி யாக ஜீவனோபாயம் தேடும் மருத்துவச்சிகளும், வாத்தியார் அம்மாக்களும் கெட்டுப் போகிறார்கள் என்ற அபகீர்த்தி உலகத் தில் பரவியிருப்பது உனக்குத் தெரியாதா?''[13] என்று அவர் கூறுவதன் வழி வெளிப்படுத்துகிறார் வ. ரா. தன் பேத்தி விதவையான பின்பு கல்வியைத் தொடர்வதை இக்காரணத்தினா லேயே அவர் தடுத்து விடுகிறார்.

மேற்குறித்த நாவல்கள், சமூகத்தில் பெண்கல்விக்கு நிலவிய எதிர்ப்பைச் சுட்டிக் காட்டியபோதும், அது தவறென்று அறி வுறுத்திப் பெண்கல்வியைப் பரிந்துரைக்கவே முயல்கின்றன. ஆயின் இதே காலச் சூழலில் எழுதப்பட்ட **தீனதயாளு**, **நளின சுந்தரி**, **வீரவஸந்தா** ஆகிய மூன்று படைப்புக்களும் பெண் கல்வியை எதிர்க்கும் போக்கிலேயே அவ்வப் படைப்பாளிகளால் உருவாக்கப்பட்டவை. இம்மூன்றுமே கல்வியால் பெண்ணின் ஒழுக்கம் சிதைந்து போவதாய்க் காட்டி அதனை எதிர்த்திருப் பதைக் காணலாம்.

**தீனதயாளு** நாவலில், மேற்குறித்த எதிர்ப்பைக் காட்டுவதற் கென்றே படைத்துக் கொள்ளப்பட்ட ஒரு துணைப் பாத்திரம்,

---

12. **முத்துமீனாக்ஷி**, ப. 26
13. **விஜயம்**, ப. 101

மாணிக்கம் என்ற பெண். கல்வியினால் உயர்நிலை அடைந்த அவள், தயக்கமின்றி ஆண்களுடன் உரையாடுவதையும், விவாதிப்பதையும் விவரிக்கும் நாவலாசிரியர் நடேச சாஸ்திரி, கல்வி அவளுடைய மென்மைப் பண்புகளை மாய்த்துவிட்டதாகத் தன் கூற்றாகவே பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

''அவளுக்குப் படிப்பு வெகு அதிகமாகையால் வெட்கமென்பது கொஞ்சமேனுமில்லை.''[14] ஆண்களோடு பேசுகையில் அவர்களை இயல்பாகத் தொட்டுப்பேசும் அவளது நடத்தையைத் தாசியுடன் ஒப்பிட்டுப் பிற பெண்கள் உரையாடுவதாகவும் [15] அவர் நாவலில் ஒரு காட்சியை அமைத்திருப்பதைக் காணுகையில், பெண்கல்வி குறித்த அவரது மனப்போக்கு எவ்வாறிருந்தது என்பதை உணர முடிகிறது.

சுப்பிரமணிய சிவாவின் **நளினசுந்தரி** என்னும் நாவலும், அதன் கதைத்தலைவியாகிய நளினசுந்தரி பெறும் கல்வி, ஆண் நண்பர்களுடன் சுதந்திரமாகப் பழகவும், அவர்களுடன் முறையற்ற தொடர்பு கொள்ளவும் அவளுக்கு வழியமைத்துத் தந்ததாய்க் கூறிப் பெண்கல்வியினை எதிர்க்கிறது.

முன்னர்க் குறிப்பிட்ட இரு படைப்புக்களையும் போல வை. மு. கோதைநாயகியின் **வீரவஸந்தா** என்ற நாவல், பெண் கல்வியை முழுமையாக எதிர்க்கவில்லை. குறிப்பிட்ட ஓர் எல்லைக்கு மேல் பெண் பெறும் உயர்கல்வி, மரபுவழிப் பண்புகளைச் சிதைத்து, அவளைத் தவறான போக்கில் செலுத்தி விடுமென்பதை மட்டுமே அது எடுத்துக் காட்டுகிறது. அந்நாவலின் தலைவனாகிய வீரநாதனின் முதல் இரு மனைவியரும் உயர்கல்வி பெற்றவர்கள். அவர்களுள் முதல் மனைவி, திருமணத்திற்கு முன்பே கருவுற்றிருப்பது, மணமேடையில் வெளிப்படுகிறது. இரண்டாவது மனைவி, தன் நாகரிகப் போக்கினால் கணவனையும், அவன் உறவினர்களையும் மதிக்காமல் வீட்டை விட்டு வெளியேறி, மற்றொருவனுடன் வெளிநாடு சென்று விடுகிறாள். அடிப்படைக் கல்வி மட்டுமே பெற்றிருந்த மூன்றாவது மனைவி, குடும்ப அமைப்பிற்கு இணங்கி அகந்தையின்றி நடப்பவளாகக் காட்டப்படுகிறாள். நாவலின் இறுதியில், முதல் இரு மனைவியரும், அதிகப் படிப்பினால் விளைந்த செருக்குணர்வே தங்கள் தவறான போக்கிற்குக் காரணமெனக் கடிதம் எழுதி

14. தீனதயாளு, ப. 75
15. மேலது, ப. 76

வைத்துவிட்டுத் தற்கொலை செய்து கொள்கின்றனர். உயர் கல்வியால் பெண்ணுக்குச் செருக்கும், ஒழுக்கக்கேடும் வாய்க்கு மெனத் தாம் கூற எண்ணிய கருத்துக்கு அழுத்தம் சேர்க்கவே இவ்வாறானதோர் அவல முடிவை, ஆசிரியர் வேண்டுமென்றே அமைத்துள்ளாரெனலாம்.

**பொருட்பயன்பாடு ஏற்கப்படாமை :** விடுதலைக்கு முன் னெழுந்த நாவல்கள், பெண்கள் வெளியிடங்களுக்குச் சென்று அலுவல் புரியும் போக்கு, அதிகமாகப் பரவாத காலக்கட்டத்தில் எழுந்தவை. பெண், கல்வி கற்று, அதன் துணையுடன் பொரு ளீட்டக் கூடுமென்ற சிந்தனையே அக்காலச் சமுதாயத்தால் வரவேற்கப்படவில்லை. அவ்வாறான எண்ணம் எழுந்த சூழல் களிலும் கூட அது எதிர்க்கப்பட்டிருப்பதையே காணமுடிகிறது. எழுதப்படிக்க அறிந்த பெண், விதவையாகி விடுவாளென அன்றைய சமூகத்தில் நிலவிய மூடநம்பிக்கைக்கும் கூட மேற் குறித்த மனப்பான்மையே காரணம் என்கிறார் மார்கிரெட் கோர்மெக்.[16] கணவன் உயிருடனிருக்கும்பொழுதோ அல்லது திருமணத்திற்கு முன்போ கல்வி கற்றால், ஒரு பெண், தன்னை விதவை நிலைக்கு ஆயத்தப்படுத்திக் கொள்கிறாளென்று சமூகம் நினைத்ததென்றும், அக்காரணத்தினாலேயே அதனை எதிர்த் தது என்றும் அவர் மேலும் விளக்கம் தருகிறார்.[17] தன் கல்வி யால் பெண் பொருளீட்டும் நிலையினை அடைவதை ஆண்கள் தம் பெருமைக்குக் குறைவானதென்றும் கருதினர். இவ்வகையி லான பெண்கல்வி எதிர்ப்பு நாவல்களிலும் இடம் பெற்றிருக் கிறது.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், கோபாலனும், நாராயண னும் உரையாடுகையில், ''பணத்தின் பொருட்டும், உத்தி யோகத்தின் பொருட்டுந்தான் முக்காலேயரைக்கால்வாசிப் பெயர்கள் படிக்கிறார்கள். அதனால்தான் பெண்கள் படிப்பது அனாவசியமென்று ஏற்பட்டது... வித்தை கற்பதற்கு முக்கியமான காரணம் மனத்தில் அழுந்தினாலொழியப் பெண்களும் படிக்க வேண்டியதின் அவசியம் தோன்றமாட்டாது''[18] என இக் கருத்தை வெளிப்படுத்துகிறார் மாதவையா.

---

16. Margaret cormack, The Hindu Women, p. 164
17. Ibid.
18. பத்மாவதி சரித்திரம், பக். 52, 53

பத்மாவதி ஆர்வத்துடன் படிப்பதை, ''போ... சீக்கிரம் படிச்சு பி. ஏ., பரீக்ஷை கொடுக்க வேணும். இந்த ஜில்லா 'கல்கட்டர்' வேலை காலியாகப் போகிறதாம். உனக்குத்தான் கிடைக்கும்''[19] என்று அவள் தாயே கிண்டல் செய்கிறாள்.

பெண்கல்வியால் பொருட்பயன்பாடு விளைவதற்குரிய சூழல் களிலும்கூட அது எதிர்க்கப்படுகிறது. **சுந்தரி, விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?** ஆகிய நாவல்களில் பொருளாதாரத் தற்சார்பை நோக்கமாகக்கொண்டு விதவைப் பெண்கள் கல்வி பெறுவதை, அவர்களின் உறவினர் உடன்படாமல் எதிர்ப்புக் காட்டுகின்றனர்.

''சுப்பராயருக்குப் பெண்பிள்ளைகள் படிப்பதில் இஷ்ட மில்லை. இவர்கள் என்ன வேலைக்குப் போகப் போகிறார்கள்? வக்கீல் வேலையா, வைத்திய வேலையா, கவர்னர் வேலையா? ஒன்றுக்கும் தோதில்லாத பொம்மைகள்''[20] என்று சுந்தரியின் தந்தை பெண்கல்வியை இழிவாய்க் கருதுவதைச் **சுந்தரி** நாவல் காட்டுகிறது. பிச்சை எடுத்துப் பிழைத்தாலும் பிழைக்கலாமே யன்றி விஜயம் கல்வி கற்று, அதனால் பிழைக்க வேண்டாமென அவளின் தாத்தா போலிக்கௌரவம் பாராட்டுகிறார். **யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** என்ற நாவலிலும், தன் விதவைப்பெண் கல்வியும், தொழிற்பயிற்சியும் பெறுவதை அவள் தந்தை தடுத்து விடுகிறார்.

பெண்கல்வியின் பொருளாதாரப் பயன்பாடு, சமூகத்தால் முழுமையாக உணரப்படாத காலச் சூழலையே நாவல்கள் வழி அறிய முடிகிறது.

**பெண்கல்வியின் நோக்கங்கள் :** சமுதாயத்தில் பெண்கல்வி எதிர்க்கப்பட்டதற்காக நடப்பியற் சூழல்களைச் சித்திரிப்பதோடு, பெண்கல்வியின் தேவையினைக் கதைப்போக்கில் வற்புறுத்தும் கருத்துப் புலப்பாட்டுக் கருவிகளாகவும் நாவல்கள் செயல்பட்டிருக் கின்றன. படைப்பாளியே பெண்கல்வியை எதிர்க்கும் போக்கி லமைந்த நாவல்கள் நீங்கலாகப் பிற படைப்புக்கள் அனைத்தும் பெண்கல்வியின் நோக்கங்களைச் சித்திரிக்கத் தவறவில்லை.

---

19. மேலது, ப. 28
20. சுந்தரி, ப. 97

குடும்ப அமைப்பினுள், பெண் செம்மையாகச் செயல்பட உதவியாகவும், இளமை மணம், கைம்மை முதலிய சமூகத் தளை களிலிருந்து விடுபட்டுத் தன் சமூக மதிப்பை உயர்த்திக்கொள்ள ஒரு வழியாகவும், பொருளாதாரப் பயன்பாடு கருதியும் நாவல்கள் பெண்கல்வியைப் பரிந்துரைத்திருப்பதைக் காணமுடிகிறது. பெண் கல்வியால் இந்நோக்கங்கள் நிறைவேறுவதை உடன்பாடாகவும், பெண்கல்வி மறுப்பால் அவை நிறைவேறாததை எதிர்மறை யாகவும் என இருவகைகளிலும் அவை சித்திரித்திருப்பதைக் காணமுடிகிறது.

**குடும்ப அமைப்பில் செம்மையான செயல்பாடு :** இந்த நூற்றாண்டின் தொடகத்தில், சீர்திருத்தவாதிகளால் பெண்கல்வி பரிந்துரைக்கப்பட்டபோது, குடும்ப வாழ்வின் தரத்தை உயர்த்தும் ஒரு கருவியாக மட்டுமே அது அறிவுறுத்தப்பட்டு வந்ததென்பர். பெண்கல்வியால் குடும்ப வாழ்வின் கட்டுக்கோப்பு குலைந்து விடு மென்ற அச்சம், அன்றைய சமூகத்தில் அதிகமாக நிலவியதே இதற்குக் காரணமெனலாம். எனவே பெண்கள் கல்வி பெறுவது, ஆண்களுடன் போட்டி போடவோ அல்லது அவர்களையும், குடும்ப அமைப்பையும் எதிர்க்கவோ அல்ல என்று சீர்திருத்த வாதிகள் சமூகத்திற்கு உறுதியளிக்க வேண்டியதாயிற்று. "கல்வி யறிவில்லாத பெண்கள், வம்புச் சண்டைகளிலும், பயனற்ற பொழுதுபோக்குகளிலும் ஈடுபடுகிறார்கள். இது அவர்களது ஆளுமை வளர்ச்சியைப் பாதித்து, அறிவுத்திறனைக் குறுக்கி விடுவதால் அவர்களின் குடும்ப வாழ்வும் பாதிக்கப்பட்டுவிடுகிறது. எனவே நல்லதொரு தாயாக, வீட்டைப் பொறுப்பாகப் பரா மரிக்கும் அறிவாளியான பெண்ணாகக் கணவனது சமூக நடவடிக் கையில் உதவும் துணையாகப் பெண்ணை உருவாக்கக் கல்வி தேவை"[21] என்பதை மக்கட் சமுதாயத்திற்கு அவர்கள் பக்குவ மாக எடுத்துக் கூறினர். குடும்ப அமைப்பைத் தாண்டி வளர் வதற்கும், கல்வி ஒரு பெண்ணுக்கு உதவ முடியும் என்பதை அவர்கள் உணர்ந்திருந்தபோதும், சமூக எதிர்ப்புக்கு அஞ்சி, அதனைக் கூற முயலவில்லை.

தமிழ்நாவல்களின் தொடக்க நிலையில், அவற்றிலும் இந் நோக்கமே பெரிதும் வற்புறுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

---

21. Usha Nayar, "Education and Employment for Women in India", Mother Teresa Women's University Publication II, p. 53

ராஜமையரின் **கமலாம்பாள் சரித்திரம்,** குடும்ப அமைப்பில் செம்மையாகச் செயல்படப் பெண்ணுக்குக் கல்வி உதவுவதை விரிவாக விளக்குகிறது. இந்நாவலின் தலைவி கமலாம்பாள், மகள் லக்ஷ்மி இருவருமே கல்வியறிவுடையவர்கள். நாவலின் இறுதியில் தன்மீது சுமத்தப்படும் பழியினையும், கணவனது பிரிவையும் பொறுத்துக்கொண்டு போராடும் மன உரத்தைக் கல்வியே கமலாம்பாளுக்குத் தருகிறது. அவளின் கணவர் முத்துச் சாமி ஐயரின் தம்பி மனைவியாகிய பொன்னம்மாளின் பாத்திரத்தைக் கமலாம்பாளுக்கு நேர்மாறாக முரண்படச் சித்திரிக்கிறார் நாவலாசிரியர். பொன்னம்மாள் அரைகுறைப் படிப்புடையவள்; அதனாலேயே பண்படாத உள்ளம் கொண்டவளாகப் பொறாமையோடு கமலாம்பாளின் குடும்பத்திற்கு அவள் கேடு விளைவிப்பதாக நாவல் சித்திரிக்கிறது.

பொன்னம்மாளுக்குத் துணையாய் அமையும் 'வம்பர் மகாசபை' என்னும் பெண்கள் கூட்டம் குறித்த வருணனை, அக்காலக் கிராமங்களில் படிப்பறிவில்லாத பெண்களின் ஒரே பொழுதுபோக்காக அமைந்த வம்புபேசும் இயல்பினை, நடப்பியல் போக்கில் படம்பிடித்துக்காட்டுகிறது. ''பெண்களுக்குக் கல்வி அறிவு ஒரு சிறந்த அணிகலமும், பலமுமாகும் என்பதைக் கமலாம்பாள் மூலமாகவும் லக்ஷ்மி மூலமாகவும் ஆசிரியர் வற்புறுத்துகிறார்... அதே சமயம் பெண்களுக்குக் கல்வி இல்லாவிட்டால்என்னவாகும் என்பதைச் சிறுகுளம் வம்பர் சபை மூலமாக ஆசிரியர் உணர்த்துகிறார்''[22] என இக் கருத்தினையே தி. பாக்கியமுத்துவும் குறிப்பிடுகிறார்.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில் பெண்கல்வியின் தீவிர ஆதரவாளனாகக் காட்டப்படும் நாராயணன், தன் மனைவி உயர்கல்வி பயின்று, பொருளாதார ரீதியாகத் தனக்கு உதவ வேண்டுமென எதிர்பார்க்கவில்லை. தன்னோடு அறிவுத் தோழமை கொண்டு, தன் இரசனைக்கு இயைந்தவளாக விளங்க உதவியாகவும், வீட்டு நிர்வாகத்தில் தேர்ச்சி பெறுவதற்காகவும் மட்டுமே பத்மாவதிக்கு அவன் கல்விப் பயிற்சி யளிக்கிறான்.

''அவள் சாஸ்திரங்களில் தேறவேண்டுமென்று அவன் சிறிதும் விரும்பவில்லை. கிரக சம்ரக்ஷணைக்கும், தன்னுடைய

22. தி. பாக்கியமுத்து, ''தமிழ்ப் புனைகதைகளில் பெண்கள் (1875-1925)'', **இலக்கியத்தில் பெண்கள்,** தி. பாக்கியமுத்து (ப. ஆ.) பக். 37, 38

சரீர சௌக்கியத்துக்கும், பால போஷணைக்கும் வேண்டிய அளவு கொஞ்சம் கணக்கும், கிரகதர்ம சாஸ்திரமும், சுகாதார முறையும் தெரிந்து கொள்வதுடன்; புத்தி விருத்தியின் பொருட்டு நல்ல காவியங்களையும், நாடகங்களையும், சரித்திரங்களையும் கதைகளையும் கற்றுணர வல்ல சக்தியும் ஏற்பட்டாற் போது மென்பது அவன் எண்ணம்' '[23] என்ற ஆசிரியரின் கூற்று, நாராயணனின் நோக்கம் இன்னதென்பதைப் புலப்படுத்தி விடுகிறது.

இதற்கு நேர்மாறாக, நாராயணனின் நண்பன் கோபாலனின் மனைவி கல்யாணி, தான் கல்வி கற்க மறுப்பதோடு, தன் கணவனின் படிப்புக்கும் இடையூறாக அமைகிறாள். ' 'புருஷன் மட்டும் படித்திருந்தால் தன் மூடத்தனமான மனைவியுடன் அவன் என்ன சிநேகத்தையும், சுகத்தையும் அனுபவிக்கக் கூடும்?' '[24] என அவள் கணவன் அவளைக் குற்றம் சாட்டுவது, அக்காலப் பெண்கல்வி எதை நோக்கியதாக இருந்ததென்பதைத் தெளிவு படுத்துகிறது.

கல்வியறிவில்லாத பெண்கள், மூடநம்பிக்கைகளுக்கு ஆட் பட்டுப் பயனற்ற வம்புப்பேச்சிலும், சண்டையிலும் காலம் கழிப்ப தைக் கமலாம்பாள் சரித்திரம் போலவே பத்மாவதி சரித்திரம் நாவலும் காட்டுகிறது.[25]

குடும்ப அமைப்பிற்குள் மட்டுமே இயங்கும் பெண்களுக்கு, வம்புப் பேச்சுக்களைத் தவிர்க்க உதவும் பயனுள்ள ஒரு மாற்று வழியாகக் கல்வி அமைய முடியுமென்பதை முத்துமீனாக்ஷி நாவ லும் சுட்டுகிறது. தன் அண்ணனின் துணையுடன் முத்துமீனாக்ஷி கல்வி பயிலுகையில், தன் நேரத்தை அவளால் பயனுள்ளவகையில் கழிக்க முடிகிறது. கணவனது எதிர்ப்பாலும், சுற்றியுள்ள பெண் களின் கேலியாலும் அவள் படிப்பைக் கைவிட நேர்கிறது. அதன் பின்னர் பொழுதைக் கழிக்க வழியின்றி, ஊர்வம்பு, தெருச் சண்டை ஆகியவற்றிலும், ஆபாசப் பாடல்கள் புனைவதிலும் முனைந்து ஈடுபட்டு விடுகிறாள்.

---

23. பத்மாவதி சரித்திரம், ப. 186
24. மேலது, ப. 54
25. மேலது, பக். 289-292

''...புஸ்தகக் கடையைக் கட்டிவிட்டு, வெகு சீக்கிரத்தில் ஊர்வம்பை அளப்பதில் ஒருவரும் இணையெதிரில்லை என்று சொல்லும்படி பேரெடுத்துவிட்டேன்''[26] என்று இவ்வுண்மையை அவளது கூற்றாகவே நாவலாசிரியர் வெளிப்படுத்துகிறார்.

**சமூகத்தளை மீட்சிக்குக் கருவியாதல் :** இந்திய நாட்டைப் பொறுத்தவரை, இளமை மணம் முதலிய சமூகத் தீமைகள், பெண் கல்வியின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் காரணிகளாக அமைந்திருக்கின்றன. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில், பெண் கல்வி, ஓரளவுக்கு ஏற்கப்படத் தொடங்கியிருந்த நிலையிலும்கூட, இளமை மணம், பெண்கள் பெறும் கல்வி வளர்ச்சியைப் பாதித்திருக்கிறது. 80 விழுக்காட்டிற்கும் மேற்பட்ட பெண்கள், தொடக்கக் கல்வியைக்கூட முடிக்க இயலாமல் பள்ளிகளை விட்டு விலகியதற்கு, இக்காலக் கட்டத்தில் இளமை மணமே காரணமாக அமைந்தது.[27] இவ்வாறான சமூகத் தளைகளிலிருந்து விடுபடுவதற்காகவே சீர்திருத்தவாதிகள், பெண் கல்வியை மிகுதியும் பரிந்துரைத்தனர். இந்நோக்கம், தமிழில் நாவல்கள் தோன்றத் தொடங்கிய காலச் சூழலில் மிகக் குறைவாகவே இடம் பெற்றிருக்கிறது. இளமை மணத்தின் விளைவாகச் சமூகத்தில் விதவையரின் எண்ணிக்கை மிகுந்து, அவர்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு கூறியாக வேண்டிய அடுத்த நிலை ஏற்பட்டபொழுது, இந்நோக்கம், நாவல்களில் மிகுதியாக இடம்பெறத் தொடங்குகிறது.

இளமை மணம், பெண் கல்விக்கு இடையூறாவதைப் **பத்மாவதி சரித்திரம்** வெளிப்படையாகவே குறிப்பிடுகிறது. ''பத்திலும், பதினைந்திலும் பிள்ளைகளும் பெற்றுக்கொண்டு, வீட்டு வேலைகளும் செய்துகொண்டு நாங்கள் வாசிப்பதெப்படி''[28] என்று கேட்கிறாள் பத்மாவதி. ஒரே நேரத்தில் இளமை மணத்தையும் ஒழித்துப் பெண் கல்வியையும் வளர்ப்பதே இதற்குரிய தீர்வு என்று நாவலில் பிரச்சாரப் போக்கிலான ஒரு கருத்தும் இடம் பெற்றிருக்கிறது.[29] எனினும் நடப்பியலில் இத்தீர்வு சாத்தியமாகிறதா என்பதை நாவலில் இடம்பெறும் நிகழ்ச்சியின் வழியாக நாவலாசிரியர் காட்டவில்லை என்பது, குறிப்பிடத்தக்கது.

---

26. முத்துமீனாக்ஷி, ப. 48
27. Kamaladevi Chattoyadhayay, Op. cit, p. 74
28. பத்மாவதி சரித்திரம், ப. 287
29. மேலது, ப. 288

இதே படைப்பில், பொருந்தா மணத்தளையால் அவதியுறும் கோபாலனின் தமக்கை சாவித்திரிக்கும்கூடக் கல்வி, ஒரு பயனுள்ள பொழுது போக்காக மட்டுமே அமைகிறதேயன்றித் தளைமீட்சிக்கு உதவுவதாகக் காட்டப்படவில்லை. ஆயின், பெண்ணின் சமூக மதிப்பை உயர்த்தும் கருவியாகக் கல்வி அமைந்திருப்பதைப் **பத்மாவதி சரித்திரம்** எடுத்துக் காட்டுகிறது. பொதுவாகச் சமூகத்தில் ஒரு பெண்ணின் மதிப்பு, அவள் கணவனின் கல்வி, பொருளாதாரத் தகுதி ஆகியவற்றைச் சார்ந்ததாகவே எடைபோடப்படுவதையும், அவளுக்கென்று தனிச் சமூக மதிப்பு இல்லாததையும் கண்டு வருந்தும் நாராயணன், கல்வி கற்றுத் தேர்ந்த தன் மனைவியைச் சம்மதிப்புடன் நடத்துகிறான். இன்றியமையாத பிரச்சினைகளில் அவளிடம் ஆலோசனை கேட்கிறான். அறிவுத் தேர்ச்சியால் பெண்ணுக்கு ஓரளவு சமத்துவம் கிடைப்பதைக் காட்டவே இந்நிகழ்ச்சிகளை ஆசிரியர் புனைந்துள்ளாரெனலாம்.

**ஜயசீலன்** நாவலின் ஆசிரியராகிய மீனாக்ஷிசுந்தரம்மாள், இளமை மணம் முதலிய சமூகத் தீமைகளையும், பெண்களின் சமூக நிலை தாழ்ந்ததற்கான காரணங்களையும் தம் படைப்பில் விளக்கிக் கூற முற்படவில்லை. சமுதாயத்தில் கல்வி பயில வாய்ப்பளிக்கப்பட்ட ஒரு பெண், எந்த அளவிற்குச் சிறக்க முடியும் என்பதை மட்டுமே சரஸ்வதி என்னும் தலைமைப் பாத்திரத்தின் வழியாக அவர் காட்டுகிறார். ஜயசீலனைச் சரஸ்வதிக்கு மணமுடிக்க விரும்பும் அவள் தந்தை, அவளிடம் ஒப்புதல் பெற்ற பின்னரே அவ்வாறு செய்யவேண்டுமென எண்ணுகிறார். பெண்கல்வியால் விருப்பத்திற்கு மாறான திருமணங்கள் திணிக்கப்படும் வாய்ப்பு, குறையக் கூடுமென்பதையே இந் நிகழ்ச்சி எடுத்துக்காட்டுகிறது. சரஸ்வதி பெறும் கல்வியால் அவளின் பல்துறை ஆற்றல்களும் கூர்தீட்டப்படுகின்றன. ஒத்த மதிப்புடன் அவளை நடத்தும் அவள் கணவன், பெண்கல்வி வளர்ச்சிக்கென்று அவள் பாடுபடுகையில் அதற்கு ஒத்துழைப்பும் தருகிறான்.

மனம் விரும்பியவனை மணப்பதற்குப் போராடும் துணிவைப் பெண், தன் கல்வியால் பெறுவதாக **விஜயமார்த்தாண்டம்** என்ற தனது நாவலில் அமைக்கிறார், ஆசிரியர் மாதவையா. மனம் விரும்பாத ஒருவனை மணக்குமாறு வற்புறுத்தப்பட்ட நிலையில், வீட்டைவிட்டு வெளியேறுகிறாள் இதன் கதைத்தலைவி சிவகாமி. அவனிடமிருந்து தனக்குத் தொல்லைகள் வரும் நிலையில் மாவட்ட

ஆட்சித்தலைவரிடமும், வழக்கறிஞர்களிடமும் பாதுகாப்புக் கோருவதோடு ஆசிரியப்பணி செய்து தனித்து வாழ்கிறாள்; இறுதியில் விரும்பியவனையே திருமணம் செய்துகொள்கிறாள். பொருந்தா மணம் என்னும் சமூகத்தளைக்குக் கல்வி மீட்சியளிக்கக் கூடும் என்ற சிந்தனை, இந்நாவலில் வெளிப்பட்டிருப்பது சிறப்பானது.

**முத்துமீனாக்ஷி, சுந்தரி** ஆகிய நாவல்களில்; பெண்கல்விச் சிந்தனை; இளமை மண, விதவைநிலைச் சிக்கல்கள் ஆகிய அனைத்துமே இடம்பெற்றபோதும், அவை ஒருங்கிணைத்துக் காட்டப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இளமை மணத்திலிருந்து விடுபடுவதற்குப் பெண்ணுக்குக் கல்வி உதவக் கூடுமென்பதைக் கருத்தளவில் அவை சுட்டிக்காட்டியபோதும், அதனைக் கதை நிகழ்வாக அவை புனையவில்லை. இளமை மணத்தின் உடனிகழ்வாக நேரும் கைம்மைக் கொடுமைக்கு, மறுமணத்தைத் தீர்வாகக் காட்டுவதே அவற்றின் நோக்கமாக அமைந்தது. காலப்போக்கில் விதவை மறுமணம் என்பது நடப்பியலில் ஏற்கப்படுவதில் சிக்கல்களும், தயக்கங்களும் நிலவு வதைப் புரிந்துகொண்டபின், நாவலாசிரியர்கள், பெண்ணின் தளைமீட்சிக்குக் கல்வியை வழியாகக் காட்டத் தொடங்கினர்.

**ஸ்ரீதரன்** என்ற நாவலில், மனம் விரும்பாத திருமண உற விற்கு உடன்படாமல் விலகிச் செல்லவதற்கும், **விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** ஆகிய நாவல்களில் விதவைநிலைத் துன்பங்களுக்கு மாற்று என்ற முறையிலும், **மலர்ந்த இதழ், தியாக பூமி** என்ற படைப்புக்களில் கணவனால் கைவிடப்பட்ட துன்பநிலையிலிருந்து மீளவும் கல்வி, பெண்ணுக்குப் பயன்படக் கூடுமென்ற கருத்து இடம்பெற்றிருக்கின்றது. **விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** ஆகிய படைப்புக்களில் விதவைப் பெண் களின் மீட்சிக்குரிய வழியாகக் கல்வி பரிந்துரைக்கப்பட்டபோதும், அவர்களின் உறவினர் அதனை மறுத்துவிடுவதால் தளைமீட்சி அவர்களுக்குச் சாத்தியமில்லாது போகிறது.

**பொருட் பயன்பாடு :** பெண்கல்வியால் விளையும் பொருளா தாரப் பயன்பாடு, சமூகத்தால் அக்காலத்தில் அங்கீகரிக்கப்பட வில்லையெனினும், தவிர்க்க இயலாத சில சூழல்களில் அது ஏற்கப்பட்டே ஆகவேண்டுமென்பதை விடுதலைக்கு முன்னுள்ள தமிழ்நாவல்கள் அழுத்தமாக வற்புறுத்துகின்றன.

**விஜயமார்த்தாண்டம்** என்ற நாவலின் கதைத்தலைவி சிவகாமி, மனம் விரும்பாத திருமண முயற்சியை எதிர்த்து வீட்டை விட்டு வெளியேறியபின், மிஷினரிப் பள்ளியில் தமிழாசிரியையாகப் பணிபுரிகிறாள். காதலனையும், பெற்றோரையும் பிரிந்து வாழும் நிலையில், பொருளாதாரத் தற்சார்பு பெற்றுத் தனித் தியங்கக் கல்வியே அவளுக்கு உதவுகிறது. **விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்** ஆகிய நாவல்களில், விதவையரான கதைத்தலைவியர்க்குக் கல்வி மறுக்கப்பட்ட நிலையில், தம் உறவினரைச் சார்ந்து வாழவேண்டிய நிலைக்கு அவர்கள் ஆட்படு கின்றனர். **மலர்ந்த இதழ்** என்னும் நாவலில், கணவனால் கைவிடப்பட்ட அகிலா என்ற பெண், கல்வியும், கைத்தொழிலும் பயின்றதால் தன் நிராதரவான நிலையிலிருந்து மீண்டு விடு கிறாள். தியாக பூமி நாவலில் பொருந்தா மணத்தால் அவதியுறும் சாவித்திரி, தானும் கல்வி கற்று வேலை பார்த்தால் இப்பந்தத் திலிருந்து மீண்டிருக்கலாமே என எண்ணிப் பார்க்கிறாள்.

பெண்கள் கல்வி கற்று, அலுவல் புரிந்து பொருளீட்டுவதால், பிற வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொள்ளலாமென்னும் நோக்கம், சமகால நாவல்களைப் போலத் தொடக்கக்கால நாவல்களில் இடம்பெறவில்லை.

## பெண் கல்வியை ஆதரிப்போரும், எதிர்ப்போரும்

### பெண்கல்வியில் ஆண் உறவினரின் பங்கு

இந்தியக் குடும்ப அமைப்பில், ஆண் உறவினரைச் சார்ந்து வாழும் நிலையே பெரும்பாலும் பெண்ணுக்கு உரியதாதலால், அவள் கல்வி பெறுவதும், அவர்களின் முடிவைப் பொறுத்ததாகவே அமைந்திருக்கிறது. ஆண் உறவினர்கள் ஆதரிக்கும் நிலை யிலேயே பெண்கல்வி நிறைவேறுவதை நாவல்களும் புலப்படுத்து கின்றன.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், பத்மாவதியின் கல்விப் பயிற்சியை அவள் பெற்றோர் எதிர்த்தாலும், அவளது கணவன் நாராயணன் அதனை ஆதரிப்பதால் அவ்வெதிர்ப்பு எடுபட வில்லை. **ஜயசீலன்** நாவலில் சரஸ்வதி கல்வி பயில்வதை அவள் கணவன், தந்தை இருவருமே ஆதரிக்கின்றனர். ஓர் ஆண் மகனைப் படிக்கவைப்பதில் காட்டும் அக்கறையைத் தன் பெண்ணைப் படிக்கவைப்பதிலும் அவள் தந்தை காட்டியதாக அந்நாவல் குறிப்பிடுகின்றது.

**முத்துமீனாக்ஷி, சுந்தரி** ஆகிய நாவல்களில் கதைத்தலைவியரின் கல்விப்பயிற்சியை அவர்களின் தந்தையர் விரும்பாத போதும், அப்பெண்களின் தமையன்மார் துணிந்து வாதாடி அதனைச் சாத்தியமாக்கி விடுகின்றனர். முத்துமீனாக்ஷிக்குத் திருமணமான பிறகு, கணவனது எதிர்ப்பால் அவளது கல்வி தடைப்படுகிறது. விதவையாகி அவள் தமையன் வீட்டுக்குத் திரும்பியதும், மீண்டும் அது புதுப்பிக்கப்பட்டு விடுகிறது. **விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன், மலர்ந்த இதழ்** ஆகிய நாவல்களில், பெண்கள் கல்வி பெறுவதை, அவர்கள் சார்ந்திருக்கும் ஆண் உறவினர்கள் எதிர்க்கின்றனர்.

பெண் உறவினர்கள் எதிர்த்தாலும், ஆண்களின் ஆதரவு இருக்கும் நிலையில் பெண்கல்வி சாத்தியமாவதையும் (**பத்மாவதி சரித்திரம், ஜயசீலன்**), ஆண் உறவினர்கள் எதிர்க்கும்பொழுது பெண்ணின் கல்வி நிறைவேறாமலே போய் விடுவதையும் (**விஜயம், யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்**) நாவல்கள் புலப்படுத்தி இருப்பது ஆணாதிக்கச் சமூக அமைப்பின் வெளிப்பாடே ஆகும்.

## முடிவுகள்

விடுதலைக்கு முன் எழுந்த தமிழ் நாவல்கள், அடிப்படைக் கல்வி பெறுவதற்கே பெண் போராட வேண்டியிருந்த நிலையினை விரிவாகக் காட்டியிருக்கின்றன. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் சீர்திருத்தவாதிகளும், கல்வியாளர்களும் பெண் கல்வியை ஒரு பிரச்சாரமாகவே மேற்கொண்டிருந்ததைப் போலவே தமிழ் எழுத்தாளர்களும், தம் நாவல்களைப் பெண் கல்விப் பிரச்சாரத்திற்குக் கருவியாக்கியிருக்கின்றனர். பெண் கல்வியை மையப்பொருளாக்கிக் கதைபுனையும் அளவுக்குப் படைப்பாளிகள், இச்சமூகப் பிரச்சினையில் தம்மை ஆழ்த்திக் கொண்டு, சமூகப் பொறுப்புள்ளவர்களாக இருந்திருக்கின்றனர்.

பெண்கல்வியை ஆசிரியரே எதிர்க்கும் போக்கிலமைந்த மூன்று நாவல்கள் (**தீனதயாளு, நளினசுந்தரி, வீரவஸந்தா**) நீங்கலாகப் பிற அனைத்துப் படைப்புக்களும், பெண், கல்வி பெறுவதற்கான நோக்கங்களை விரிவாக எடுத்துரைத்திருக்கின்றன. ஒரு பெண் பெறும் கல்வி, குடும்ப அமைப்பின் செம்மையான செயல்பாட்டுக்கு உதவுமென்ற நோக்கத்தைத் தொடக்கக் கால நாவல்கள் வலியுறுத்த, அடுத்தடுத்து எழுந்த நாவல்களில்

சமூகத்தளை விடுபாட்டுக்கு ஒரு கருவியாகவும் கல்வி பரிந்துரைக்கப்பட்டிருக்கிறது.

காலப்போக்கில், நடப்பியலில் இளமை மணம், கட்டாயக் கைம்மை முதலிய கொடுமைகள் கல்வியால் குறைந்திருப்பது உண்மைதான்; எனினும் வரதட்சிணை, குடும்ப, சமூக வாழ்வில் வன்முறைகளுக்கு ஆட்படல், சமத்துவமின்மை, கற்புக்குப் பாது காப்பாற்ற சூழல் என்று எண்ணற்ற பல தளைகள் இன்றும் பெண்ணைப் பிணித்திருக்கின்றன. பெண்ணின் சமூக நிலையைக் கல்வியால் உயர்த்தலாம் எனக் குறிக்கோள் நிலையில் தொடக்கக் காலத் தமிழ் நாவலாசிரியர்கள் சித்திரித்தனர். ஆயின், உயர் கல்வி பெற்றுப் பல சிறந்த தகுதிகளையும்; பதவிகளையும் பெண் அடைந்திருக்கும் இன்றைய காலக்கட்டத்திலும் அவற்றால் பெண்ணின் சமூக அந்தஸ்து முழுமையாக உயர்ந்து விடவில்லை என்பதே இன்றைய கசப்பான நடப்பியல் உண்மையாகும்.

# அரசியற் சூழல்களும் பெண்ணின் நிலைப்பாடும்

மாபு வழிப்பட்ட அரசியல், சமூக, பொருளாதாரக் கட்டமைப்புக்களை மாற்றியமைப்பதில் அரசியல் இயக்கங்களும், புரட்சிகளும் பெரும்பங்கு பெறுகின்றன. உருசிய, சீன, பிரெஞ்சு நாடுகளில் நேர்ந்த புரட்சிகள், இவ்வுண்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்கள்.

''தந்தை வழிப்பட்ட சமூக அமைப்பில், பெண்களுக்குச் சாதகமான சமூக மாற்றங்கள் நிகழவேண்டுமெனில் அது அவர்களுக்கு அரசியல் உரிமை தருவதன் வாயிலாகவே சாத்தியமாகும். பெண்கள் அரசியல் உரிமை பெறுவதென்பது, மரபுவழிச் சமூதாய அமைப்பிலிருந்து, நவீன, தொழில்மயச் சமுதாய அமைப்புக்கு நாட்டை இட்டுச் செல்லும் படிகளில் தலையாயது''[1] என்னும் சமூகவியலார் கருத்திற்கேற்ப இந்திய அரசியல் மாற்றங்களும் இந்தியச் சமூகத்தை, மரபுவழிப்பட்ட பாதையிலிருந்து, நவீன யுகத்திற்கு இட்டுச் செல்லத் துணை புரிந்திருக்கின்றன. இம்மாற்றங்களிலும், அவை தொடர்பான அரசியல் போராட்டங்களிலும் பெண்ணின் பங்கேற்பு குறைவாகவே இருந்தபோதும், அவற்றால் நேர்ந்த பாதிப்புக்கள், அவர்தம் சமூகநிலை மாற்றத்திற்குக் குறிப்பிடத்தக்க வகையில் காரணமாயிருந்தன என்பது, மறுக்கவியலாத உண்மையாகும்.

இந்தியாவில், பெண்களின் நிலை எழுச்சி பெறுவதற்கான அடிப்படையை அமைத்ததில் இந்திய விடுதலை இயக்கத்திற்குச் சிறப்பான ஓர் இடம் உண்டு. இராசாராம் மோகன்ராயின் சமூக மறுமலர்ச்சி இயக்கம், பெண்கல்வி இயக்கம் முதலியவற்றைக்

---

1. Sushila Mehta, Revolution and the Status of Women in India, PP. 104-105.

காட்டிலும் பெண்களின் அரசியல் ஈடுபாடு வளரத் தொடங்கிய பிறகுதான், இந்தியாவில் பெண்மறுமலர்ச்சி வீறும், வேகமும் பெற்று வளர்ந்ததென அபர்ணா பாசு குறிப்பிடுகிறார்.[2] பெண்கள் அரசியல் அரங்கில் புகுந்து, பொதுவாழ்வில் ஈடுபட்ட பின்னர், காலங்காலமாக அவர்கள்மீது விதிக்கப்பட்டிருந்த சமூகக் கட்டுப் பாடுகளான 'பர்தா', இளமை மணம், கல்வி மறுப்பு முதலிய கொடுமைகளும் தளரத் தொடங்கின. 19ஆம் நூற்றாண்டு முழுவதும் முயன்றும் சீர்திருத்தவாதிகளால் தோற்றுவிக்க முடியாத மாற்றங்கள், இந்த நூற்றாண்டின் முதல் நாற்ப தாண்டுக் காலத்தில் நிகழ்ந்தன. இத்தருணத்தில், நாட்டு விடு தலையும், சமூகவிடுதலையும் பிரிக்க இயலாதபடி பின்னிப் பிணைந்துவிட்டதெனச் சமூகவியலறிஞர்கள் பலரும் கருத்து வெளியிடுகின்றனர்.[3] விடுதலைப்போரில் பெண்களும் அரசியல் தோழர்களாக இணையத் தொடங்கிவிட்டதால், நாடு விடுதலை பெற்ற பிறகு, சமூகத்தில் அவர்களுக்கும் ஒத்த இடம் வழங்குத லென்பது, இயல்பான ஒரு செயலாயிற்று. விடுதலைக்குப் பிறகு ஆண்களோடு ஒத்த வாக்குரிமை, தேர்தலில் போட்டியிடும் உரிமை முதலியவற்றைப் பெற்று, உயர்பதவிகளில் பெண் அமர் வதற்கு, அவளது விடுதலை இயக்கப் பங்கேற்பே வழியமைத்துத் தந்தது என்று துணியலாம்.

**அரசியல் தாக்கங்களும் நாவல்களும்.** தமிழில் அரசியலை அடிக்கருத்தாகவோ (theme), பின்னணியாகவோ (back-ground) கொண்ட நாவல்கள் மிகக் குறைவாகவே வெளிவந்துள்ளமை யால், இந்திய விடுதலை இயக்கமும், தொடர்ந்து குடியரசாட்சி யில் நேர்ந்துள்ள அரசியல் மாற்றங்களும் பெண்களின் சமூக நிலையில் விளைவித்துள்ள பாதிப்புக்களை அவை விரிவாகக் காட்டவில்லை; எனினும் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் எழுந்த சில நாவல்களில், பெண்களின் அரசியல் ஈடுபாடு குறித்த கருத் துக்களும், அரசியற் சூழல்களால் அவர்தம் வாழ்க்கைநிலையில்

---

2. Aparna Basu, "The Role of Women in the Indian Struggle for Freedom". Indian Women From Purdah to Modernity, B. R. Nanda (Ed.), P. 39.

3. Sushila Mehta, Op. cit., P. 91; Aparna Basu, Op. cit., P. 40; S. Shridevi, A Century of Indian Womanhood, P. 57; B. Kuppuswami, Social Change in India, P. 243.

நேர்ந்துள்ள மாறுபாடுகள் பற்றிய செய்திகளும் ஓரளவு இடம் பெற்றிருக்கின்றன. அவை, அளவிற் குறைந்தனவாயினும். அவை குறிப்பிடும் கருத்துக்கள், இந்திய அரசியல், சமூக வரலாறுகள் காட்டும் நடப்பியல் உண்மைகளோடு ஒப்பிட்டு ஆராயத்தக்க வகையில் அமைந்திருப்பதால், அவற்றின் துணையுடன் பெண்களின் அரசியல் ஈடுபாடும், அரசியல் இயக்கங்களின் தாக்கத்தால் அவர்கள் பெற்ற பாதிப்புக்களும் இங்குக் காட்டப் பெறுகின்றன.

தமிழில் நாவல்கள் தோன்றத் தொடங்கியிருந்த தொடக்கக் காலக்கட்டத்தில். அரசியலைப் பின்னணியாகக் கொண்ட நாவல்கள், மிகுதியாக வெளிவரவில்லை. 1911ஆம் ஆண்டிற்கும், 1935ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் ஏறக்குறைய முப்பது எழுத்தாளர்களால் உருவாக்கப்பட்ட நூற்றுக்கும் மேற்பட்ட நாவல்கள் வெளிவந்திருக்க வேண்டுமென்றும், அவற்றில் ஒன்றில்கூடத் தேசீய உணர்வு, நனவு நிலையோடு கூடிய செயல் வெளிப்பாடாக அல்லாமல் ''...சிறு சிறு தகவல்களாகவும், கதையோடு ஒட்டாத வெறும் குறிப்புகளாகவே...''[4] வெளிப்படுவதாகவும் எழில்முதல்வன் குறிப்பிடுகிறார். விடுதலை இயக்கம் பற்றி வெளிப்படையாக எழுத அஞ்சும் சூழல், இக்காலக்கட்டத்தில் நிலவியதால், எழுத்தாளர்கள், உருவகப் போக்கிலும், வரலாற்றுப்புனைகதைப் பாணியிலுமே தேசீய இயக்கச் செய்திகளை எழுதி வந்தனர்.[5] இவ்வாறானதொரு சூழலில் எழுதப்பட்ட நாவல்களில், பெண்ணின் அரசியல் ஈடுபாடு இடம் பெற்றிராமல் இருப்பது, விளங்கிக் கொள்ளக் கூடியதே.

நாட்டு விடுதலைப்போரில் பங்கேற்று, அதே வேளையில் இலக்கியப் படைப்பாளிகளாகவும் திகழ்ந்த சுப்பிரமணிய சிவா **(நளினசுந்தரி)**, வ.ரா. **(சுந்தரி)**, சுப்பிரமணிய பாரதியார் **(சந்திரிகையின் கதை)** ஆகியோரின் நாவல்களில் கூட இளமை மணம், விதவை நிலை முதலிய அக்கால நடப்பியல் போக்கு

4. எழில் முதல்வன் (மா. இராமலிங்கம்), ''தேசீய உணர்வு (1911-1935)'', **நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி**, தி. பாக்கியமுத்து (ப. ஆ.), ப. 61.

5. ஸ்ரீ. வை. குருஸ்வாமி சர்மாவினால் எழுதப்பட்டு, 1893ஆம் ஆண்டில் வெளிவந்த பிரேமகலாவத்யத்தில் நாட்டு விடுதலை, உருவகப் போக்கில் குறிக்கப்பட்டுள்ளது.

களைச் சித்திரித்துச் சமூக சீர்திருத்தம் காணும் நோக்கமே விஞ்சியிருந்ததேயன்றி, நாட்டு விடுதலையிலோ, பிற அரசியல் இயக்கங்களிலோ பெண்கள் ஈடுபாடு கொண்டு, அவற்றில் பங்கேற்றதாகச் சித்திரிக்கும் போக்கு, காணப்படவில்லை. ''தமிழில் சமுதாயச் சீர்திருத்தமே நாவல் முன்னோடிகளின் குறிக்கோளாக இருந்தது. சமுதாயத்தில் மேலோங்கிக் காணப் பட்ட தீமைகளை அவர்கள் சுட்டிக் காட்டினர். அவற்றை நீக்கவே தங்கள் வாழ்வைக் கழித்தனர்''[6] என்று தொடக்கக் காலத் தமிழ் நாவல்கள் பற்றி, இரா. தண்டாயுதமும் குறிப்பிடு கிறார்.

பெண்ணுக்குப் பல வகையான சமூகக் கட்டுப்பாடுகள் பெருகி யிருந்த அக்காலச் சூழலில், பெண்ணின் விடுதலை இயக்கப் பங்கும் மிகவும் குறைவாகவே இருந்தது. நகர்ப்புறத்தைச் சார்ந்த படித்த பெண்களும், குடும்பத்திலுள்ள ஆண் உறுப்பினர் களின் ஆதரவு பெற்ற பெண்களுமே[7] அதிக அளவில் விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டனர். படிப்பறிவில்லாத பாமரப் பெண்களும் பங்குபெறும் வண்ணம்; விடுதலை இயக்கத்தை ஒரு மக்கள் இயக்கமாக மாற்றியவர் காந்தியடிகளே. பெண்களுக்கு இழைக் கப்படும் சமூகத் தீமைகளுக்கு மாற்று, விடுதலை இயக்கத்தில் அவர்களும் இணைவதே என எண்ணிய அவர், நாட்டு விடுதலைக்கு உழைக்க முன்வருமாறு பெண்களுக்கு அழைப்பு விடுத்தார். அவரது அழைப்பினை ஏற்று, உண்மையான அர்ப்பணிப்பு மனப்பான்மையுடன் பணியாற்ற ஆயிரக்கணக்கான பெண்கள் முன் வந்தனர். இம்மாற்றம், ''கணநேரத்தில் நேர்ந்துவிட்ட மாற்றம்; பெண்களே இல்லாமல் வெற்றிடமாக இருந்த இந்திய அரசியல் அரங்கில்; திடீரெனப் பெரும் எண்ணிக்கையில் அவர்களின் பங்கேற்பு நேர்ந்ததென்பது ஒரு வியத்தகு நிகழ்வு'' என்பார் எல்.எஸ்.ஓ. மாலி என்னும் ஆங்கிலேயர்.[8] தமிழகப் பெண்களின் அரசியல் ஈடுபாடும், இப்

---

6. இரா. தண்டாயுதம், **சமூக நாவல்கள்**, சு. வேங்கட ராமன் (மொ. பெ. ஆ.), ப. 287.

7. கஸ்தூரிபாய்-காந்தி, கமலா, விஜயலட்சுமி பண்டிட், இந்திராகாந்தி-நேரு, லட்சுமி கிருஷ்ணமூர்த்தி-சத்திய மூர்த்தி; சரோஜினி வரதப்பன்-பக்தவத்சலம்.

8. L.S.O. 'Malley, Modern India and the West, P. 474, Quoted in S. Shridevi, Op. cit., P. 46.

பொதுப்போக்கினை ஒட்டியதே, 1920ஆம் ஆண்டு தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் ஒரு சில பெண்கள், ஆங்காங்கே பங்கு பெற்றபோதும், 1930ஆம் ஆண்டு நிகழ்ந்த உப்புச் சத்தியாக்கிரகத்திற்குப் பிறகே, தமிழகத்திலிருந்து பெண் தொண்டர்கள், விடுதலைப் போரில், அதிக அளவில் பங்கேற்கத் தொடங்கினர்.

மேற்குறித்த நடப்பியற் சூழலை அடியொற்றியதாகவே நாவல்களில் இடம் பெறும் பெண்ணின் அரசியற் சித்திரிப்பும் அமைந்திருக்கிறது. நாட்டு விடுதலைப் போராட்டம் வேகமும், வலுவும் கொண்டு வளரத் தொடங்கிய 1930ஆம் ஆண்டிற்கும் 1947ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட கால எல்லைக்குள் எழுதப் பட்ட சில நாவல்கள், விடுதலை இயக்கத்தில் பெண் கொண்டிருந்த பங்கினையும், அதனால் அவள் பெற்ற தாக்கத்தினையும் வெளிப்படுத்த முயன்றிருக்கின்றன. அத்தகைய படைப்புக்களில் இடம் பெறும் கருத்துக்கள், கீழ்க்காணும் தலைப்புக்களில் பகுத்துத் தரப்படுகின்றன.

1, பெண்ணின் விடுதலை இயக்க ஈடுபாடு சித்திரிக்கப்படும் முறை.

2. விடுதலைப் போரில் அவள் ஈடுபடும் நெறி

3. பெண்ணின் அரசியல் ஈடுபாட்டில் ஆண் உறவினரின் பங்கு.

## 1. பெண்ணின் விடுதலை இயக்க ஈடுபாடு சித்திரிக்கப்படும் முறை

இந்திய விடுதலை இயக்கத்திலும், அது தொடர்பான போராட்டங்களிலும், பெண்கள் பங்கேற்றிருந்த போதும் அவர்களுள் தனித்த ஆளுமை பெற்றவர்களாய், முழுமையான அரசியல் விழிப்புணர்வுடன் செயல்படும் பெண் தலைவர்கள், மிகக் குறைவாகவே இருந்தனர். பெரும்பாலான பிற பெண்களின் பங்கு, ஆணுக்குத் துணை நிற்கும் அளவிலானதாகவே அமைந்திருந்தது. இந்நடப்பியற் போக்கை ஒட்டி நாவல்களும் பெண்ணின் விடுதலை இயக்கப் பங்கினைத் துணைச் செய்தி என்ற அளவிலேயே பெரும்பாலும் சித்திரித்துள்ளன.

நாட்டு விடுதலைப் போரின் நிகழ்வுகளில் நேரடியாகப் பங்கேற்றவரான நாவலாசிரியை வை. மு. கோதைநாயகியின்

நாவல்களிலும் கூட, விடுதலை இயக்கத்தில் பெண்கள் கொண்ட ஈடுபாடு, கதையின் இயல்பான ஓட்டத்தோடு இணையாத துணைச் செய்தியாக மட்டுமே இடம் பெற்றுள்ளது. ஸாரமதி என்னும் அவரது நாவலில் இடம்பெறும் பெண் பாத்திரங்களாகிய சாவித்திரி, திலோத்தமா ஆகிய இருவரும் விடுதலைப் போராட்டத்தில் இயல்பான ஈடுபாடு கொண்டவர்களல்லர். தம் கணவன் மாரின் குடி வெறியினாலும், சூதாட்டம் முதலிய தீய பழக்க வழக்கங்களாலும் பாதிக்கப்பட்ட அவர்கள், தம் குடும்ப வாழ்வின் துன்பங்களிலிருந்து விடுபட ஒரு புகலிடமாகவே நூல் நூற்றல், கள்ளுக்கடை மறியல் முதலியவற்றில் ஈடுபடுகிறார்கள். நாவலின் இறுதியில் திடீரென மனமாற்றம் பெற்றுத்திரும்பும் அவர்களின் கணவன்மாரும் அவர்களோடு ஒருங்கிணைந்து நாட்டுப்பணியில் முனைவதாக அந்நாவல் நிறைவு பெறுகிறது.

வானக்குயில் அல்லது வாழ்க்கையின் நாதம் என்னும் கோதைநாயகியின் மற்றொரு நாவலில், மைதிலி என்ற பெண், வயதான ஒருவனுக்கு இரண்டாந் தாரமாக மணமுடிக்கப்பட்டுப் பொருந்தா மணத்தால் அவதியுறுகிறாள். கணவனால் வீட்டுக்குள் சிறை வைக்கப்பட்ட நிலையில், காந்தி ஆசிரமத் தொண்டர்கள், அவளது மீட்சிக்கு உதவுகின்றனர். இது கண்டு சினமுற்ற கணவன் அவளை வீட்டுக்கு அழைத்து வருகிறான். அவனது மறைவுக்குப் பின்னர் ஆசிரமப் பணிகளிலும், விடுதலைப் போரிலும் அவள் முனைந்து ஈடுபடுகிறாள். இந்நாவலிலும், தொடக்கம் முதல் சமச்சீராக அமையாமல் ஓர் இறுதி நிகழ்வாகவே காட்டப் படும் மைதிலியின் அரசியல் பிரவேசம், பொருந்தா மண உறவிலிருந்து மீட்சிபெற உதவும் ஒரு புகலிடமாகவே அவளுக்குப் பயன் படுகிறது.

தமிழின் தொடக்கக்காலப் பெண் நாவலாசிரியர்களுள் புகழ் பெற்றவராக விளங்கிய கோதைநாயகி, தம் படைப்புக்களில் விடுதலை இயக்க ஈடுபாடு கொண்ட பெண்களைக் காட்ட முனைந்தபோதும், அச்சித்திரிப்பு முழுமை பெற்றதாக அமைய வில்லை.

''வை. மு. கோதைநாயகி, இளம் வயதிலிருந்து விடுதலை இயக்க ஈடுபாடு கொண்டிருந்தும், 1920க்கும் 1930க்கும் இடைப் பட்ட நிகழ்ச்சிகளையே மேலெழுந்தவாரியாகக் கொண்டு எழுதி யுள்ளார்... 1930க்கு மேற்பட்ட நிகழ்ச்சிகளைக் கொண்டும், முழுமையான அளவிலும் விடுதலை இயக்க நாவல்களை இவர்

படைக்காதது வியப்பையே தருகிறது''[9] என 'இந்திய விடுதலை இயக்கமும். தமிழ் நாவல்களும்' என்ற ஆய்வேடும் இதனைக் குறிப்பிடுகிறது. இவர் காட்டும் பெண்கள், இயல்பிலேயே ஆழமான அரசியல் உணர்வு இல்லாதவர்களாகவும், அரசியல் அறிவைப் படிப்படியாக வளர்த்துக் கொள்ளும் வாய்ப்பு அற்றவர் களாகவுமே விளங்குகின்றனர். இவர்களது அரசியல் ஈடுபாடும் 'திடு'மென நிகழும் மனமாற்றத்தாலேயே நேருகிறது.

விடுதலைச் சூழலைப் பின்புலமாக்கிக் கல்கி எழுதிய **தியாக பூமி** நாவலும், கோதைநாயகி நாவல்களின் தடத்தில் செல்வ தாகவே அமைந்திருக்கிறது. இதன் கதைத்தலைவி சாவித்திரி யின் தந்தை, தீண்டாமை ஒழிப்பில் ஆர்வம் கொண்டவர்; காந்தியடிகளின் கருத்துக்களைப் பல ஊர்களிலும் சென்று பிரச்சாரம் செய்பவர். ஆனால் அவர் மகள் சாவித்திரிக்கோ, அவ்வாறான நடவடிக்கைகளில் ஈடுபட வாய்ப்பில்லாத வகையில், சொந்த வாழ்க்கைப் பிரச்சினைகளே பெரிதும் பாதிக்கின்றன. மனப் பொருத்தமின்மையாலும், வரதட்சிணைப் பிரச்சினை யாலும், முதலில் அவளை ஒதுக்கி வைத்த கணவன், சமூகத்தில் அவள் செல்வாக்குப் பெற்ற பின், அவளைத் தேடி வருகிறான். இருவரும் இணைந்து வாழ நீதிமன்றமும் உத்தரவிடும் நிலை யில், இச்சிக்கலிலிருந்து தப்பித்துக் கொள்ள, நாட்டுப்பணி, சாவித்திரிக்குப் புகலிடமாறுகிறது. கணவனுக்கு எதிரான வழக்கில் தான் தோற்றுப் போனால், விடுதலை இயக்கத்தில் சேர்ந்து, சிறைசெல்ல வேண்டுமென்று அவள் முன்பே முடிவு செய்து வைத்திருக்கிறாள். அவள், விடுதலைப் போரில் பங்கேற்றுச் சிறை செல்லும் அதே வேளையில், மனமாற்றம் பெற்ற அவள் கணவனும் அதில் கலந்து கொண்டு கைதாகிறான். அங்கே அவர்கள் மனங்கள் ஒன்றுபட்டதாகச் செயற்கைத் தன்மையுடன் கூடிய நாடகப்போக்குடன் நாவலை முடிக்கிறார் கல்கி. இங்கும், பெண்ணின் விடுதலை இயக்க ஈடுபாடு, நாவல் முழுவதும் ஊடுருவிச் செல்லாமல் இறுதிக்கட்டத் திடீர் நிகழ் வாகவே சித்திரிக்கப்பட்டிருக்கிறது.

விடுதலைக்கு முந்தைய தமிழ் நாவல்களில், பெண்ணின் அரசியல் இயக்கப் பங்கேற்பை முழுமையான பரிமாணத்துடன்

---

9. அப்துல் ரசாக், **இந்திய விடுதலை இயக்கமும், தமிழ் நாவல்களும்**, மதுரை காமராசர் பல்கலைக் கழக முனைவர் பட்ட ஆய்வேடு (அச்சில் வராத படி), ப. 292.

சித்திரிப்பது, கா.சீ. வேங்கடரமணியின் **தேசபக்தன் கந்தன்** என்னும் ஒரு நாவல் மட்டுமே. தமிழில் எழுந்த முதல் தேசீய இயக்க நாவலாக மதிப்பிடப்படும் இப்படைப்பு,[10] ''...தேசீய உணர்வை முழுமையாகப் பிரதிபலிக்கும் ஒரே நாவலும்-ஒப்பற்ற நாவலும் இதுவே''[11] என்றும் குறிப்பிடப்படுகிறது. ''தேசியம்'' இந்த நாவலில் வெறும் பின்னணியாக மட்டும் இல்லாமல் அதுவே எல்லாமாய் நிறைந்து நிற்கிறது''[12] என்பார் எழில்முதல்வன். விடுதலை இயக்கத்தில் பெண் கொண்ட ஈடுபாட்டையும்; ஆற்றிய செயல்களையும் முழுமையாகச் சித்திரிக்கும் நாவல் களிலும் இதுவே முதன்மை பெற்றதாக விளங்குகிறது.

நாவலின் தலைப்பு **தேசபக்தன் கந்தன்** என அமைந்திருப் பினும், கதை முழுவதும் சமச்சீரான அளவில் கதைத் தலைவி ராஜேசுவரியின் நாட்டுப் பற்றும், விடுதலை இயக்கத்தில் அவளது தீவிரப் பங்கேற்புமே இடம் பெற்றிருக்கின்றன. முழுமை யான அரசியல் விழிப்புணர்வுடன் தன்னை விடுதலைப்போரில் ஈடுபடுத்திக்கொள்கிறாள் அவள்.

ஆக்ஸ்ஃபோர்டில் கல்வி கற்கும் நிலையிலும், விடுதலைப் போரில் ஆர்வம் கொண்டிருக்கிறாள் ராஜேசுவரி. அவள்மீது தான் கொண்டிருந்த காதல் மறுக்கப்பட்ட நிலையில், கந்தன், தன் ஐ.சி.எஸ். பட்டத்தைத்துறந்துமுழுநேரத்தேசப்பக்தனாகிறான். இந்தியா திரும்பிய ராஜேசுவரி, காங்கிரசில் சேர்ந்து, பம்பாயில் நடைபெறும் ஒத்துழையாமைப் போராட்டத்தில் பங்கு பெறு கிறாள்; கிராமத் தொண்டாற்றத் தமிழகம் வருகையில், தன் காதலனான ரங்கன், கலெக்டர் பதவியைத் துறந்து, விடுதலைப் போரில் ஈடுபடவும் அவள் தூண்டுதலாகிறாள்.

காதல் அல்லது மண வாழ்வில் தோல்வி என்ற நிலை ஏற்படு கையில் அரசியலைப் புகலிடமாக்கும் தலைவியரினின்றும் ராஜேசு வரி வேறுபடுகிறாள். காதல், திருமணம் ஆகியவற்றைக்கூடப் பின்னுக்குத் தள்ளும் அளவுக்கு, நாட்டுப்பற்று, அவள் உள்ளத்

---

10. நா. வானமாமலை, ''இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்'', **தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்**, தி. பாக்கியமுத்து (ப. ஆ.), பெ. கோ. சுந்தரராஜன் (சிட்டி), சோ. சிவபாதசுந்தரம், **தமிழ் நாவல் நூறாண்டு வரலாறும், வளர்ச்சியும்** ப. 125.
11. எழில்முதல்வன், மு. நூ., ப. 125.
12. மேலது.

தில் ஆழமாக வேரூன்றியிருக்கிறது. பல ஆண்டுகள் கழித்துக் காதலனைச் சந்திக்கும் நிலையிலும் அவனைத் தன் அரசியல் பாதைக்கு இழுக்கவே அவள் ஆர்வம் கொள்கிறாள். ஒரு கட்டத்தில் நாட்டின் நலன் கருதி, அவன்மீது தான் கொண்ட காதலைக் கைவிடவும் துணிகிறாள். நாடு விடுதலை பெறும்வரை திருமணமின்றி இருக்க, இருவரும் இறுதியில் முடிவு செய்கின்றனர். நாவலின் வேறு சில துணை மாந்தர்களை (சரஸ்வதி, பொன்னன், கள்ளுக்கடை முதலியார்) விடுதலை இயக்கத்தின்பால் ஈர்க்கும் உந்து சக்தியாகவும் ராஜேசுவரி அமைகிறாள்.

## 2. ஈடுபடும் நெறி :

விடுதலைப் போரில் கலந்துகொண்ட பெண்களில், காந்தீய வழிமுறைகளைக் கடைப்பிடித்தோரும் உண்டு. புரட்சி இயக்கப் பாதையில் ஈடுபட்டு வன்முறைகளைக் கையாண்டோரும் உண்டு.

இந்தியத் தேசியக் காங்கிரஸ், 1885ஆம் ஆண்டில் தோற்றம் பெற்றபோது, நாட்டு விடுதலையுடன், சமூக விடுதலையையும் தன் இலக்காய்க் கொண்டிருந்தது; எனினும் பெண்களுக்குச் சம உரிமை அளிக்கத் தயங்கும் மனப்பான்மையும், சுரேந்திரநாத் பானர்ஜி முதலிய தலைவர்களிடம் நிலவியது.[13] இக்கருத்து முரண்பாடுகளைத் தகர்த்தெறிந்து ''இந்தியாவுக்கு விடுதலையைப் பெற்றுத் தருவதில், ஆண்களைப்போல் பெண்களுக்கும் சமபங்கு இருக்க வேண்டும்''[14] என்று எடுத்துரைத்தார், காந்தியடிகள். வன்முறை சிறிதும் கலவாமல் அவர் அறிவித்த போராட்ட வழிமுறைகள், பெண்கள் பங்கேற்க உகந்தனவாக அமைந்தன. ஒவ்வொரு முறையும், அவர் அரசியல் போராட்டங்களை அறிவிக்கும்போது, அவற்றில் பெண் தொண்டர்கள், பெரும் எண்ணிக்கையில் பங்கேற்றனர். உப்புச் சத்தியாக்கிரகம் முதலிய கடுமையான போராட்டங்களில் அவர்கள் பங்கேற்க வேண்டாமென அவர் அறிவித்திருந்தும், பால் அடிப்படையில் தங்களை ஒதுக்கி வைக்கலாகாது என்று கூறிப் போராட்டக் களங்களில் அவர்கள் நேரடியாக ஈடுபட்டனர்.[15]

---

13. Neera Desai, Woman in Modern India, P. 132.
14. M. K. Gandhi, Young India 15th Dec. 1921 - Quotied in B. R. Nanda (Ed.), Op. cit., P. 16.
15. Padmini Sen Cupta, The Story of Women of india, P. 195.

சென்னை, வேதாரண்யம் முதலிய இடங்களில் நிகழ்ந்த உப்புச்சத்தியாக்கிரகங்களை ருக்மணிலட்சுமிபதி, அம்புஜம்மாள் முதலிய தமிழ்ப்பெண்கள் தலைமையேற்று நடத்தினர். சட்ட மறுப்பு, ஒத்துழையாமை இயக்கங்களிலும் ஆயிரக்கணக்கான பெண்கள் பங்கேற்றனர். கள்ளுக்கடை; அந்நியத்துணிக்கடை மறியல்களில் ஈடுபட்டுச் சிறைசென்ற தமிழ்ப்பெண்களில் நாவலாசிரியர் வை. மு. கோதைநாயகியும், அம்புஜம்மாளும் சிறப்பிடம் பெறுகின்றனர்.[16]

காந்தியடிகளின் வன்முறையற்ற வழிகளுக்கு மாறான புரட்சி இயக்கத்திலும், ஆங்காங்கே பெண்கள் பங்கேற்று வந்தனர். தீவிரவாதத்தில் பெண்களைப் பயிற்றுவிப்பதற்கென்றே 1928ஆம் ஆண்டில் கல்கத்தாவில் ஒரு சங்கம் செயல்பட்டு வந்ததென் பதையும் அறியமுடிகிறது.[17] புரட்சிகரமான துண்டுப்பிரசுரங்களை ஒட்டியும், அரசுக்கு எதிராகத் தனி வானொலி நடத்தியும் புரட்சித் தீயை வளர்த்த பெண்களில், அருணா ஆசப் அலி, உஷா மேத்தா ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.[18]

நேதாஜி சுபாஷ் சந்திரபோசின் இந்தியத் தேசிய இராணுவத் திலும் பெண்கள் பங்கேற்றனர். தமிழ்நாட்டைச் சேர்ந்த லட்சுமி சுவாமிநாதன் இவர்களில் குறிப்பிடத்தக்கவர்.[19]

புரட்சி இயக்கத்தில் பெண்ணின் செயல்பாட்டைத் தமிழ் நாவல்கள் அதிகமாகக் காட்டவில்லை. 1939ஆம் ஆண்டு எழுந்த **பலாத்காரம்** என்ற நாவலில், காந்தியப் போராட்டவாதியாகிய பலராம ஐயரின் மகள் ஜெயலக்ஷ்மி, புரட்சி இயக்கத்தில் ஈடுபடு மாறு, தீவிரவாதியாகிய சரபசாஸ்திரி என்பவனால் கட்டாயப் படுத்தப்படுகிறாள். எனினும் அவள் ஆற்றும் புரட்சி நடவடிக்

---

16. எஸ். குரு, ''வை. மு. கோதைநாயகி அம்மாள்,'' 'தினமணி', 23-9-1988.
17. Aparna Basu, Op. cit, P. 32.
18. 'The Tribune' 18th Feb. 1946.. Quoted in Aparna Basu, Op. cit., P. 31.
19. யோகி சுத்தானந்த பாரதியார், ''விடுதலைப் போராட் டத்தில் பெண் வீராங்கனைகள்'' என்ற தலைப்பில் ஆற்றிய உரை, 4-12-82, பாத்திமாக் கல்லூரி.

கைகள், அப்படைப்பில் விரிவாகச் சித்திரிக்கப்படவில்லை; அவளும் வேறு வழியின்றியே அவற்றில் ஈடுபடுகிறாள்.

விடுதலைப் போராட்டத்தில், புரட்சி இயக்க நடவடிக்கைகளை விடவும், காந்திய வழிமுறைகளே தமிழகப்பெண்கள் அரசியலில் ஈடுபட உந்துதலளித்தன என்பதையே நாவல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

1920ஆம் ஆண்டில், நாடுதழுவிய அளவில் நடைபெற்ற முதல் சத்தியாக்கிரக இயக்கம், ஒத்துழையாமை இயக்கம். இவ்வியக்க விதிகளின்படி, கல்விப்பட்டங்கள், அரசுப்பணி ஆகியவற்றைத் துறந்துவிட்டு, நாட்டுப் பணியாற்ற வேண்டுமென மக்களிடம் பிறந்திருந்த எழுச்சியை, **தேசபக்தன் கந்தன்** நாவலில் இடம்பெறும் ராஜேசுவரியின் பாத்திரம் எதிரொலிக்கிறது. அவள், பம்பாயிலிருந்து சென்னைக்கு வந்தபொழுது, தமிழ்நாட்டில் அவள் ஒத்துழையாமை இயக்கத்தைப் பரப்பி விடுவாளோ என ஆங்கிலேய அரசு அஞ்சுகிறது; சென்னை அரசாங்கத்துக்குச் செய்தி அனுப்பி, அவள் நடவடிக்கைகளைக் கண்காணிக்கச் செய்கிறது.[20] தஞ்சை மாவட்டத்தில், தன் நண்பர்களான கந்தன், ரங்கன் ஆகியோருடன் இணைந்து ஒத்துழையாமை இயக்கச் செய்திகளை அவள் பரப்புகிறாள்; காவல் துறையினர் விதித்த தடையை மீறிக் கூட்டம் நடத்தியபோது, அதற்காக நாவலின் இறுதியில், ஆறு மாதச் சிறைத் தண்டனையும் பெறுகிறாள்.

உப்புவரிக்கு எதிர்ப்பாக—சட்டமறுப்பு இயக்கமாக நடத்தப்பட்ட உப்புச்சத்தியாக்கிரகம், 1930ஆம் ஆண்டு நாட்டின் பல இடங்களிலும் எழுச்சியை ஏற்படுத்தியது. இத்தகைய சிறப்புமிகு போராட்டத்தில் பெண்ணின் பங்கினை நாவல்கள் விரிவாகக் காட்டவில்லையெனினும் கல்கியின் **தியாக பூமி** நாவலில் அது தொடர்பான ஒரு சில குறிப்புக்கள் கிடைக்கின்றன. நாட்டில் நிகழ்ந்துவந்த மேற்குறித்த இயக்க நடவடிக்கைகளில் பெண்கள் பெருமளவில் கலந்துகொண்டதை, ''அந்தப் புகழ்பெற்ற வருஷத்தில்...தேசமெங்கும் ஆயிரக்கணக்கான ஸ்திரீகள், தாய்நாட்டின் தொண்டில் ஈடுபட்டார்கள், அவர்களில் பலர் சுதந்திர இயக்கத்தின் முன்னணியில் நின்றார்கள்; சிறை புகுந்தார்கள், இன்னும்

20. **தேசபக்தன் கந்தன்**, ப. 26.

பல கஷ்ட நஷ்டங்களையும் அனுபவித்தார்கள்''[21] என்று தம் கூற்றாக நாவலில் விவரிக்கிறார், கல்கி.

நாட்டின் விடுதலைப்போர் நிகழ்ந்துவந்த அதே காலத்தில் சமுதாயத்தின் ஒட்டுமொத்த வளர்ச்சியைக் கருத்திற் கொண்டு ஆக்கத்திட்டங்கள் சிலவற்றையும் காந்தியடிகள் அறிவித்தார். தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு, கைத்தொழில் வளர்ச்சி, ஆதாரக் கல்வித்திட்டம், பெண்விடுதலை முதலியவற்றை உள்ளடக்கிய அவை 'நிர்மாணத்திட்டங்கள்' என்று குறிப்பிடப்பட்டன. இவற்றுள் கள்ளுக்கடை மறியல், அந்நியத் துணிக்கடை மறியல், கதர்ப்பிரச்சாரம் முதலிய ஆக்கப்பணிகளில் பெண்கள் பங்கேற்றதை நாவல்கள் காட்டுகின்றன.

**ஸாரமதி, தேசபக்தன் கந்தன், பெண்** ஆகிய நாவல்களில், பெண்கள், கள்ளுக்கடை மறியலில் தீவிரமாக ஈடுபட்டு, அதில் வெற்றியும் பெறுவது காட்டப்படுகிறது. **ஸாரமதி** நாவலின் இறுதியில், சாவித்திரியின் கணவன் குடிப்பழக்கத்தை விட்டொழிக்கிறான். பெண், தேசபக்தன் கந்தன் ஆகிய நாவல்கள் பெண்களின் தீவிரச் செயல்பாட்டால் கள்ளுக்கடைகள் மூடப்படுவதைக் காட்டுகின்றன.

அயல் நாட்டுத் துணிகளை விற்பனை செய்யும் கடைகளுக்கு முன், தாமே மறியல் திகழ்த்தியவராகிய வை. மு. கோதை நாயகி தமது **ஸாரமதி** நாவலில், அம்மறியலில் பெண்களின் பங்கைப் பின்வருமாறு விரிவாகக் காட்டுகிறார்.

''சென்னையில் சைனாபஜார் ரோட்டிலும், ரட்டான் பஜார், தேவராஜ முதலித் தெருவு, கிடங்குத் தெருவு முதலிய தெருக்களிலும் உள்ள விதேசி ஜவுளிக் கடைகளின் வாசலில் இருபுறத்திலும் ஸ்திரீ ரத்தினங்கள் ஆரஞ்சு வர்ணப் புடவையை உடுத்திக் கொண்டு, கையில் தக்கிளியில் நூல் நூற்றவாறு வெகு சாந்தமான பார்வையுடன், நகைமுகத்தோடு நின்று மறியல் செய்யுங் காட்சியானது, சென்னை மாகாணத்திற்கே என்றும் அழியாத ஓர் பேரானந்தத்தையும், புகழையும் அளிப்பதாயிற்று.[22]

விடுதலைப்போரில் பெண்ணின் பங்கை விரிவாக எடுத்துரைக்கும் **தேசபக்தன் கந்தன்** நீங்கலாகப் பிற அனைத்து நாவல்களும், ஆக்கப் பணிகளான மதுவிலக்கு, கதர்ப் பிரச்சாரம்

---

21. **தியாக பூமி**, பக். 337, 338,
22. **ஸாரமதி**, ப. 333.

முதலிய மென்மையான இயக்கங்களில் பெண்கள் பங்கேற்றதையே காட்டுகின்றன.

## 3. அரசியல் ஈடுபாட்டில் ஆண் உறவினரின் பங்கு

பெண்களின் அரசியல் இயக்கப் பங்கேற்பில் ஆண் உறவினரின் ஒப்புதல், துணை அல்லது தூண்டுதல் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெற்றிருக்கிறது. நடப்பியல் அரசியல் வரலாற்றிலும், அரசியலில் புகழ்பெற்ற பெண்களுக்கு ஆண் உறவினர் துணையாய் இருப்பதைக் காண முடிகிறது. தமிழ் நாவல்களும் இவ்வுண்மையையே வலுப்படுத்துகின்றன.

**தேசபக்தன் கந்தன்** —ராஜேசுவரி (காதலன் - ரங்கன்)

**தியாகபூமி** —சாவித்திரி (தந்தை - சம்புசாஸ்திரி)

**பெண்** —வத்ஸலா (கணவன்- சந்தானம்)

பொது வாழ்வில் ஈடுபட்டு அரசியல் களத்தில் இறங்குவதற்கு ஆண் உறவினரின் துணை தேவைப்படுவது, பெண்ணின் சார்பு நிலையினையே புலப்படுத்துகிறது.

### முடிவுகள்

1930 ஆம் ஆண்டுக்கு முன்னர், விடுதலைப் போரில் பெண்கள், குறைந்த அளவிலேயே பங்கு கொண்டனரென்பதாலும், தொடக்கக்காலப் படைப்பாளிகள், சமூகச் சீர்த்திருத்தக் கருத்துக்களுக்கே முதன்மையளித்தனர் என்பதாலும், அக்கால நாவல்களில், பெண்ணின் அரசியற் பற்கேற்பு, மிகுதியாகச் சித்திரிக்கப் பெறவில்லை.

விடுதலைப்போர் நிகழ்ந்த சமகாலத்தில் எழுந்த படைப்புக்களில், பெண்ணின் (அரசியல்) சுதந்திரப் போராட்ட ஈடுபாட்டை முழுமையாகச் சித்திரிப்பது, கா. சீ. வேங்கடரமணியின் தேசபக்தன் கந்தன் என்னும் ஒரு நாவல் மட்டுமே. பிற அனைத்து நாவல்களிலும்; பொருந்தா மணம், வரதட்சிணை முதலிய சமூகக் கொடுமைகளிலிருந்து விடுபட உதவும் புகலிடமாகவே விடுதலைப் போராட்டம் காட்டப்படுகிறது. தேசபக்தன் கந்தன் ஒன்றைத் தவிர, 1947ஆம் ஆண்டுக்கு முன்னெழுந்த அனைத்துப் படைப்புக்களிலும், பெண்ணின் விடுதலை இயக்கப் பங்கானது கதை முழுவதும் சமச்சீராகக் காட்டப்படாமல், இறுதிக்கட்டத் திடீர் நிகழ்வாக மட்டுமே சித்திரிக்கப்படுகின்றது. விடுதலைப் போராட்டத்தின்

மொத்தப் பங்கேற்பு எண்ணிக்கையுடன் ஒப்பிடுகையில், பெண்களின் பங்கு குறைவாக இருந்தமையே இதற்குக் காரணமெனலாம்.

பெண்கள் அரசியல் போராட்டங்களில் பங்கு பெறுவதற்கு வன்முறை கலவாத காந்திய வழிப் போராட்டங்கள் உகந்தவையாக இருந்திருப்பதையும், பெண்ணின் அரசியல் ஈடுபாட்டிற்கு ஆண் உறவினரின் துணை அல்லது ஒப்புதல் தேவைப்பட்டிருப்பதையும் நாவல்கள் எடுத்துக்காட்டுகின்றன.

# வரதட்சிணை

இந்தியச் சூழலைப் பொறுத்தவரை, ஒரு பெண்ணின் திருமணத்தை உறுதிப்படுத்துவதிலும், அவள், தனது மண வாழ்வைச் சீராக நடத்திச் செல்வதிலும், அவளுக்கு வழங்கப்படும் வரதட்சிணை, பெரும்பங்கைப் பெற்றிருக்கிறது. ''இந்தியச் சூழலில், வரதட்சிணை என்பது வாழ்நாள் முழுவதும் பல்லாண்டு நிகழும் ஒரு 'தொடர் பரிசளிப்'பையே சுட்டுகிறது''[1] என்பார் குப்தா என்னும் சமூகவியலறிஞர்.

பெண்ணுக்குச் சொத்துரிமை மறுக்கப்பட்டு வந்ததால் நியாயப்படுத்தப்பட்டஇவ்வழக்கம் பின்பு சமய ஒப்புதலும் பெற்றுச் சமூகத்தில் உயர்குலத்தோராய்க் கருதப்பட்டவர்களிடம் முதலில் நிலவியது.[2] இன்றைய சூழலிலோ, சாதி, மத, இன, பொருளாதார வேறுபாடுகளின்றி, அனைத்துத் தரப்பு மக்களிடத்திலேயும் இது செல்வாக்குப் பெற்றுள்ளது.

பழங்கால இந்தியாவில், செல்வ வளம் மிக்க அரசக் குடும்பங்களில் மணப் பெண்ணுக்கு விலையுயர்ந்த பரிசுகள் தரப்பட்ட செய்தி, 'ரிக்', 'அதர்வண' வேதங்களிலும், இரகுவமிசம், சாதகக் கதைகள் ஆகியவற்றிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.[3] எனினும் அப்பரிசுகள், பிறரது வற்புறுத்தலால் வழங்கப் பெறவில்லை என்பதும், தாமாக விரும்பித் தரப்பட்ட பொருட்களாகவே இருந்தன என்பதும் நினைவிற் கொள்ளத்தக்கன.

---

1. A. R. Gupta, Women in Hindu Society. P. 251.
2. Radhakrishna Sharma, Nationalism, Social Reform and Indian Women, P. 15.
3. S. L Hooja, Dowry System in India-A Case Study, PP. 14, 15.

எண்வகை மணங்களுள் ஒன்றாகிய 'அசுர மணம்', ஆண், பொருள் தந்து, பெண்ணைக் கொள்ளும் வழக்கத்தைச் சுட்டுகிறது.[4] இன்றும்கூட, இது 'பரிசம்' என்ற பெயருடன் சாதியடிப்படையில் தாழ்ந்த இனத்தவராகக் கருதப்படும் சில பிரிவினரிடத்திலும் சில இனப் பழங்குடி மக்களிடத்திலும் வழக்கிலிருந்து வருகிறது. ஆணிடமிருந்து பெண்ணுக்கு எந்த விலையினையும் பெறாது, அவனைச் சிறப்பிக்கும் முறையில், பெண்ணை அவனுக்குத் தானமாக வழங்கும் மரபு, எண்வகை மணங்களில் பிறிதொன்றான 'பிரம்ம' மணத்தில் இடம்பெறுகிறது. இதுவே 'கன்னிகாதானம்' என்றும் வழங்கப்பட்டது.[5] பொதுவாக எவ்வகைத் தானத்தைப் பெறுபவர்க்கும், ஏற்புக் கூலியாகத் 'தட்சிணை' வழங்குதல், சமய மரபாதலின், கன்னிப் பெண்ணைத் தானமாக ஏற்கும் மணமகனுக்கும் (வரன்) சன்மானமாக வரதட்சிணை வழங்கப்பட்டது.

மேற்குறித்தவாறு 19 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரையிலும், வரதட்சிணை என்பது, ஒரு சமூக வழக்கம் என்ற அளவில் மட்டும் நிலவி வந்ததேயன்றி, அதன் தீய பாதிப்புக்கள், மக்களைச் சென்றடையவில்லை. ஆங்கிலேயரின்ஆட்சிக்காலத்தில் விளைந்த கல்விப் பெருக்கமும், தொழிற்புரட்சியும், இவ்வழக்கம் செல்வாக்குப் பெற மறைமுகத் தூண்டுகோல்களாயின. ஆங்கிலக் கல்வி பரவியதாலும், அரசுப் பதவிகளிலும், பிற உயர் பதவிகளிலும் பணியாற்றும் வாய்ப்பு மிகுந்ததாலும், ஆடவரின் சமூக மதிப்பு உயர்ந்தது. கல்வியும் மறுக்கப்பட்டுப் பொருளாதாரத் தற்சார்பும் இல்லாத பெண்ணுக்குத் திருமணம் என்ற ஒன்றே புகலிடமாயிற்று. அதனை அவளுக்குப் பெற்றுத் தருவதில் பெற்றோர்கள் அவசரம் காட்டியதால் வரதட்சிணையாகக் கேட்கப்படும் தொகையின் மதிப்பும் மிகுந்தது. இக்காலக் கட்டத்தில், சமுதாயத்தில் மலிந்திருந்த இளமை மண வழக்கத்தால் பருவமடைவதற்கு முன்பே தம் பெண்ணுக்குத் திருமணத்தை முடித்துவிட வேண்டுமெனப் பெற்றோர் முனைந்தனர். இதனாலும் வரதட்சிணைப் பழக்கம் ஊக்குவிக்கப்படலாயிற்று.

'சதி', இளமை மணம் ஆகியவற்றுக்கு எதிரான மறுமலர்ச்சி இயக்கங்கள், இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் தீவிரமாகச் செயல்பட்டதைப் போல, வரதட்சிணைக்கு எதிரான வலுவான

4. Ibid, P. 16.
5. Ibid, P. 22.

சமூக அமைப்புக்களை இக்காலக் கட்டத்தில் காண முடியவில்லை. நாடு விடுதலையடைந்து பல ஆண்டுகள் கழிந்தபிறகே, வரதட்சிணை குறித்த சமுதாய விழிப்புணர்வு அதிகரித்து வருகிற தெனலாம். இன்றைய சூழலில், இத்தீமையின் தாக்கம் மிகுந்து வருதலும் இதற்குக் காரணமாயிருத்தல் கூடும். அண்மைக் கால மாக, மக்கள் தொடர்புச் சாதனங்களின் வழியாக மேற்கொள்ளப் பட்டு வரும் பிரச்சார முயற்சிகளும், வரதட்சிணைத் தடுப்புச் சட்டத்தில் கொண்டு வரப்பட்டுள்ள கடுமையான திருத்தங்களும், சட்டமன்ற, பாராளுமன்ற விவாதங்களும், வரதட்சிணை குறித்த சமூக மனச்சாட்சியை ஓரளவுக்கு விழிப்புறச் செய்து வருகின்றன.

இத்தகைய நடப்பியல் பின்னணியுடன் பழந்தமிழ் நாவல் களை ஆராய்கையில், வரதட்சிணை வழக்கம் பின்பற்றப்படுவதற் கான காரணங்கள், அதனால் விளையும் நடப்பியற் சிக்கல்கள், பெண்ணுக்கு நேரும் பாதிப்புக்கள் முதலிய பலவற்றை அவை சித்திரித்திருப்பதைக் காண முடிகிறது.

**நாவல்களில் வரதட்சிணை வழக்கம்**

வறுமை நிலையிலுள்ள பெண் வீட்டாருக்கு, ஆண் பொரு ளைத் தந்து பெண்ணை மணந்து கொள்ளுதல், மணமகனுக்கும் அவனைச் சார்ந்தோருக்கும் பெண் வீட்டார் வரதட்சிணை வழங் குதல் என்னும் இருவேறுபட்ட நிலைகளிலும் பெண்ணின் வாழ்வு பாதிப்புக்குள்ளாவதை விடுதலைக்கு முன் எழுந்த தமிழ் நாவல் கள் சித்திரித்துள்ளன. வரதட்சிணை தருவதற்கு வழியில்லாத காரணத்தாலேயே பெண்ணின் பெற்றோர் வயதுப் பொருத்தமோ மனப் பொருத்தமோ அற்ற ஓர் ஆடவனிடமிருந்து பொருளைப் பெற்றுக் கொண்டு தம் மகளைத் திருமணம் செய்து கொடுத்தன ரென்பதை நாவல்கள் வெளிப்படையாகக் காட்டுவதால், அதுவும் ஒருவகையில் வரதட்சிணையின் விளைவாகவே இங்கு ஏற்கப்படு கிறது. மேற்காணும் அடிப்படையில்,

1. **ஆண், பொருள் தந்து மணத்தல்**
2. **பெண், வரதட்சிணை தந்து மணம் புரிதல்**

என்னும் இரு தலைப்புக்களில் நாவல் கருத்துக்கள் இங்குப் பாகு படுத்தித் தரப்படுகின்றன.

**ஆண் பொருள் தந்து மணத்தல்**

பெரும் பொருளை வரதட்சிணையாகத் தரும் வசதியற்ற பெண்ணின் பெற்றோர், ஆணிடமிருந்து—அவன் வயதிற் கூடியவ

னாயினும், இயல்பாற் கொடியவனாயினும் அதனைப் பொருட்படுத்தாது—பொருளைப் பெற்றுத் தம் பெண்ணைத் திருமணம் செய்து வைத்தனரென்பதைத் தொடக்கக் காலத் தமிழ் நாவல்கள் மிக விரிவான அளவில் எடுத்துக்காட்டுகின்றன. இக்காலக் கட்டத்தைச் சேர்ந்த நாவலாசிரியர் மாதவையா, **பத்மாவதி சரித்திரம்**, **முத்துமீனாக்ஷி** ஆகிய தம் இரு படைப்புக்களிலும் பெண்ணை விற்பனைப் பொருளாக்கும் தீமையினைக் குறிப்பிட்டிருக்கிறார். எனவே குறிப்பிட்ட இக்காலத்தில், சமூகத்தில் இத்தீமை மேலோங்கியிருந்திருக்க வேண்டுமென்பது புலனாகிறது.

''அந்த நாட்களில். பெண்களுக்கு மாப்பிள்ளை வீட்டுக்காரர் பணங் கொடுப்பதன்றி, மாப்பிள்ளைக்குப் பெண் வீட்டுக்காரர்—நகைகள் செய்து போட்டும், படிப்புச் செலவுக்குப் பணமுதவியும், துவிசக்கர வண்டிகள் வாங்கிக் கொடுத்தும்—பணங் கொடுப்பது கிடையாது''[6] என **முத்துமீனாக்ஷி** நாவலில், இந்நிலைமை சுட்டப்படுகிறது. ஆய்வின் அடிப்படை ஆதாரங்களாக அமையும் நாவல்களேயன்றி, இக்காலக் கட்டத்தில் வெளிவந்த பல துப்பறியும் நாவல்களிலும், நகைச்சுவைக் கதைகளிலும், பிற சமூகப் பிரச்சினைகளைச் சித்திரிக்கும் படைப்புக்களிலும்கூட வறுமையால் பெண் விலைப்படுத்தப்படுகையில், அவளுக்கு நேரும் பொருந்தா மண உறவு சித்திரிக்கப்பட்டிருக்கிறது.[7] இவ்வாறு பெண்ணை விலைக்கு வாங்கும் திருமணத்தைச் 'சாமானியர் திருமண'மென இந்நூற்றாண்டின் துவக்கத்தில் தமிழில் எழுந்த ஓர் உரைநடை நூல், பின்வருமாறு விளக்குகிறது.

''...இப்போதுள்ளபடி, பெண்களுக்குத் தொகை வாங்கிக் கொண்டு செய்கிற விவாகம் ஒன்று. கொடுத்துச் செய்கிற விவாகம் ஒன்று. இவ்விரண்டும் அநுட்டானத்திலிருக்கின்றனவன்றோ? வாங்கிச் செய்கிற விவாகத்தைச் சாமானிய விவாக

---

6. **முத்துமீனாக்ஷி**, ப. 37.

7. சு. அ. சுப்பராயபிள்ளை, **காதலா, கருணையா** (1922); முத்துக்குமாரஸ்வாமிப் பாவலர், **எமகாதகன் அல்லது மாயாசித்தன்** (1925); க. ஷண்முக முதலியார், **மோகனாம்பாள் அல்லது காதலரின் வெற்றி** (1928); சுப. மாணிக்கவாசகன், **கானகத்தில் மறைந்த காரிகை அல்லது தமயந்தி** (1938).

மென்றும், கொடுத்துச் செய்கிற வீவாகத்தைச் செல்வர் விவாக மென்றும் வழங்குவோம்.''[8]

பெண்ணுக்குப் 'பரிசம்'போட்டு மணக்கும் மரபு வழி வழக்கத்திற்கும், அவளுக்குப் பொருள் தந்து ஆடவர் மணப்பதாக நாவல்கள் காட்டும் சித்திரிப்பிற்கும் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் உண்டு. ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் பொழுது, அவளை இழப்பதால், அவள் குடும்பத்திற்கு நேரும் பொருளாதார இழப்பையோ, உழைப்பு இழப்பையோ ஈடுகட்டும் முறையிலேயே ஆண் 'பரிசம்' தந்து பெண்ணை மணக்கும் வழக்கம் ஏற்பட்டதென்பர்.[9] ஆயின், விடுதலைக்கு முற்பட்ட தமிழ் நாவல்கள், அக் காரணத்தைக் காட்டவில்லை. பெண்ணைப் பெற்றவர்கள் தங்கள் குடும்பத்தை, வறுமையின் பிடியிலிருந்தோ, கடன் சுமையிலிருந்தோ விடுவிப்பதற்காகத் திருமணம் என்ற பெயரில், தங்கள் பெண்ணை நல்ல விலைக்கு விற்பனை செய்ததையே அவை காட்டுகின்றன. இவ்வாறான விற்பனையில் பெண்ணின் ஒப்புதல் பெறப்படவில்லையென்பதும் குறிப்பிடத்தக்கது. பழங்காலத்தில், கிரீஸ் நகரிலும் இதுபோன்றதொரு நிலைமை இருந்திருப்பதைப் ''பெண்கள் தங்கள் தகப்பனுக்கு இப்படி ஒரு வகையில் வருமானத்தைப் பெற்றுத் தந்தார்கள்''[10] என்ற ஹோமரின் கூற்று உணர்த்துகிறது.

சாதியடிப்படையில் தாழ்ந்த இனத்தவராய்க் கருதப்படுவர்களிடத்திலேயே 'பரிச'மிடும் வழக்கம், அதிகமாகக் காணப்படுகிறது. ஆயின் பெரும்பான்மையான நாவல்கள் காட்டும் செய்திகள், உயர்சாதியினராய்க் கருதபடுவோரை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருக்கின்றன. இவற்றால், ஆண் பொருள் தந்து மணப்பதாக நாவலாசிரியர்கள் அமைத்துள்ள சித்திரிப்பு பரிசமிடும் வழக்கத்தைச் சுட்டுவதன்று என்பது தெளிவாகிறது.

ஆணிடம் பொருளைப் பெற்றுப் பெண்ணைத் திருமணம் செய்து வைக்கும்பொழுது, அவளுக்கு இருவகையான பாதிப்புக்கள் நேருவதை நாவல்கள் காட்டுகின்றன. அவை:

---

8. மு. சின்னையா செட்டியார், **வியாசங்களும் உபந்நியாஸங்களும், ப. 144.**

9. **A. R. Gupta, Ole.cit., P. 250.**

10. **'சுமங்கலி',** ''வரதட்சிணை - எங்கே, எப்படி இது பிறந்தது''—**20-11-1987.**

1. விற்பனைப் பொருளாகும் இழிநிலை

2. பொருந்தா மண உறவுக்கு ஆட்படல்

**விற்பனைப் பொருளாகும் இழிநிலை :** திருமணத்தைப் பொறுத்தவரை, பெண், தன் பெற்றோரால் ஒரு விற்பனைப் பொருளாகவே மதிக்கப்பட்டு வந்ததை, "...அவளைத் தக்க விலைக்கு விற்ற பின்புதான் எல்லார் ஜீவனத்தும் ஒரு வழியுண்டாக வேண்டும்"[11] என்று **பத்மாவதி சரித்திரமும்**, "...நகைகளும், பணமுமாக ஆயிர ரூபா கொடுத்துவிட்டால், தங்கள் பெண்ணை விற்றுவிடுவதாகச் சொன்னார்கள்"[12] என்று **முத்துமீனாக்ஷி** நாவலும் எடுத்துக்காட்டுகின்றன.

ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையிலுள்ள வயது வேறுபாடு கூடுதலாகிக்கொண்டு செல்லுகையில் பெண்ணின் விலை, அதிகரித்துச் செல்வதையும், இரண்டாந்தாரம், மூன்றாந்தாரம் என வாழ்க்கைப்படுகையில் அவளுக்குத் தரப்படும் விலை கூடுதலாவதையும் விடுதலைக்கு முன்னுள்ள தமிழ் நாவல்கள் விரிவாகக் காட்டுகின்றன.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், சேஷையர் என்பவர், தனது ஐம்பதாவது வயதில், இன்னும் பருவமடைந்திராத இளம்பெண் ஒருத்தியை மணக்க முனைகிறார். அவரது வயதான தோற்றத்தைக் கண்ட மணப்பெண்ணின் தாய், அவர் கொடுத்த தொகையைக் காட்டிலும் ஆயிரம் ரூபாய்கள் கூடுதலாய்க் கேட்க, அவரும் அதற்கு உடன்படுகிறார். திருமணம் முடிந்தபின், பெண் பருவமடைந்த பிறகு அனுப்பிவைப்பதாய்க் கூறிய பெண்வீட்டார், சில நாட்கள் கழிந்ததும் பெண் இறந்துவிட்டதாகச் சேஷையரிடம் பொய் கூறிவிட்டு, வயது குறைந்த வேறொருவனிடம் எண்ணூறு ரூபாய்கள் வாங்கி, மீண்டும் அவளை விற்றுவிடுகின்றனர்.

திருமணத்தில் பெண்ணை விலைபேசும் வழக்கத்தால், சமுதாய மதிப்புக்கள் தடம்புரண்டு போவதை, மேற்குறித்த நிகழ்வு வழியாக, மாதவையா, எள்ளலுடன் விவரிக்கிறார். எனினும், அந்நிகழ்ச்சிக்குப் பிறகும், சேஷையர் வேறோர் இளம் பெண்ணைப் பணம் கொடுத்து மணம் செய்து கொள்கிறாரெனக் காட்டுவதன் வாயிலாக, நடப்பியலில் அவ்வாறானவர்களுக்குப் பஞ்சமில்லை என்பதையும் அவர் குறிப்பிடுகிறாரெனலாம்.

---

11. **பத்மாவதி சரித்திரம்**. ப. 102,

12. **முத்துமீனாக்ஷி**, ப. 3.

**முத்துமீனாக்ஷி** நாவல், திருமணத்தில், பெண் ஒரு பண்டமாக வாங்கப்படும் போக்கினைப் பல கோணங்களிலிருந்து மிக விரிவாகக் காட்டுகிறது. இந்நாவலில், கதைத்தலைவி முத்துமீனாக்ஷியின் தந்தை, தன் ஐம்பதாவது வயதில், தன் மகனுக்கு நிச்சயித்த பெண்ணை மூன்றாந்தாரமாக மணக்கிறார். அதே வேளையில், ஒன்பது வயதான தன் மகள் முத்துமீனாக்ஷியை முப்பது வயதுடையவருக்கு இரண்டாந்தாரமாக மணம் செய்து வைத்து எழுநூறு ரூபாய் பணமும், முன்னூறு ரூபாய் மதிப்புள்ள நகையும் அதற்குரிய கட்டணமாகப் பெறுகிறார். முத்துமீனாக்ஷியின் கணவர், தன் மூத்த மகளுக்கு நிகழ்த்தும் திருமணமும், அவர்களின் திருமணத்தை ஒட்டியே நடைபெறுகிறது. தன் மகளுக்கு விலையாகப் பெற்ற நானூறு ரூபாய்களுடன், முன்னூறு ரூபாய்களைச் சேர்த்து முத்துமீனாக்ஷிக்குத் தந்து அவளை மணக்கிறார் அவர். இத்தகைய விலை வேறுபாட்டுக்கான காரணத்தை, ''அவள் புருஷன் சிறுவனாயிருந்ததால் அவளுக்குச் சொற்பப் பணமும், என் புருஷர் பெரியவராயிருந்ததால் எனக்கு அதிகப் பணமும் கிடைத்தன''[13] என்று முத்துமீனாக்ஷி சுட்டுகிறாள்.

**கமலவல்லி** என்னும் நாவலில், அனாதைப் பெண்ணாகிய கமலவல்லியை ஐயாயிரம் ரூபாய்கள் பெற்றுக் கொண்டு, சந்திரசேகரன் என்னும் மருத்துவருக்கு, அவளின் வளர்ப்புப் பெற்றோர், மணம் செய்து வைக்கின்றனர். திருமணத்திற்கு முன்பே, அவள் வேறொருவனிடம் காதல் கொண்டிருந்ததை அறிந்த அவள் கணவன், அவர்கள் இணைந்து வாழ உதவியாக அவளைத் தாய் வீட்டுக்கு அனுப்பி வைக்கிறான். இதனைத் தவறாகப் பயன்படுத்தும் அவள் பெற்றோர், அவளை மீண்டும் அம்மையப்பன் என்ற வாலிபனுக்கு மணம் பேசுகின்றனர்.

நாவல்கள் காட்டும் கற்பனைச் சித்திரிப்பே இவை என ஒதுக்கிவிட இயலாத வண்ணம், தொடக்கக் காலத் தமிழ் நாவல்களில் இவை மலிந்து காணப்படுவது, நடப்பியலின் வெளிப்பாடே எனலாம்.

**பொருந்தா மண உறவுக்கு ஆட்படல்:** விற்பனைப் பொருளாக்கப்படும் திருமண உறவில், வயது வேறுபாட்டால் விளையும் ஒவ்வாமை, மன இணக்கமின்மையால் நேரும் பொருத்தமின்மை என இரு தீங்குகள், பெண்ணுக்கு விளைகின்றன.

---

13. முத்துமீனாக்ஷி, ப. 37.

இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் நிகழ்ந்த வயதால் பொருத்தமற்ற திருமணங்களை வை.மு. கோதைநாயகியின் **வானக்குயில்** என்ற நாவல், ''கிழவனைக் கல்யாணம் பண்ணிண்டவாளெ கணக்கெடுத்தாக்கா 'அம்மா திரளுவதற்குள்ளே அய்யா உருளுவதுதான் அதிகம் இருக்கும்' இல்லையா?''[14] என்று எள்ளலுடன் குறிப்பிடுகிறது.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், சந்தையில் மாடு பிடிப்பது போலத் தஞ்சை ஜில்லாவில் பெண் தேடிச் செல்லும் ஐம்பது வயதான சேஷையரின் தோற்றத்தைக் கண்டு, மணப்பெண் மூர்ச்சையுறுகிறாள். **முத்துமீனாக்ஷி** நாவலில், தான் பருவமடையும் முன்பே, தன்னுடன் உறவுகொள்ள முற்படும் வயதான கணவனைக் கண்டு அருவெறுப்படையும் கதைத் தலைவி, தன் திருமணம், கணவன் மீது அன்பையோ, மன இணக்கத்தையோ தோற்றுவிக்கவில்லை என்பதை, ''எனக்கு என் கணவர் மேல் ஆசையேயில்லை... காதல் இன்னதென்பதை நான் அப்பொழுது அறியவேயில்லை''[15] என்று குறிப்பிடுகிறாள்.

கா.ஸ்ரீ. ஸ்ரீயின் **காந்தம்** நாவல், மூன்றாந்தாரமாக, வயதிற் கூடிய ஆண்மகனுக்கு வாழ்க்கைப்பட்ட நீலவேணி, இல்லறச் சுகமின்றித் துன்புறும் நிலையை விரிவாகக் காட்டுகிறது. தனக்கு மகன் உறவிலுள்ள சந்திரசேகரனிடம் உறவு கொள்ளவும் அவள் துணிந்து விடுகிறாள். அவன், அதை மறுத்துவிட, நிறைவேறாத உடல்வேட்கையால் சித்தப்பிரமை கண்ட நிலையில், மருத்துவ மனையில் அவள் சேர்க்கப்படுகிறாள்.

வரதட்சிணை என்னும் வழக்கத்திற்கு இணையாகச் சமூகத்தில் நிலவிய பெண்ணை விலைக்கு வாங்கும் தீமையால் நேர்ந்த பாதிப்புக்களைக் காட்டுவதோடு, அவற்றிலிருந்து மீளுவதற்கான வழிமுறைகளையும் நாவல்கள் குறிப்பிட்டிருக்கின்றன.

ஆண், பொருள் தந்து பெண்ணைத் திருமணம் செய்துகொள்வதற்கு, அவளின் பெற்றோரே காரணமென நாவல்கள் காட்டியிருப்பதால், அதனை ஒரு சிக்கலாக ஏற்று, அதற்குத் தீர்வு காண வேண்டுமென்ற விழைவும் அவர்கட்கு இல்லை. பெண் தானாகவே முனைந்து, இக்கொடுமையிலிருந்து விடுபட வேண்டுமாயின், அவளிடம் ஓரளவேனும் கல்வியறிவும், பொருளாதாரத்

14. வானக்குயில் அல்லது வாழ்க்கையின் நாதம், ப. 110.
15. முத்துமீனாக்ஷி, ப. 50.

தற்சார்பினால் விளையும் தன்னம்பிக்கையும் இருத்தல் வேண்டும். இளமை மணம், கல்வி மறுப்பு ஆகிய கொடுமைகளை மையமிட்ட தொடக்கக்கால நாவல்களில் அத்தகைய இயல்புகளுடைய பெண் களைக் காணுதல் அரிது. அடுத்தடுத்த காலக்கட்டங்களில் எழுந்த நாவல்களிலேயே, தான் விற்பனைப் பொருளாவதை எதிர்க்கும் எழுச்சியும், விற்பனை செய்யப்பட்ட பிறகும் அதிலிருந்து மீண்டுவரும் துணிவும் பெண்ணுக்கு விளைந் திருப்பது, சித்திரிக்கப்படுகிறது.

**கமலவல்லி** நாவலில், தன்னை விலை கொடுத்து மணந்த சந்திரசேகரனே, தன்னைத் தன் காதலனோடு இணைத்து வைக்க முன் வருகையில், மனத்தடையின்றி அதனை மகிழ்வோடு ஏற்றுக் கொள்பவளாகக் கதைத்தலைவி காட்டப்படுகிறாள். இம்முயற்சியைத் தடுக்கும், தன் வீட்டாரையும் எதிர்க்கிறாள். **காந்தம்** நாவலில், தந்தையின் வற்புறுத்தலால் நாகநாதனுக்கு மூன்றாந்தாரமாகிவிட்ட நீலவேணி, சில ஆண்டுகள் பொறுத்துப் பின் தாங்க இயலாத கட்டத்தில், அவனை விட்டு வெளியேறு கிறாள்.

### பெண், வரதட்சிணை தந்து மணம் புரிதல்

பெண் வீட்டார் வரதட்சிணை தருவதையும், மணமகன் வீட்டார், அதனைத் தமக்குரிய உரிமையாகவே கருதிப் பெறு வதையும் வழிவழி மரபாகவே, பெரும்பாலும் இருதரப்பினரும் ஏற்றிருப்பதால்; தனிப்பட்ட முறையில் வரதட்சிணைக்குரிய காரணமாக நாவல்களில் அது காட்டப் பெறவில்லை. சம்பிரதாய முறையிலான ஒப்புதல் தவிர பிற காரணங்களே அவற்றில் இடம் பெற்றுள்ளன.

ஆண்மகனின் கல்வித்தகுதி, உயர் பதவி ஆகியவற்றைக் கருத்தில் கொண்டும், தங்கள் மகளுக்கு அளித்த வரதட்சிணையை ஈடுகட்டும் நோக்குடனும் மணமகன் வீட்டார், வரதட்சிணையை எதிர்பார்ப்பதை நாவல்கள் காட்டுகின்றன.

ஆணின் படிப்பு கூடுதலாக இருக்கையில், அவன் பெறும் வரதட்சிணைத் தொகை மிகுதியாக ஆவதை ''மாப்பிள்ளை வீட்டார் இன்னின்ன பரீட்சைக்கு இத்தனை ஆயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும் என்றல்லவோ ஓர் தீர்மானம் செய்திருக் கிறார்கள்?''[16] என்று 1929ஆம் ஆண்டில் எழுதப்பட்ட **கோபாலரத்னம்** என்ற நாவல் குறிப்பிட்டிருப்பது கருதத்தக்கது.

---

16. **கோபாலரத்னம், ப. 5.**

மணமகனின் உயர்படிப்புக்கு ஆகும் செலவை, வரதட்சிணை யின் ஒரு பகுதியாக ஆக்கிப் பெண்வீட்டார் மீது சுமத்தும் போக்கினையும் நாவல்களில் காண முடிகிறது. சமூகத்தில் இளமை மணங்கள் பரவலாக இருந்த முதற்காலக்கட்டத்தில் இந்நிலை அதிகமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. மீனாக்ஷிசுந்தரம்மாளின் **ஜயசீலன்** என்ற நாவலில், மாப்பிள்ளைக்கு இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து, மேற்படிப்புப் படிக்க வைக்கப் பெண்ணைப் பெற்றோர் முன் வருகின்றனர்.[17]

**கோபாலரத்னம்** என்ற படைப்பில் கோபாலனின் உயர் கல்விக்கு அவனது மாமனார் பணம் செலவழிக்க வேண்டுமென் பதைக் கோபாலனின் தந்தை. திருமணத்தின் ஒரு நிபந்தனை யாகவே விதிக்கிறார்.[18] மாமனார் செலவில் மாப்பிள்ளை சட்டக் கல்வி பயிலுதல், கல்கியின் தியாக பூமியில் சிறு துணைச் செய்தியாக இடம் பெற்றிருக்கிறது.[19]

தம் பெண்ணுக்கு அளிக்கும் வரதட்சிணைச் செலவை ஈடு கட்டுவதற்காக, மகனது திருமணத்தில் வரதட்சிணை பெறுவதாக மணமகன் வீட்டாரால் சமூகத்தில் இவ்வழக்கம், ஒருவாறு நியாயப்படுத்தப்பட்டு வருகிறது. இம்மனப்போக்கினாலேயே வரதட்சிணைத் தீமை, தீர்க்க முடியாத நச்சு வளையமாகிச் சமுதாயத்தைப் பிடித்து வருகிறதெனலாம்.

தியாக பூமி நாவலில், கதைத்தலைவன் ஸ்ரீதரனின் தந்தை, தன் மூன்று பெண்களுக்கும் வரதட்சிணையளித்தே நொடித்துப் போனவர். இத்துன்பத்தால் அவர், கால் பைத்தியமான நிலையை அடைய, அவர் மனைவியோ, தன் மருமகளுக்கு வாங்கும் வரதட்சிணை வழியாக அப் பொருளாதாரச் சரிவைச் சீர்செய்து கொள்ளத் திட்டமிடுகிறாள்.

வரதட்சிணைத் தீமை, குறையாமலிருப்பதில் பெண்ணின் பெற்றோருக்கும் பங்கு உண்டு. ''கல்வியும், பொருளாதாரத் தற்சார்பும் பெற்றிருந்தாலும், பெண் என்பவள், பிறந்த வீட்டைப் பொறுத்தவரையில், மற்றொருவனிடம் பொறுப்பு மாற்றம் செய்யப்பட வேண்டியதொரு சுமையாகவே கருதப்படு கிறாள். எனவே சம்பிரதாய மரபுக்கு முரண்படாமல் வரதட்சிணை

---

17. **ஜயசீலன், ப. 151.**
18. **கோபாலரத்னம், ப, 9.**
19. **தியாக பூமி, ப. 27.**

யைத் தந்து, திருமணம் என்ற பெயரில் அவளை எங்கேனும் தள்ளிவிட்டுத் தம் பொறுப்பைக் கழித்துக் கொள்ளவே பெண்ணின் பெற்றோர் விரும்புகின்றனர்'' என்பர், சமூகவியலார்.[20] இவ்வாறு பெற்றோர், தம் பெண்ணை மணமுடிக்க முந்துகையில், உயர்கல்வியும், நல்ல வேலைத் தகுதியும் உள்ளவனாய்த் தம்மை விடச் சமூக மதிப்பீட்டில் உயர்ந்திருப்பவனையே நாடுகின்றனர்; அதற்காக அதிக வரதட்சிணை தரவும்அவர்கள் தயங்குவதில்லை. இந்நிலையை **ஜயசீலன், தியாக பூமி** ஆகிய நாவல்களிலும், பெற்ற மகளைத் திருமணம் செய்து கொடுக்காவிட்டால் ஊர் பழிதூற்றுமென்ற அச்சத்தில் கடன்பட்டாவது வரதட்சிணையைத் தருவதற்குப் பெற்றோர் முயல்வதைக் **காந்தம், தியாக பூமி** நாவல்களிலும் காண முடிகிறது.

## 3. வரதட்சிணை ஆதரவும் எதிர்ப்பும்

மணமகன், மணமகள் ஆகிய இருவரின் தரப்பிலுமே வரதட்சிணை எதிர்ப்பை விடவும், ஆதரவே மேலோங்கியிருப்பதை நாவல்கள் காட்டுகின்றன. மணமகன் குடும்பத்தில் அவனது தாயும், மணமகள் குடும்பத்தில் அவள் தந்தையும் வரதட்சிணையை ஊக்குவிப்பதில் பங்கு கொண்டிருக்கின்றனர்.

### மணமகன் வீட்டார்

**தாய்:** ''வரதட்சிணை பெறுவதில், புகுந்த வீட்டாரின் பங்கு-குறிப்பாக, மாமியாரின் கண்ணோட்டம், சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. முதலில் வரதட்சிணைத் தொகையை முடிவு செய்வதிலும், தொடர்ந்து அது குறித்துக் கண்டனம் கூறி விமரிசிப்பதிலும் அவள் கொள்ளும் பங்கே பெண்ணின் இல்வாழ்க்கையைக் கணிசமாகப் பாதிக்கிறது''[21] என, வரதட்சிணை குறித்த கள ஆய்வை மேற்கொண்ட ஹூஜா என்பார் குறிப்பிடுகிறார். ''ஒரு தாய், தன் மகன்மீது கொண்டாடும் அளவுக்கு மீறிய சொந்த உணர்ச்சியும், அதன் விளைவாக யாரோ ஒரு வேற்றுப் பெண், அவனைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டு விடுவதைத் தாங்க முடியாத பொறாமையுணர்ச்சியுமே...''[22] வரதட்சிணையைத் தோற்று

20. Sushila Mehta, Ole. cit., P. 116,
21. S. L. Hooja, Ole. cit., P. 207.
22. **அலைகள் ஓயக் காத்திருந்தால், ப. 42.**

வித்திருக்க வேண்டும் என, இச் சிக்கலுக்கு உளவியலடிப்படையில் காரணம் கூறும் படைப்பாளிகளும் உண்டு.

இவ்வடிப்படையில் நாவல்களை அணுகுகையில், வரதட்சிணைப் பிரச்சினையில், மணமகளின் தாய் பெறும் பங்கு, கீழ்க் காணும் முறைகளிலெல்லாம் அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

வை.மு. கோதைநாயகியின் **கோபாலரத்னம்** என்னும் நாவல், தான் கேட்ட அளவு வரதட்சிணையும், சீர்வரிசையும் கொண்டு வராத மருமகளை, மகனிடமிருந்து பிரித்து வைக்கும் மாமியாரைக் காட்டுகிறது. அத்துடன், தன் கொடுமை தாளாமல் மருமகள் தற்கொலை செய்துகொள்ள முயன்று, அதில் தோற்றுப் போகும் பொழுது, அவள் இறந்திருந்தால் மகனுக்கு வேறு இடத்தில் வரதட்சிணையுடன் மணமுடித்திருக்கலாமே என்றும் வருந்துகிறாள்.

திருமணம் நிகழவிருக்கும் வேளையில், பெண் வீட்டாரின் பலவீனங்களைக் காரணங் காட்டியோ அல்லது எந்தக் காரணமும் இன்றியோ, வரதட்சிணைத் தொகையைத் திடீரென உயர்த்தியும், சீர்வரிசைகளில் கெடுபிடி செய்தும் மாமியார் செலுத்தும் ஆதிக்கப் போக்கினைத் **தியாக பூமி** நாவலில் காணமுடிகிறது. அப்படைப்பில், மணப் பெண் சாவித்திரியின் அத்தையைப் பற்றிக் கிராமத்தில் தவறான வதந்திகள் உலவுவதால், அவற்றைத் தாங்கள் பொருட்படுத்தாமல் இருப்பதற்காகச் சாவித்திரியின் மாமியார், திடீரென, முன்பு விதித்த வரதட்சிணையுடன் கூடுதலாக ஆயிரம் ரூபாய் கேட்கிறாள். மேலும், திருமணத்திற்குப் பின்பும் தொடர்ந்து வரதட்சிணை சார்ந்து அவள் இழைக்கும் கொடுமைகள் பல. சாவித்திரியின் தந்தை, அரிசனர்களுக்கு வீட்டில் இடமளித்தார் என்ற காரணத்திற்காக, மருமகளை முதலில் ஒதுக்கி வைத்துவிட்டுப் பிறகு அதற்குரிய தண்டத் தொகையாக மூவாயிரம் ரூபாய் வசூலித்த பின் அவளை ஏற்கிறாள். சீர்வரிசைகள் போதவில்லையெனக் குறைகூறி, எட்டுமாதக் கருப்பிணியான மருமகளைத் தாய்வீட்டுக்குத் தனியே விரட்டியடிக்கும் கொடுமைக்காரியாகவும் அவள் சித்திரிக்கப்படுகிறாள்.

**தந்தை :** வரதட்சிணையால், பெண்ணுக்கு நேரடியாகப் பாதிப்பு விளைவிப்பதில் மணமகனின் தந்தை பங்கு பெறுவதாக

நாவல்கள், காட்டவில்லை. **கோபாலரத்னம்** என்ற ஒரு நாவலில் மட்டும், மகனின் படிப்புச் செலவுக்காகப் பணமாகவும், பிற பொருட்களாகவும், பெண்வீட்டார் தர வேண்டியவற்றை அவர், நிபந்தனைகளாக விதிக்கிறார். அவை நிறைவேறும் வரையில், மகன், பெண் வீட்டாருடன் தொடர்பு கொண்டுவிடக் கூடாதென, அவனையும் எச்சரிக்கிறார்.[23]

**மணமகன் :** வரதட்சிணை முறைக்கு, மணமகனின் ஆதரவு, எதிர்ப்பு என்னும் இருநிலைகளையும் நாவல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

**ஜயசீலன், கோபாலரத்னம்** ஆகிய நாவல்களில், மணமகன்கள், 'வரதட்சிணை' என்ற பெயரால், தாம் விற்பனை செய்யப்படுவதாய் நினைப்பவர்கள். ''மாம்ஸ வியாபாரம் செய்வதுபோல என்னையே விற்றுப் பணம் வாங்கவும் வேண்டுமா?''[24] என ஜயசீலனும், ''கல்யாணம் என்பது பெண்ணையோ, மாப்பிள்ளையையோ விலைக்கு விற்கும் ஓர் வியாபாரம்''[25] என்று கோபாலனும் குமுறுகின்றனர். பெண் வீட்டாரிடமிருந்து, தன் குடும்பத்தார் பண அறுவடை செய்வதைக் கோபாலன் வெறுக்கிறான். எனினும் நேரடியாக ஜயசீலனைப்போல இத்தீமையைத் தன் பெற்றோருக்கு எடுத்துச் சொல்லி அதனை எதிர்க்கும் துணிவு, அவனிடமில்லை. தன் மனைவிக்கு மறைமுகமான வழிகளில் அவன் உதவுகிறான்.

**காந்தம், தியாக பூமி** ஆகிய நாவல்களில், தம்மைச் சார்ந்தவர்கள் வரதட்சிணை கேட்டு, மனைவியையும், அவள் வீட்டாரையும் துன்புறுத்துகையில், அதனைக் கண்டு கொள்ளாதவர்களாகவே மணமகன்கள் காட்டப்படுகின்றனர்.

**மணமகள் வீட்டார்**

**பெற்றோர் :** வரதட்சிணை பெறுவதில், மணமகனின் தாய் பங்குபெறும் அளவுக்கு, அதனைத் தருவதில், மணமகளின் தாய் பங்கேற்பதில்லை. வரதட்சிணை தருவதை முடிவு செய்யும் பொறுப்பு, பெண்ணின் தந்தைக்குரியதாகவே இருப்பதை நாவல்கள் காட்டுகின்றன. வரதட்சிணைச் சிக்கலால் மகள்

---

23. **கோபாலரத்னம், ப. 10.**
24. **ஜயசீலன், ப. 152.**
25. **கோ. ர., ப. 6.**

பாதிக்கப்படும்பொழுது, பெண்ணின் தாய் வருந்துகிறாளே யன்றி, வரதட்சிணைத் தொகையை முடிவு செய்வதிலோ, வரதட்சிணை மறுப்பிலோ அவள் பங்கேற்பதாக அவை காட்ட வில்லை. குடும்பப் பொருளாதாரத்திற்கு ஆண், தலைமையேற் பதையும், வரதட்சிணை தருவதை முடிவு செய்யும் பொறுப்பு அவனுடையதாகவே இருப்பதையுமே நாவல்கள் புலப்படுத்து கின்றன.

பணமாகவோ-நகையாகவோ-எந்த வகையில் வரதட்சிணை கேட்கப்பட்டாலும், எதிர்ப்புக்காட்டாமல் அதற்கு உடன்பட்டுப் போகும் தந்தையரைத் **தியாக பூமி, காந்தம்** ஆகிய நாவல்கள் காட்டுகின்றன. மணமகன் வீட்டார், தொகையைத் திடீரென அதிகரிக்கும் கட்டங்களிலும் கூட, அக்கோரிக்கையைத் தம்மால் இயன்றவரை நிறைவு செய்யவே அவர்கள் முயல்கின்றனர். **காந்தம்** நாவலில், மணமேடையில் வைத்து ஐந்நூறு ரூபாய்கள் அதிகமாய்க் கேட்கப்பட, அவள் தந்தை, பணம் புரட்டுவதற்காக ஓடுகிறார். பெண்ணின் திருமணத்திற்காக எவர் முன்னும் பணியத் தயாராகிவிடும் இப்போக்கினைக் கதைத்தலைவி காந்தத்தின் கூற்றாக, ஆசிரியர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. சாடுகிறார்.[26]

வரதட்சிணை வாங்கும் வழக்கத்தை, மகள் எதிர்க்கத் துணி கையில் அவளைக் கண்டிக்கும் தந்தை, **தியாக பூமி** நாவலில் காட்டப்படுகிறார். ''அந்தக் காலத்தில் உன் பெயர் கொண்ட சாவித்திரி என்ன செய்தாள்?... அப்பேர்ப்பட்ட உத்தமிகள் பிறந்த தேசத்தில் பிறந்துவிட்டு... நீயும் கொஞ்சம் தியாகம் செய்யப்படாதா''[27] என்று அப்படைப்பில் சாவித்திரியை விட்டுக் கொடுக்குமாறு வேண்டுகிறார், அவள் தந்தை.

பெண்ணின் உறவினர் குறித்த பங்குநிலையில், **கோபால ரத்னம்** நாவல், புதுச் செய்தி யொன்றைத் தருகிறது. அப் படைப்பில், வரதட்சிணைப் பிரச்சினையால் தன்னிடமிருந்து பிரிக்கப்பட்ட மனைவிக்கும், அவள் வீட்டாருக்கும் கோபாலன் மறைமுகமாக ஆதரவளிக்கிறான். இதனைப் பயன்படுத்திக் கொண்டு, அவன் வீட்டாருக்குத் தெரியாமல், இருவருக்கும் 'சாந்திக் கல்யாணம்' முடித்து விடுமாறு பெண்ணின் அத்தை ஆலோசனை கூறுகிறாள்.[28] மணப்பெண்ணின் தந்தை அதனை

26. **காந்தம், பக். 27, 34.**
27. **தியாக பூமி, ப. 336.**
28. **கோபாலரத்னம். ப. 22,**

மறுத்து விடுகிறார். வரதட்சிணை வற்புறுத்தப்படுகையில், மண மான தம்பதியரும்கூட இரகசிய உறவுகொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டதையே இந்நாவல் தரவுகள் காட்டு கின்றன.

**மணமகள் :** தமிழில் நாவல்கள் தோன்றத் தொடங்கியிருந்த காலச்சூழலில், பெண், மிக இளம் பருவத்தில் திருமணம் செய்து வைக்கப்பட்டதால், வரதட்சிணை எதிர்ப்பு முதலிய சிந்தனைகள், அவளுக்கு மிகுதியாக எழ வாய்ப்பில்லை. வரதட்சிணை குறித்த விழிப்புணர்வும், எதிர்ப்புச் சிந்தனையும், பெண், கல்வியறிவு பெறத் தொடங்கிய பிறகே அரும்புகின்றன; கல்வி கற்று அறிவு முதிர்ந்த நிலையிலும், வரதட்சிணையை எதிர்க்காத பெண்களும் உண்டு.

1945ஆம் ஆண்டு எழுதப்பட்ட **காந்தம்** நாவல், வரதட் சிணைக்கு எதிரான தீவிரவாதச் சிந்தனை கொண்ட பெண்ணைச் சித்திரிக்கிறது. கல்லூரிக்கல்வி பெற்றிருக்கும் கதைத்தலைவி யான காந்தம், இளமைப்பருவம் முதலாகவே பெண்ணுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை எதிர்த்துப் போராடும் ஆர்வம் கொண்டிருப்பவள். திருமணமே செய்துகொள்ளாமல், பெண் ணினத்திற்குப் பணியாற்ற எண்ணியிருந்த அவள், தந்தையின் வறபுறுத்தலால் திருமணத்திற்கு உடன்படுகிறாள். முகூர்த்த வேளையில், மாப்பிள்ளை வீட்டார் கூடுதல் பணம் கேட்க-மாப்பிள்ளையும் அதற்கு ஆதரவாயிருத்தல் கண்டு அதிர்ச்சியுற்ற அவள், தன் கழுத்திலிருந்த தாலியைக் கழற்றி, மணமகன்மீது வீசியெறிந்துவிட்டு, அங்கிருந்து வெளியேறுகிறாள்.

''காந்தம் மனையிலிருந்து வேகமாகக் குதித்தெழுந்தாள்... பெண்ணின் அந்த வடிவத்தை இதுவரை யாரும் கண்டதில்லை ...'பண ஆசை பிடித்த பேயே! பணத்தை மணக்கிறாயா? என்னை மணக்கிறாயா? இதோ நீ கட்டிய மூன்று முடி! நீ கொடுத்த இந்தப் பந்தனத்தைப் பத்திரமாகப் பெட்டியில் பூட்டி வைத்துக்கொள். எனக்கு வேண்டாம். இந்தக் கழுத்துச் சுருக்கு! என்று ஆவேசத்தோடு கூறிக் காந்தம் கழுத்தினின்றும் தாலியைக் கழற்றி அதைச் சந்திரசேகரன் மீது சுழற்றி வீசி எறிந்தாள்''[29] என, இக்கட்டத்தை நாவலாசிரியர் உணர்ச்சி பொங்க விவரிக்கிறார்.

---

29. காந்தம், ப. 27.

திருமணத்தின்பொழுது, வரதட்சிணையின் பொருளை உணராமலிருந்துவிட்டுப் பிறகு, அதன் பாதிப்பால் துன்புற்ற பின், தன்னை நாடிவரும் கணவனை ஏற்க மறுத்து விடுபவளாகத் **தியாக பூமி** நாவலில் சாவித்திரி முதலில் காட்டப்படுகிறாள்; எனினும், இறுதியில், தேசத்தொண்டு, கணவனையும், மனைவியையும் இணைத்து விடுவதாகக் காட்டி நாவலுக்கு மகிழ்வான ஒரு முடிவைத் தரவே கல்கி விரும்பியதால் கதைத்தலைவி காட்டிய தீரம் முழுமை பெறவில்லை.

**முடிவுகள்**

வரதட்சிணைப் பழக்கத்திற்கு இணையாகச் சமூகத்தில் நிலவிய, ஆண் பொருள் தந்து மணக்கும் வழக்கத்தினையும், அதனால் பெண்ணுக்கு நேர்ந்த பாதிப்புக்களையும் தொடக்கக் காலத் தமிழ் நாவல்கள் மிக விரிவாக எடுத்துக்காட்டியுள்ளன. பொருளாதார வசதியுற்ற பெற்றோர், வரதட்சிணைக்கு மாற்றாக ஆணிடமிருந்து பொருள் பெற்று, மகளைத் திருமணம் செய்து கொடுத்தனரேயன்றி, மணமகன் தரும் பொருள் 'பரிச' மாகக் கொள்ளப்படவில்லை என்பது, நாவல்களின் வழியே வெளிப்படுகிறது. இவ்வாறான திருமணங்களில், பெண், விற்பனைப் பொருளாக இழிவதையும், வயதால் பொருத்தமற்ற திருமண உறவுக்கு ஆட்படுவதையும் நாவல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

பெண்ணிடமிருந்து வரதட்சிணை பெறும் திருமணங்களில், அவளுக்கு நேரும் பாதிப்புக்களை விடுதலைக்கு முன் எழுந்த தமிழ் நாவல்களில் காணமுடிந்தபோதும், விடுதலைக்குப் பின் தோன்றிய நாவல்களில் அப்பிரச்சினை பேசப்படுவது போன்ற விரிவான சித்திரிப்பை, அவற்றில் காணமுடியவில்லை. இளமை மணம், கல்வி மறுப்பு, விதவை நிலை ஆகிய பிரச்சினைகளின் ஆதிக்கம் குறையத் தொடங்கிய பிறகே தமிழ் நாவல் கருப்பொருளில் வரதட்சிணை மிகுதியாக இடம் பெறலாயிற்றெனலாம்.

# 7. கற்புக் கோட்பாடு

தொன்றுதொட்டு வழக்கிலிருந்துவரும், மரபுசார்ந்த வாழ்க்கை நெறியாகிய கற்பு என்னும் கோட்பாடு, சமுதாய வழக்கிலும், இலக்கிய வழக்கிலும் பெண்பாலார்க்கு மட்டும் உரியதாகவே பெரும்பான்மையும் வற்புறுத்தப்படுகிறது; எனவே பெண்ணின் வாழ்வில், இக்கோட்பாடு பிறழப்படுவதற்கான சூழல்கள் உருவாகும்பொழுது, அவளின் தனிமனித, குடும்ப, சமுதாய நிலைகள் கேள்விக்குரியனவாகி அவளைப் பாதிக்கின்றன.

'கற்பு' என்னும் சொல்லுக்குப் ''பதிவிரதா தருமம்'' என்றும், ''மண உறவில், மனைவி, கணவனுக்கு விசுவாசமாய் இருத்தல்'' எனவும் தமிழ் லெக்சிகன் விளக்கம் தருகிறது.[1] 'நிறை', 'கற்பு' ஆகிய தமிழ்ச்சொற்களுக்கு இணையான ஆங்கிலச் சொல்லுக்கு (Chastity), ''உடலுறவில் தூய்மை''[2] என்றும், ''கன்னிமை''[3] என்றும், ''முறையற்ற அல்லது அனைத்துவகை உடலுறவினின்றும் விலகியிருத்தல்''[4] என்றும் பலவகையான பொருள்களை அம்மொழி அகராதிகள் தருகின்றன.

இந்திய நாட்டின் பழைய இதிகாச, புராணங்களும், உபநிடதங்களும், தமிழில் தோன்றிய இலக்கண, இலக்கியங்களும் கற்பு நெறியினைப் பெண்ணுக்குரிய ஒரு ஒழுக்கமாகவே உரைத்

---

1. Tamil Lexicon, Vol. II, Part II, PP. 821-822.
2. Chastity-Sexval Purity, Chambers 20th Century Dictonary, P. 179.
3. Chastity-Virginity, Ibid.
4. Chastity-Abstaining from irregular or from all sexval intercourses, Ibid.

திருக்கின்றன.[5] அவற்றிலிருந்து கிடைக்கும் செய்திகளைத் தொகுத்துக் காணுகையில், இந்திய, தமிழகப் பண்பாட்டுப் பின் புல அடிப்படையில், 'கற்பு' என்னும் சொல், மரபு வழியாகப் பின்வருமாறு வரையறுத்துக் கொள்ளப்பட்டு வந்திருக்கின்ற தென்பதை விளங்கிக்கொள்ள முடிகிறது.

— மணமாகாத பெண் எனில், திருமணமாகும்வரை உடலாலும், மனத்தாலும் தூய்மை காத்தல்.

— திருமணமான பெண் எனில்;

(அ) இல்வாழ்வில் உடல், மனம் என்னும் இரண்டாலும் கணவன் ஒருவனுக்கே உண்மையுடையவளாதல்.

(ஆ) கணவன், தீயவனாயினும், பிற பெண்களுடன் தொடர்பு கொள்பவனாயினும் அவன் பிழைகளைப் பொறுத்துத் தாங்கி, அவனுக்கு நேர்மையுடைய வளாக இருப்பதோடு, அவனையே தெய்வமெனத் தொழுதல்.

கற்பு என்னும் வாழ்க்கை மதிப்பு, மேற்குறித்தவாறு பெண் ணிடம் மட்டுமே பெரிதும் எதிர்பார்க்கப்படுவதற்குத் தாய்மை நிலை அடையும் தன்மைபெற்ற அவளது உடற்கூற்றமைப்பு முதன்மைக் காரணமாகிறது. சமூகம், தாய்வழிப்பட்டதாக இருந்தவரையில், 'கற்பு' என்னும் பண்பு, பெண்ணிடம் எதிர் பார்க்கப்படவோ, வற்புறுத்தப்படவோ இல்லையெனவும், தந்தைவழி (patrilineal) முறையும், வாரிசுரிமையும் தோன்றிய பிறகே, அவற்றின் விளைவாகப் பெண்ணினத்திற்குக் 'கற்பு' என்பது புதியதொரு நெறியாக அறிவுறுத்தப்பட்டது என்றும், வரலாற்றடிப்படையில் இவ்வழக்கம் தோன்றி நிலைபெற்றதற் கான காரணத்தை எங்கெல்ஸ் விளக்குகிறார்.[6] வாரிசை அடிப்

---

5. Brihad Aranyaka Upanishad-Translated and quoted In Sushila Metha, Revolution and the Status of Women in India, PP. 203, 204.
திருக்குறள், 54, 57; அகம், 73:5, 33:2;
கலித்தொகை, 2:21; குறுந்தொகை, 252:4;
திருமுருகாற்றுப்படை—வரி 6; சிறுபஞ்சமூலம், 91: 2;
மணிமேகலை, 28 : 188-191.

6. பி. எங்கெல்ஸ், குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகிய வற்றின் தோற்றம், பக். 88-93.

படையாகக் கொண்டே இந்நெறி விதிக்கப்பட்டதால் ஆணுக்கும் உரியதென, இது அறிவுறுத்தப்படவில்லை. ஒரு தார மணம் என்பது, பெண்ணுக்கு மட்டுமே உரியதென வற்புறுத்தப் பட்டதும், இந்த அடிப்படையிலேதான்.

பழங்காலத்தில், இளமை மணம் பரிந்துரைக்கப்பட்டதற்கும், பெண் கல்வி தடுக்கப்பட்டதற்கும்கூட அவளது கற்பைப் பாது காக்கும் நோக்கமே காரணமாயிருந்திருக்கிறது. மண உறவு பொருந்தாமற் போகும் நிலையில், பெண் அதிலிருந்து மீட்சி பெற்று மறுமணம் செய்துகொள்வதையும், விதவை மறுமணத்தை யும் சமூகம், இன்றும்கூட மரபுவழிப்பட்ட மனத்தடைகளோடு நோக்குவதும் இந்த அடிப்படை கொண்டவையேயாகும். மகளிர், அரசியல் முதலிய பொதுவாழ்வில் ஈடுபடத் தயங்கு வதற்கும், கற்புப் பாதுகாப்புக் குறித்த அச்சமே காரணமாகிறது. பெண், மனமொப்பி உடன்படாத நிலையில், ஒரு விபத்துப்போல அவளுக்குப் 'பாலுறவு வன்முறை நேருகையிலும், அவள் உட லுக்கு நேரும் விபத்தை மட்டும் மனதில் கொண்டு, அவளது கற்பு நெறி பற்றிய தீர்ப்பினைச் சமுதாயம், வழங்கி விடுகிறது.

மேற்கூறியவாறு, இந்தியச் சமூகத்தில் இறுக்கமாக நிலவி வந்த கற்புக் கோட்பாடு, காலப்போக்கில் நெகிழத் தொடங்கி யிருப்பதையும் காணமுடிகிறது. இந்திய விடுதலைக்குப் பின்ன ருள்ள காலக்கட்டத்தில் விளைந்துள்ள வணிக, தொழில்துறை முன்னேற்றங்கள், பெண்ணின் உடற்கூற்றுக்குக் களங்கம் நேரும் சூழலை மிகுத்துள்ளன. தொழிற்களங்களிலும், பொது விடங் களிலும் இருபாலாரும் கலந்து பழகுவதற்கான வாய்ப்பு, இந்த நூற்றாண்டின் தொடக்கத்தை விடவும், தற்பொழுது அதிகரித் துள்ளது. திரைப்படங்களும், இழிந்த வகை இலக்கியங்களும் பாலுறவுக் கிளர்ச்சியைத் தூண்டிச் சமூகத்தில் வன்முறைப் போக்கை மிகுதிப்படுத்துகின்றன. இவற்றால் 'கற்பு'க்குறித்த மரபுவழி மதிப்பீட்டிலும், சில நெகிழ்வுப் போக்குகள் விளைதல் இன்றியமையாததாகிறது. ''ஒழுக்கம் பற்றிய கருத்துப் படிவங் கள், கோட்பாடுகள் ஆகியவற்றின் வரலாற்றைப் பரிசீலித்தால், வாழ்க்கை நிலைகள் மாற மாற ஒழுக்கங்களும் மாறி வரு கின்றன''[7] என்று சமூகவியலாரும் இவ்வியல்பினைக் குறிப் பிடுவர்.

---

7. பி. எங்கெல்ஸ், இயக்கவியல் பொருள் முதல் வாதமும், வரலாற்றுப் பொருள் முதல் வாதமும்-தொடக்க நூல் பக். 448, 449.

**கற்புக் கோட்பாடும், தமிழ் நாவல்களும்:** கற்புக் குறித்த மரபு வழிக் கோட்பாட்டினால் பெண்ணின் வாழ்வில் நேரும் பாதிப்புக் களைச் சித்திரிப்பதில், நாவல்கள், அவை தோன்றிய காலச் சூழல்களுக்கேற்பச் சில தனிப்பட்ட இயல்புகளைக் கொண்டிருக் கின்றன.

தமிழில் நாவல்கள் தோன்றத் தொடங்கியிருந்த காலக் கட்டத்தில், கற்புக் கோட்பாடு, மிகக் கடுமையாகவும், நெகிழ்வுப் போக்கிற்கு இடமளிக்காத இறுக்கமான முறையிலும் அவற்றில் வலியுறுத்தப்பட்டு வந்திருக்கிறது. கணவன், கொடிய இயல்பு களை உடையவனாயினும், பிற பெண்களுடன் தொடர்பு கொண்டவனாயினும், வயதாலோ, மனத்தாலோ, பிற பண்பு களாலோ பொருந்தாதவனாயினும், முகச் சுளிப்பின்றி அவனைச் சகித்துக்கொண்டு வாழ்வதும், எந்த நிலையிலும் பிற ஆண்களை மனத்தாலும் எண்ணாமல் வாழ்வதுமே பெண்கள் மேற்கொள்ள வேண்டிய கற்பொழுக்கமாகும் என்று அவை உணர்த்துகின்றன.

தமிழின் முதல் நாவலாகக் கருதப்படும் வேதநாயகம் பிள்ளை யின் **பிரதாப முதலியார் சரித்திரம்,** இரண்டு கிளைக் கதைகளின் வழியாக மேற்காணும் கருத்துக்களுக்கு அழுத்தம் தர முற்படு கிறது.[8] இதே காலக்கட்டத்தில், வாலாற்றுப் புனைகதைப் பாணியில் எழுதப்பட்ட **ஞானலோசனி என்னும் ஓர் பதிவிரதையின் சரித்திரம்** (நடராஜ ஐயர்-1900), **தருமசீலன்** (மு.சொ. சுந்தரேசன் செட்டியார்-1911) ஆகிய படைப்புக்களும் கூட இப்பொதுப்போக்கினை ஒட்டி அமைந்துள்ளதைக் காண முடிகிறது. 1914ஆம் ஆண்டில் குருமலை சுந்தரம்பிள்ளை என்பவரால் எழுதப்பட்ட **பொற்றொடி,** பெண் கற்பின் மேன்மை யைப் பாராட்டுவதற்கென்றே எழுந்த படைப்பாகும்.

பெரும்பாலும் வீட்டு வாழ்க்கையை மையமிட்டதாகவே பெண்ணின் வாழ்வு அமைந்திருந்த இந்நூற்றாண்டின் தொடக்கத் தில், கற்புக் கோட்பாட்டில் நெகிழ்வையும், மாற்றத்தையும் ஏற்படுத்திக் கொண்டாக வேண்டிய தேவையும் குறைவாகவே இருந்தது.

---

8. பிரதாப முதலியார் சரித்திரம், பக். 57-65, 131-136.

''தன் மனைவி கற்புத் தவறினவள் என்றறிந்தும், எவனொருவன் தன் சௌகரியத்துக்காகவாவது, தன் குழந்தைகளுடைய நற்பெயருக்காகவாவது அவளைத் தன் வீட்டிலிருந்து இல்லறம் நடத்த விடுகிறானோ, அவன்தான் உலகத்துக்கு மிக்க நாசத்தை விளைவிக்கும் பகைவன்''[9] என்று **பத்மாவதி சரித்திரம்** நாவலில் இடம்பெறும் கோபாலனின் கூற்று, கற்புக் குறித்த இறுக்கமான மனப்போக்கை உணர்த்துகிறது.

தொடக்கக் காலத் தமிழ் நாவல்களில் கடுமையாக வற்புறுத்தப்பட்ட கற்புக் கோட்பாடு, காலப்போக்கில் நெகிழ்வடையத் தொடங்குவதை, அடுத்தடுத்து எழுந்த நாவல்கள் வெளிப்படுத்துகின்றன. பழைய மதிப்புக்களுக்கும், புதிய கணிப்புக்களுக்கும் இடையிலான போராட்டத்தைச் சுட்டிக்காட்டிக் கற்புக் குறித்த மரபுவழிப்பட்ட கருத்து நிலையில் மாற்றம் தேவை என்பதை இவை எடுத்துக்காட்டுகின்றன. ''கண்ணகி உருவில் வீர வணக்கம் செய்யப்பட்ட கற்பை மணிக்கொடி எழுத்தாளர்கள் கேள்விக்கு உட்படுத்தினர்''[10] என்னும் கூற்று, விடுதலைக்கு முற்பட்ட 'மணிக்கொடி'க் காலத்தில், கற்புக் கோட்பாட்டில் மாற்றம் ஏற்படுத்த முனைந்த இலக்கிய முயற்சிகளைச் சுட்டுகிறது.

இக்காலக்கட்டத்தில், மரபுவழிக் கற்புக் கோட்பாட்டின் தொடர்ச்சியினையும் காண முடிகிறது. பரத்தையிடம் தொடர்பு கொண்ட கணவனைத் தன் கற்பால் மனைவி பொறுத்து ஏற்பதாக அமையும் **தாசியின் மோசம் அல்லது கற்பின் சுமை** (ஆ. சக்திவேற்பிள்ளை—1939) என்ற நாவல், இத்தகைய போக்குடையது.

விடுதலைக்குப் பின்னர் நேர்ந்துள்ள சமூக, பொருளாதார மாற்றங்களால், கற்புக் குறித்த சமுதாயத்தின் சிந்தனைப் போக்கில் பல புதிய பரிமாணங்கள் விளைந்திருப்பதால், அதனை ஒட்டிக் கற்புக் கோட்பாட்டால் பெண்ணின் வாழ்வு சிக்கலாவதை விடுதலைக்குப் பின்னெழுந்த நாவல்கள் விரிவாகக் காட்டுகின்றன. குறிப்பாகப் பாலுறவு வன்முறையால் பெண்ணுக்குப் பாதிப்பு நேருகையில், கற்புக் குறித்த பழைய மரபுவழிக் கோட்பாட்டை மாற்றி மறுமதிப்பீடு செய்யவேண்டிய கட்டாயத்

---

9. பத்மாவதி சரித்திரம், ப. 117.

10. எஸ். தோதாத்ரி, ஜெயகாந்தன் ஒரு விமர்சனம், ப. 23.

தில் இன்றைய சமூகம் இருப்பதை இவை எடுத்துக் காட்டுகின்றன.

விடுதலைக்கு முன் எழுந்த நாவல்களில் கற்புக் கோட்பாடு, கீழ்க்காணும் மூன்று வகைகளில் சித்திரிப்புப் பெறுகிறது.

1. **கற்புக்கு நேரும் பழி**

2. **பொருந்தா மணமும், கற்புக் கோட்பாடும்**

3. **முறை பிறழ்ந்த உறவுகளும், கற்புக் கோட்பாடும்.**

**கற்புக்கு நேரும் பழி:** மணம்புரிந்த கணவனைத் தவிர, மனம், உடல் என்னும் இரண்டினாலும் பிறிதோர் ஆடவனை நாடாத பெண்ணின் வாழ்வும் கூட, அவளது கற்பின் மீது சுமத்தப்படும் வீணான பழிச்சொல்லால் பாதிப்புக்காளாவதைக் **கமலாம்பாள் சரித்திரம்**, **பத்மாவதி சரித்திரம்** ஆகிய இரு நாவல்களும் புலப்படுத்துகின்றன.

**கமலாம்பாள் சரித்திரம்** என்ற நாவலின் மற்றொரு தலைப்பான ஆபத்துக்கிடமான அபவாதம் என்பதே, கதைத்தலைவி கமலாம்பாளின் கற்புக்கு நேரும் பழியைச் சுட்டுவதாக அமைந்திருக்கிறது. மகளுக்குத் திருமணம் செய்து, பேரக் குழந்தைகளும் எடுக்கும் வயதில், தன் மனைவியின் நடத்தை மீது சுமத்தப்படும் பழியை நம்பி, அவளைத் துறந்துவிட்டு ஊரைவிட்டே போகிறார் முத்துச்சாமி ஐயர். கமலாம்பாள், தன் கற்பை அவருக்கு மெய்ப்பிக்கும் வழியறியாது அவதியுறுகிறாள். **பத்மாவதி சரித்திரம்** நாவலில் நாராயணன் பெண்ணுரிமை குறித்த முற்போக்கு மனப்பான்மை கொண்டவனாயிருந்தும், தன் மனைவி பத்மாவதியின் ஒழுக்கத்தின்மீது பழிகூறி எழுதப்பட்ட முகவரியற்ற ஒரு மொட்டைக் கடிதத்தை நம்பி, வீட்டுக்குள்ளேயே அவளை ஒதுக்கி வைக்கிறான். அடித்தும், உதைத்தும் அவன் அவளைத் துன்புறுத்துவதால் அவளுக்குச் கருச்சிதைவு நேர்கிறது. வாழ்வில் சலிப்புற்ற நிலையில், அவள் தற்கொலைக்கும்கூடத் துணிந்துவிடுகிறாள்.

பெண், வெளியிடங்களுக்குச் சென்று, பலருடன் கலந்து பழகப் போதிய வாய்ப்பில்லாத காலச்சூழலிலும்கூட அவன் கற்பின்மீது பழி சுமத்தப்பட்டிருக்கிறதென்பதையே தொடக்க காலத் தமிழ்ப் புதினங்கள் உறுதிப்படுத்துகின்றன.

### பொருந்தா மணமும் கற்புக் கோட்பாடும்

**பொருந்தா மண உறவைப் பொறுத்தல் :** திருமணம், பொருந்தாத உறவாக அமைந்துவிடும் நிலையில், அதனை ஏற்றுப் பொறுப்பதும், மணந்த ஒருவனுக்கே இறுதி வரை, மனம், உடல் என்னும் இரண்டினாலும் தூய்மை காத்து வாழ்வதுமே பெண்ணிற்குரிய கடன் என்று **பத்மாவதி சரித்திரம், சாருலோசனா** ஆகிய நாவல்கள், கற்புக் கோட்பாட்டை இறுக்கமாக வரையறுத்துக் காட்டுகின்றன.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், சாவித்திரியின் கணவர் 'குள்ளச்' சுந்தரமையர் என்பவர் அழகற்ற வடிவம் கொண்டவர், அதனால் ஏற்பட்ட தாழ்வு மனப்பான்மையினால், அழகும்; பண்புகளும் நிறைந்த தன் மனைவியைத் துன்புறுத்துகிறார். பரத்தையுடனும் தொடர்பு கொள்கிறார். இந்நிலையிலும், அப் பந்தத்திலிருந்து வெளியேறவோ, வேறு உறவு கொள்ளவோ சாவித்திரி முயலவில்லை என்பதை எடுத்துக்காட்டிக் ''கற்புக் கரசி'' என்று அவளைப் புகழ்கிறார் மாதவையா.[11] மேற்குறித்த வாழ்விற்கு மாற்றுத்தேட முயலாத அவளது மனப்போக்கே 'கற்பு' என்ற பெயரால் அவரால் சிறப்பிக்கப்படுகிறது. இதனைக் கீழ்க் காணும் நாவல் வரிகளும் உறுதிப்படுத்துகின்றன.

''தன் கணவன் எவ்வளவு துரோகமாய் ஒழுகினபோதிலும், தன்னையவர் எவ்வாறு இகழ்ந்தபோதிலும், எத்தனை கொடூரமாக நடத்தியபோதிலும், தன் கற்பை மட்டும் தான் ஒருபொழுதும் கைவிடக் கூடாதென்று தீர்மானித்திருந்தாள்... பொறுக்கமுடியாத துன்பங்களைத் தன்னாயகன் மூலமாகத் தானநுபவிக்கும் பொழுது வேறுவழியாகத் தான்சுகத்தை அடையலாமென்றாவது, உலகில் அவ்வாறு அடைபவரைப் பற்றியாவது அவள் சிறிதும் நினைத்ததேயில்லை. விதிப்பயனென்று நொந்துகொள்வாளே யொழிய அதை மாற்றும் வழியுண்டோவென்று சிறிதும் கருத மாட்டாள்.''[12]

வை. மு. கோதைநாயகியின் **சாருலோசனா** நாவலில், பதினைந்து வயதேயான ஜெயமணியை மணக்கும் ஐம்பது வயது நிரம்பிய கங்காதரர், பொருந்தா மணத் தீமைகளை அவள்வழி உணர்ந்து, இளமையில் அவளை மணக்க விரும்பிய காதலனுடன் அவளைச் சேர்த்துவைக்க முயல்கிறார். ஆயின் இருவருமே

---

11. **பத்மாவதி சரித்திரம்,** ப. 105.
12. மேலது

அதனை உடன்படாமல் மறுத்துவிடுகின்றனர். கங்காதரர் இறந்த பிறகு, தான் உயிருடன் இருந்தால்கூடத் தன்மனம் சபலமுறுமென அஞ்சும் ஜெயமணி, அவருக்கு முன்பே தான் நஞ்சு குடித்து உயிர் துறந்து விடுகிறாள். இதே நாவலாசிரியரின் வானக்குயில் என்ற நாவலில், தனது ஐந்து வயதில், கிழவன் ஒருவனுக்கு மூன்றாந்தாரமாக மணம் செய்விக்கப்பட்ட மைதிலி என்ற பெண், கணவனின் ஒழுக்கக்கேடான நடவடிக்கைகள் பிடிக்காமல், வீட்டினுள் இருந்துகொண்டே அவனிடமிருந்து விலகி வாழ்கிறாள். அவனது தீய நடத்தைகளை வெளிப்படையாகக் கூறுவதும் கூடத் தன் கற்புக்கு இழுக்காகுமெனக்கருதி, அதனைத் தவிர்த்து விடுகிறாள். இந்திய நாட்டின் கற்புப் பெருமையைக் காக்கவும், தனக்கு முன்பு வாழ்ந்த கற்பரசிகளின் வழி நடக்கவுமே கணவன் செய்த கொடுமைகளைச் சகித்திருந்ததாக அவனிடமே குறிப்பிடவும் செய்கிறாள்.[13]

**பொருந்தாமண உறவிலிருந்து மீட்சி :** தொடக்ககாலத் தமிழ் நாவல்களில், கற்புக் கோட்பாடு, திட்டவட்டமாக வரையறுக்கப்பட்ட நிலையில் அமைந்திருப்பதால், பெண், தன் பொருந்தா மண உறவிலிருந்து மீட்சி காண முயலுவதும்கூட இழுக்கென்றே பெரும்பாலும் அவை சித்திரிக்கின்றன. இப் பொதுப்போக்கிலிருந்து மாறுபட்டுச் சிந்தித்த சில நாவல்களும் உண்டு.

**பத்மாவதி சரித்திரம்** நாவலில், கற்புக் கோட்பாட்டை மிகவும் இறுக்கமுடையதாகக் காட்டிக் கணவனின் சாவுக்காகச் சாவித்திரியைத் தலைமழித்து விதவைக்கோலம் கொள்ளவைத்த மாதவையா, **முத்துமீனாக்ஷி** நாவலில், கதைத் தலைவியின் மறுமண முடிவைச் சமுதாயம் ஏற்கும் வகையில் நியாயப்படுத்திக் காட்டுகிறார். விவரமறியாத மிக இளம் வயதில் திருமணம் செய்து வைக்கப்பட்டதாலும், பின்னரும் கணவனால் பல கொடுமைகளுக்கு ஆட்பட்டுக் காதலுணர்வு எத்தகையது என்றுகூட அறியும் திறமற்றுப் போனதாலும், கணவன் இறந்த பிறகு முத்து மினாக்ஷிக்குச் செய்யப்படும் மறுமணம், அவள் கற்புக்குக் களங்கத்தை உண்டாக்கி விடவில்லையென அவர் நிலைநாட்டுகிறார்.

பொருந்தாத திருமணப் பந்தத்தை, எவ்வாறேனும் பொறுத்து வாழ்வதே 'கற்பு' என்ற நிலையில் நெகிழ்வு ஏற்

13. வானக்குயில் அல்லது வாழ்க்கையின் நாதம், ப. 179

பட்டதையும், பெண்கள் வேறுபட்ட கோணத்திலும் சிந்திக்கத் தொடங்குவதையும் அடுத்தடுத்து எழுந்த நாவல்கள், எதிரொலிக்கத் தொடங்குகின்றன.

'கல்கி'யின் **தியாக பூமி** நாவலின் தலைவி சாவித்திரி, தன் கணவனின் அலட்சியப் போக்கினால் பெரிதும் பாதிக்கப் பட்டவள். எட்டு மாதக் கருவுடன், தாய் வீட்டுக்குத் தனியாக விரட்டப்பட்ட நிலையில், அவளது மனநிலை கடுமையாக இறுகிப்போகிறது. இறுதியில் அவள் நல்லநிலை அடைந்தபின், கணவன் அவளோடு வாழவிரும்பித் தாம்பத்திய உரிமைகோரி அவள்மீது வழக்குத் தொடுக்கிறான். அப்பொழுது, அவனுக்குத் தான் ஜீவனாம்சம் கொடுக்க முன்வருவதாக அவள், பின்வருமாறு முழங்குகிறாள்.

''ஒரு பெண்ணை அவள்பேரில் இஷ்டமில்லாத புருஷனுடன் வாழும்படி நிர்ப்பந்தப்படுத்துவது நீதியா?... இவருக்கு ஜீவனாம்சம் கொடுக்கத் தயாராயிருக்கிறேன். ஆனால் இவருடன் சேர்ந்து வாழ்வதற்கு மட்டும் சம்மதிக்கமாட்டேன். ஒரு நாளும் மாட்டேன்''[14] புராணக் காலத்துச் சாவித்திரியின் கற்புக்கதையை மேற்கோள் காட்டி, அவள் தந்தை அறிவுரை கூற முற்படும் நிலையில், ''...அந்தப் பழைய கதையெல்லாம் இந்தக் காலத்துக்குப் பொருந்தாது''[15] என்றும் அவள் வாதிடுகிறாள்.

கா. ஸ்ரீ. ஸ்ரீ.யின் **காந்தம்** நாவலில், திருமண நேரத்தில், வரதட்சிணைத் தொகையை அதிகப்படுத்தும் செயலால் ஆத்திர முற்ற காந்தம், தன் தாலியைக் கழற்றி மணமகன்மீது வீசியெறிந்துவிட்டு வெளியேறுகிறாள்.

இக்காலக்கட்டத்தைச் சேர்ந்த நாவலாசிரியையும், புகழ் பெற்ற நடிகையுமான டி.பி. ராஜலக்ஷ்மி எழுதிய புரட்சிகரமான நாவலாகிய **கமலவல்லி**யில், தன் விருப்பத்திற்கு மாறாகத் தன் வளர்ப்புப் பெற்றோர் திருமணம் செய்துவைத்தபோது, தன் காதலைக் கணவனிடமே கூறி, அவன் துணையுடனேயே காதலித்தவனை மணக்கிறாள் கதைத்தலைவி கமலவல்லி. தாலி அணிவித்தால் மட்டும் ஒருவன் கணவனாகிவிடமாட்டான் என உணர்ந்துள்ள இப்பெண், மனத்தால் காதலித்தவனுக்கு உண்மை

---

14. **தியாக பூமி, ப. 297.**
15. **மேலது, ப. 336.**

யாக இருப்பதே கற்பு என உணர்ந்து, அதனைக் காத்தும் கொள்கிறாள் என்பது குறிப்பிடத்தக்கது.

**முறைபிறழ்ந்த உறவுகளும், கற்புக் கோட்பாடும்**

தன் கணவனல்லாத பிற ஆடவருடன் ஒரு பெண் உறவு கொள்ளுகையில், சமூகம் வகுத்த கற்புக் கோட்பாட்டில் பாதிப்பு நேர்வதையும் விடுதலைக்கு முன்னுள்ள தமிழ் நாவல்கள் எடுத்துக் காட்டியுள்ளன. எனினும் இவ்வாறான முறைபிறழ்ந்த உறவுக்குத் தனிமனித மனவக்கிரங்கள் காரணமாகக் காட்டப் பெறவில்லை என்பதும், சமூகக் கொடுமைகளையே அப்போக்கிற்குக் காரணமாக அவை சித்திரித்துள்ளன என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

குழந்தை மணம், வரதட்சிணைக் கொடுமை, விதவை மறுமணத் தடை, விவாகரத்து முதலிய சமூகக் கொடுமைகளே பெண்களைப் பரத்தைத் தொழிலில் ஈடுபடுத்துவதாகப் புரோமில் லாகபூர் என்பார் குறிப்பிடுகிறார்.[16] பொருந்தா மணமும், முறை பிறழ்ந்த உறவுகளுக்குக் காரணமாவதை, ''ஆண்-பெண் இணை சேர்ப்பானது விருப்பத்தின் அடிப்படையில் அமையப் பெறுவதில்லை-ஒருவகையான நிர்ப்பந்தங்களினாலேயே அமைகிறது. இதனால் 'கடனே' என்று வாழ்கின்ற இயந்திர வாழ்க்கையில் நெருடல்கள் தோன்றுகின்றன. இத்தகைய சூழல்களில், மிகவும் அழுத்தமான ஒருதார மணவாழ்க்கையானது ஒரு சிறைக்கூடமாக ஆகிவிடுகிறது. இதனால் எங்கெல்ஸ் கூறுவதுபோல சோரம் போதல் ஒரு சமூக நியதியாக ஆகிவிடுகிறது''[17] என்று தி.சு. நடராசன் விளக்குகிறார்.

இளமை மணத்தின் உடனிகழ்வாகக் கணவனை இழந்து விதவையான பெண்ணுக்கு மறுமணம் மறுக்கப்படும் நிலையிலும், பொருந்தா மண உறவிலிருந்து மீட்சி காண வழியில்லையென்ற நிலையிலும் இத்தகைய முறைபிறழ்ந்த உறவுகள் நேர்ந்திருப்பதை நாவல்கள் வெளிப்படுத்துகின்றன.

**பத்மாவதி சரித்திரத்தில்,** கிழவரான சேஷையருக்கு மனைவியான பன்னிரண்டு வயதுப் பெண், பிற ஆடவருடன் தவறான

---

16. Promilla Kapur, The Life and World of Call-girls in India, PP. 24, 25.

17. தி. சு. நடராசன், ''தி. ஜானகிராமனின் நாவல்கள்'', **தமிழ் நாவல்கள் ஒரு மதிப்பீடு,** நா. வானமாமலை, (ப.ஆ.) ப. 111.

உறவு கொண்டிருக்கக் கூடுமென்ற செய்தி, அப்படைப்பில் பின் வருமாறு நுட்பமாகச் சுட்டப்படுகிறது.

''சேஷையர் மனைவியாகிய கமலாம்பாளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்திருந்தது. ஊரிலுள்ள வீணர்கள், அக்குழந்தையின் முகச் சாயல்களைக் குறித்துப் பலவிதமாக அவதூறு பேசினார்கள்.''[18]

மறுமணம் மறுக்கப்பட்ட நிலையில், விதவைப் பெண்கள் மரபுநெறிக்கு மாறான வழியில் உறவு கொண்டு குழந்தை பெற்ற செய்தி, நாவல்களில் பரவலாக இடம் பெற்றிருப்பது முன்னரும் குறிப்பிடப்பட்டது.[19]

**முடிவுகள்**

விடுதலைக்கு முன்னெழுந்த தமிழ் நாவல்கள், கற்பு என்னும் சமூக மதிப்புக் குறித்த அன்றைய இறுக்கமான கருத்து நிலைகளைக் காட்டுவதோடு, காலப்போக்கில் அவற்றில் ஏற்படத் தொடங்கிய நெகிழ்வுப் போக்குகளையும் வெளிக்காட்டுகின்றன.

கணவன் இறந்த பிறகு கைம்மை பூண்டு வாழும் பெண்ணும், பொருந்தா மண உறவைப் பொறுமையோடு தாங்கும் பெண்ணுமே தொடக்ககாலத் தமிழ் நாவல்களில் கற்பரசியாக வருணிக்கப்பட்டிருக்கிறார்கள். எனினும் இப்பொதுப் போக்கிலிருந்து மாறுபட்டு, மாதவையாவின் முத்துமீனாக்ஷி என்ற படைப்பு, விதவை மறுமணம், கற்புநிலைக்கு மாறுபட்டதன்றெனக்குரல் கொடுக்கிறது.

பெண்ணின் கற்புநெறி பாதிக்கப்படாத நிலையிலும் கூட, அது தொடர்பாக எழும் வெற்றுப் பழியுரைகள் அவள் வாழ்வினைத் துன்பத்துக்காளாக்குவதை, இக்காலக்கட்டத்தைச் சேர்ந்த நாவல்கள் வெளிப்படுத்துகின்றன.

பொருந்தா மண உறவிலிருந்து விடுபடுதல், கற்புக் கோட்பாட்டிற்கு மாறானதன்று என்ற உணர்வு சமூகத்தில் அரும்பத் தொடங்கியிருந்த நிலையினையும் நாவல்கள் வழி அறிய முடிகிறது.

சமுதாயத்தில் கற்புக் கோட்பாடு, ஒருபுறம் கடுமையாக வலியுறுத்தப்பட்ட போதும், மற்றொரு புறம், சமூகக் கொடுமைகள், முறைபிறழ்ந்த உறவுகளுக்குக் காரணமாகியிருப்பதையும் நாவல்கள் எடுத்துரைக்கத் தவறவில்லை.

---

18. பத்மாவதி சரித்திரம், 146.
19. காண்க, இயல் 3, பக். 18-19.

# பெண்ணுரிமை

இன்றைய சூழலில், பெண்ணுரிமை என்பது தனி ஒரு கோட்பாடாகவே வளர்ச்சி பெற்று வருகிறது. இச்சொல்லுக்கு இணையாகப் 'பெண்விடுதலை', 'பெண்நிலை வாதம்' 'பெண்ணியம்' ஆகிய வழக்காறுகளும் நிலவி வருகின்றன. ஆண்களோடு ஒத்த அரசியல், சமூக, பொருளாதார, சமத்துவ நிலையினைப் பெண்களும் அடைய வேண்டுமென்னும் விழைவே இக்கோட்பாட்டின் தோற்றுவாய்க்குக் காரணமெனலாம்.

பெண்ணுரிமை என்பது ஓர் இயக்கமாகவும், கோட்பாடாகவும், பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவில் தோற்றம் பெற்றது.[1] இக்காலக்கட்டத்தில் வாழ்ந்த காண்டார்செட் (Condorcet) என்னும் தத்துவ அறிஞர், இக்கோட்பாட்டிற்கு ஆதரவான கருத்துக்களை வெளியிட்டிருப்பதை அறியமுடிகிறது.[2] 18, 19ஆம் நூற்றாண்டுகளில், உலக அரங்கில் நிகழ்ந்து வந்த தொழிற்புரட்சி, பெண்ணுரிமைக்குச் சாதகமானதொரு சூழலைத் தோற்றுவித்தது. தொழிற்களங்களில் ஆண்களோடு இணைந்து பெண்களும் பணியாற்றுகையில், அவர்களோடொத்த உரிமைகள் பெண்களுக்கும் தேவை என்பது, இயல்பாகவே உணரப்படலாயிற்று. 1789ஆம் ஆண்டில் நிகழ்ந்த பிரெஞ்சுப் புரட்சியின் போது சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய மனித

---

1. Leon L. Bram, Robert S. Philips, Norma H. Dickey (Ed.), Funk and Wagnalls New Encyclopaedia, Vol. XXVII, P. 376.

2. Robert P. Gwinn, Charles E. Swanson, Philip W. Goetz (Ed.), The New Encyclopaedia Britannica, Vol. XII, P. 733.

உரிமைக் குரல்களோடு, பெண்மைச் சமத்துவத்துக்கான கோரிக்கைகளும் ஒருங்கிணைந்து எழுச்சி பெற்றன.[3]

இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த மேரி உல்ஸ்டோன் கிராப்ஃட் என்னும் அம்மையார், பெண்ணுரிமையை அழுத்தமாகப் பறைசாற்றும் வகையிலமைந்த தம் நூலினை (A Vindication of the Rights of Woman) 1792ஆம் ஆண்டில் வெளியிட்டார்.[4] இதே காலக்கட்டத்தில், ஸ்வீடன், நார்வே, அமெரிக்கா ஆகிய நாடுகளிலும், சிறுசிறு அளவில் பெண்ணுரிமை அமைப்புக்கள் உருப்பெறலாயின. 1848ஆம் ஆண்டில் நூறு அமெரிக்கப் பெண்கள், 'செனகா ஃபால்ஸ்' என்னுமிடத்தில் ஒன்றுகூடி நிகழ்த்திய மாநாடு, இவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.[5] பிரிட்டனைச் சார்ந்த ஜான் ஸ்டுவர்ட் மில் என்பார், பெண்ணடிமையின் அவலம் குறித்து எழுதிய நூல் (The Subjection of Women-1869) அந்நாட்டுப் பெண்களிடையே விழிப்புணர்வு ஏற்படக் காரணமாயிற்று.[6] உருசிய, சீனப் புரட்சிகளுக்குப்பின், அந்நாடுகளில் அமைந்த பொதுவுடைமை அரசுகள், பால் சார்ந்து மக்களைப் பாகுபடுத்துவதையும், தந்தைவழிச் சமூக அமைப்பையும் எதிர்த்ததால், அங்கு, பெண்ணுரிமை இயக்கங்கள், தடையின்றி வளர்ச்சி பெற்றன.

இரு உலகப் போர்களும் முடிந்தபின், உலகின் பல பகுதிகளிலுமுள்ள பெண்களும் படிப்படியாகக் கல்வித் தரத்தில் மேம்படவும், வாக்குரிமை முதலிய உரிமைகளைப் பெறவும் தொடங்கினர். முன்னேறிய நாடுகளின் அறிவியல், தொழில்நுட்ப வளர்ச்சிகளும், பொருளாதார முன்னேற்றங்களும் சமூக உறவில் பல மாற்றங்களைக் கொணர்ந்த காரணத்தாலும், மகளிர் நிலை, சமுதாயத்தில் முன்னேற்றம் பெறலாயிற்று.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், பெண்ணின் அடிப்படை உரிமைகள் ஓரளவு மீட்கப்பட்ட நிலையில், பெண்ணுரிமை இயக்கங்களின் நோக்கமும், போக்கும் வேறுவகையான கண்

பெ.

3. A. R. Gupta, Women in Hindu Society, P. 164.

4. Chandrakala, A. Hate, Changing Status of Women, P. 3.

5. Leon L. Bram, Op. cit., P. 377.

6. Chandrakala, A Hate, Op. cit., P 3.

ணோட்டத்தில் மாற்றம் பெற்றன. இன்றைய சூழலில், பெண்களின் புறத் தோற்றத்திலும், நடவடிக்கைகளிலும் மாறுதல் விளைந்திருந்தபோதும், குடும்ப, சமூக அமைப்புக்களிலும், பண்பாட்டடிப்படையிலும் பெண்கள், ஆண்களைவிடத் தாழ்ந்தவர்களாக, இரண்டாந்தரக் குடிமக்களாகவே நடத்தப்படுவதை சைமன்டி பியூவோர் ('The Second Sex-1949) பெட்டி ஃப்ரீடன் ('The Feminine Mystique'-1963') ஆகியோரின் நூல்கள் சுட்டிக் காட்டிப் பெண்ணுரிமை இயக்கம், வேறுபோக்கில் திசை திருப்பப் படக் காரணமாயின.[7] ஆணின் வசதிக்காக உருவாக்கப்பட்ட ஆணாதிக்கச் சமூக அமைப்பு, மாற்றியமைக்கப்பட வேண்டுமென்பதும், மரபுவழியாகப் பெண்ணுக்கு உரியதெனத் தனித்து ஒதுக்கப்பட்ட பங்குநிலைகளும், கடமைகளும் மறுபரிசீலனைக்கு உட்படுத்தப்பட வேண்டுமென்பதும், கல்வி, சமயம், அரசியல், வேலை வாய்ப்பு என எத்துறையாயினும் பால்பாகுபாட்டின் அடிப்படையில் பெண் ஒதுக்கப்படாமல் அவளுக்கும் சமவாய்ப்பு அளிக்கப்பட வேண்டுமெனக் கோருவதும் இன்றைய பெண்ணுரிமை இயக்கங்களின் இன்றியமையாத சில நோக்கங்களாக அமைகின்றன.

இவ்வாறு, உலக நிலையில் வளர்ச்சி பெற்றுவரும் பெண்ணுரிமை இயக்கங்களின் தாக்கத்தை இந்தியாவிலும் காண முடிகிறது. எனினும், பெண்ணுரிமைக் கண்ணோட்டத்துடன் இங்கு நிகழ்ந்த சமூக மாற்றங்களை முழுக்க முழுக்க அயலகப் பாதிப்பினால் நேர்ந்தவை என்றும் கூறிவிட இயலாது. உரிமை எழுச்சிக்கான தூண்டுதலை மேலை நாட்டிலிருந்து பெற்றபோதும் இங்கு நிலவிய அரசியல், சமய, பண்பாட்டுச் சூழல்களுக்கேற்பவும், அவற்றால் பாதிக்கப்பட்ட பெண்களின் தேவைகளைக் கருத்தில் கொண்டும், அந்த அடிப்படையிலேயே இந்தியாவில் இவ்வியக்கம், படிப்படியாக வேர்பிடித்து வளர்ச்சியுற்றதென வீணா மஜூம்தார் குறிப்பிடுகிறார்.[8]

கிழக்கு நாடுகளைப் பொறுத்தவரை, ஆண் சீர்திருத்தவாதிகளே பெண்ணுரிமைப் போராட்டத்தைத் தொடங்கி வைப்பதில்

---

7. Robert P. Gwinn, Op. cit., P. 733

8. Vina Mazumdar. "The Social Referm Movement in India-From Ranade to Nehuru," Indian Women From Purdah to Modernity, B. R. Nanda (Ed.), p. 41.

பங்கு பெற்றிருக்கின்றனர்.[9] இந்தியாவிலும், சமய, சமூக, அரசியல் சீர்திருத்தங்களில் முனைந்திருந்த இராசாராம் மோகன் ராய், ஈசுவர சந்திர வித்தியாசாகர், மகரிஷிகார்வே, காந்தியடிகள் முதலிய ஆண்களே பெண்ணின் உரிமைப் பிரச்சினையில் முதன் முதலாக ஈடுபாடு காட்டினர். அரசியல் இயக்கத்தில் மிதவாதியாக விளங்கிய எம். ஜி. இரானடே என்பார், 1887ஆம் ஆண்டில் தோற்றுவித்த தேசியசமூகமாநாடு (**The National Social Conference**) என்னும் அமைப்பு, மகளிர் சார்ந்த சமூகப் பிரச்சினைகளை விவாதிக்க ஓர் அரங்கினை ஏற்படுத்தித் தந்தது.[10]

இந்தியப் பெண்ணுரிமை இயக்கத்தின் உருவாக்கத்தில், ஐரிஷ் நாட்டுப் பெண்களான அன்னிபெசண்ட் அம்மையாரும் மார்க்கிரெட் கசின்ஸ் என்பாரும், சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களின் முயற்சியால், 1917ஆம் ஆண்டில் துவக்கப்பட்ட இந்தியப் பெண்கள் கழகமும் (**Women's Indian Association**) அனைத்திந்தியப் பெண்கள் மாநாடும் (**All India Women's Conference**), ''இளமை மண எதிர்ப்பு, சார்தா சட்ட உருவாக்கம், சொத்துரிமை பேணல், திருமணச் சட்டங்கள் முதலிய மகளிர் முன்னேற்ற''[11] நடவடிக்கைகளில் ஈடுபாடு காட்டின.

இந்தியப் பெண்கள் கழகத்தின் தலைவரான அன்னிபெசண்ட், சென்னையைத் தனது வாழிடமாகக் கொண்டிருந்ததால், அதன் பல நடவடிக்கைகள், தமிழகத்தை மையமிட்டதாக அமைந்தன. பெண்களுக்கு வாக்குரிமை வழங்குவதிலும், சட்டமன்ற, பாராளுமன்றப் பங்கேற்பு உரிமைகளை வழங்குவதிலும் கூட, அப்போது சென்னை மாகாணம் என்று அழைக்கப்பட்ட தமிழகமே முன்னின்றது. விதவைப் பெண்களின் மறு வாழ்வுக்காக உழைத்த சகோதரி சுப்புலட்சுமியும், தேவதாசி முறைஒழிப்பிற்குப் பாடுபட்ட முத்துலட்சுமி ரெட்டியும் தமிழகத்திலேயே தங்கள் பணிகளை ஆற்றினர். தமிழிலக்கியப் படைப்பாளிகளாகவும், சீர்திருத்தவாதிகளாகவும் விளங்கிய வேதநாயகம்பிள்ளை, மாதவையா, சுப்பிர

---

9. சீனா-ஹாங்-யு-வெய்; எகிப்து-அகமட்ஃபெயார் எல்சிட்யாக்- ஆதாரம் : **மார்க்சியமும், பெண் நிலை வாதமும், ப. 6.**

10. Jana Matson Everelt, Women and Social Change in India, p. 60

11. S. S. Natarajan, A Century of Social Reforms in India, P. 134.

மணிய பாரதியார், திரு. வி. கல்யாண சுந்தரனார், ஈ. வே. ராமசாமி (பெரியார்), ஜி. சுப்பிரமணிய ஐயர், அண்ணாதுரை எனப் பலரும் தமிழகத்தில் பெண்விடுதலையில் ஆர்வம் கொண்டு செயலாற்றினர்.

மேற்குறித்த வகையில், காலப் போக்கில் இந்தியப் பெண்ணின் நிலை எழுச்சியுறப் பலரும் முயற்சிகளை மேற்கொண்டு வந்துள்ள போதும், அவர்களின் முயற்சிகள், பெண்ணின் அடிப்படை உரிமைகள் சிறிதளவு மீட்கப்படவும், அவளுக்கு ஓரளவு சமத்துவம் கிடைக்கவும் மட்டுமே உதவியுள்ளன. பெண்களை இரண்டாந்தரக் குடிமக்களாய்க் கருதும் போக்கு, மேனாடுகளை விடவும், மரபுவழிபட்ட இந்தியச் சமூகத்தில் கடுமையாகவே நிலவி வருகிறது. ''ஒரு பெண், வெறும் தாயாகவும், மனைவியாகவும் மட்டும் இருந்தால் போதாது. வேறு வகையிலும் அவள் தன்னை நிரூபித்துக் கொள்ள வேண்டும் என்று கூறுதல் எளிது; ஆயின் தொன்றுதொட்டு வரும் சமூக மரபுகளும், உடற்கூறுகளும் மாற்றம் காணாத நிலையில், எந்த வகையில் அவள் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டுமென வரையறுத்துக் கொள்ளலும், அதனை நிறைவேற்றலும் அரிது''[12] என்னும் கார்ல் பியர்சனின் கூற்றுப்படி, பண்பாட்டு மரபுகளையும் புறக்கணிக்காமல்-அதே வேளையில் தன் தனித்தன்மையினையும் காத்துக்கொள்ள, இந்தியப் பெண் பெரியதொரு போராட்டமே நிகழ்த்த வேண்டியுள்ளதெனலாம்.

**நாவல்களில் பெண்ணுரிமை**

தற்போதைய காலக்கட்டத்தில், ஆழ்ந்ததொரு சமூகச் சிந்தாந்தமாகவும், இலக்கியக் கோட்பாடாகவும், பல பரிமாணங்களுடன் விரிவான வளர்ச்சி பெற்று வரும் பெண்ணியச் சிந்தனை, தமிழ் நாவல்களின் தொடக்கநிலையிலேயே அரும்பத் தொடங்கி விட்டதென்பது, குறிப்பிடத்தக்கது. விடுதலைக்கு முந்தைய தமிழ் நாவல்களில் இடம் பெறும் அக் கருத்தாக்கம், கீழ்க்காணும் உட்தலைப்புகளில் பகுத்துக் கொள்ளப்பட்டு விளக்கப்படுகிறது.

1. **பெண்ணுரிமைக்கான நோக்கங்கள்**
2. **பெண்ணுரிமைச் சிந்தனை, செயலாக்கம் பெறும் முறைகள்**

---

12. **Karl Pearson, Grammar of Science, P. 10, Quoted in Chandrakala, A. Hate, Op. cit., P. 9.**

## 3. பெண்ணுரிமைக் கோட்பாடும், சமய, இதிகாச, மரபுச் செய்திகளும்.

### 1. பெண்ணுரிமைக்கான நோக்கங்கள்

இந் நோக்கங்கள், சில பொதுவான அடிப்படைகளைக் கொண்டிருந்தபோதும், அந்தந்த நாட்டில் நிலவும் பண்பாட்டுச் சூழலுக்கேற்பவும், காலச் சூழலுக்கேற்பவும் அவ்வப்பொழுது சில நோக்கங்கள் அதிகமாக அழுத்தம் பெறுவதையும் காண முடிகிறது. காலங்காலமாகப் பெண்ணுக்கு மறுக்கப்பட்டு வந்த அடிப்படை உரிமைகள் அவளுக்கு மீட்கப்பட வேண்டுமென்பதே தொடக்ககாலத் தமிழ் நாவல்களில் முதன்மையான நோக்கமாக வலியுறுத்தப்பட்டிருக்கிறது. குடும்ப, பொது வாழ்வில் பெண்ணுக்குச் சமத்துவம் தரப்பட வேண்டுமென்பது, அதனை அடுத்த நிலையில் அழுத்தம் பெறுகிறது. பெண்ணின் தனித்தன்மை மதிக்கப்படவேண்டுமெனக் கோருவதும், பெண்ணை இழிவு செய்யும் போக்கினை எதிர்ப்பதும் இன்றைய படைப்பிலக்கியக் கருப்பொருளாக இடம் பெறுமளவுக்கு விடுதலைக்கு முன்னுள்ள படைப்புக்களில் காட்டப்பெறவில்லை. அந்நோக்கம், மிகச் சிறு பான்மையாகவே அவற்றில சித்திரிக்கப்பெற்றிருக்கிறது.

**அடிப்படை உரிமைகளின் மீட்சி:** உலகநிலையிலும், இந்தியச் சூழலிலும் பெண்ணுரிமைச் சிந்தனை அரும்பியதற்கான முதல் நோக்கம், சமுதாயத்தில், பெண்ணுக்கு மறுக்கப்பட்டு வந்த ஆதாரமான மனித உரிமைகளை அவளுக்கு மீட்டுத்தருவதே யாகும். கல்வி மறுப்பு, திருமணத்தில் கணவனைத் தேர்ந் தெடுக்கும் உரிமையின்மை, இளமை மணம், பொருந்தா மணம், கைம்மைக் கொடுமை ஆகிய தீமைகள் இந்தியப் பெண்ணின் அடிப்படை உரிமைகளைப் பறிக்கும் வழக்கங்களாக நிலவி வந்த பான்மையும், அவற்றின் மீட்சிக்காகத் தொடக்கக் காலத் தமிழ் நாவலாசிரியர்கள், தம் படைப்புக்களின் வழியாகப் போராடிய தன்மையும், முந்தைய இயல்களில் விரிவாக எடுத்துக் காட்டப் பட்டு விட்டதால், மீண்டும் அவை இங்கு வினக்கப் பெற வில்லை.

**குடும்ப, சமூக அமைப்புக்களில் சமத்துவம்:** குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம் குறித்து விளக்கும் எங்கெல்ஸ், வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில், சமூக உற்பத்தி யில் பெண்களும் பங்கு கொண்டு வந்த காலச்சூழலில், பெண்ணடிமை நிலவவில்லையென்றும், தனிச்சொத்துரிமையின்

தோற்றத்தால் தாய்வழி உரிமை பெற்ற குழுக்கள், தந்தைவழி அமைப்புக்களாக மாறிய பிறகே, குடும்ப, சமூக மட்டங்களில் பெண்ணடிமை தோன்றலாயிற்று என்றும் குறிப்பிடுகிறார்.[13] அந்நிலையில் தாய்மையடையும் தன்மை படைத்த உடற்கூற்றமைப்பைக் காரணமாகக் காட்டிக் குடும்ப அமைப்பினுள்ளேயே அவள் முடக்கி வைக்கப்பட்டாள். சமூக உற்பத்தியில், தன் பங்கை ஆற்ற முடியாதபடி, பெண் ஒதுக்கப்பட்டதால், குடும்ப வருவாயை ஈட்டுபவனான ஆணைச் சார்ந்தே இயங்க வேண்டிய சுதந்திரமற்ற நிலைக்கு, அவள் ஆட்பட நேர்ந்தது. ஆணும், பெண்ணும் ஒத்த மதிப்புடையவர்களெனக் கருதப்பட்டு வந்த நிலை மாறிப் புறக்கடமைகள் ஆணுக்குரியன என்றும், இல்லக் கடமைகள் பெண்ணுக்குரியன என்றும் வரையறுக்கப்பட்டுப் பாகுபடுத்தப்பட்டதும் இந்தச் சூழலிலேதான்.

வழிவழியாகச் சமூகத்தில் நிலைத்துப் போன மேற்குறித்த மரபுகளுக்கு உடன்பட்டுக் கருத்துச் சுதந்திரமோ, தன் விருப்பப் படி செயலாற்றும் சுதந்திரமோ அற்றவளாய்த் தன் சமத்துவமற்ற நிலையினைப் பெண் எதிர்ப்புக் காட்டாமல் ஏற்கும் நிலையே, இந்தியச் சமூகத்தில் 19ஆம் நூற்றாண்டின் இறுதி வரையில் நிலவி வந்தது இக்காலக் கட்டத்திற்குப் பிறகு சமூக மறுமலர்ச்சிக்காக நேர்ந்த மாற்றங்கள், பழைய நிலையில் மாற்றம் தேவைப்படுவதைப் படிப்படியாக உணர்த்தலாயின.

இச்சமத்துவச் சிந்தனை, தொடக்கக் காலத் தமிழ் நாவல்களிலேயே முளைவிடத் தொடங்கி விடுகிறது. **பத்மாவதி சரித்திரம், ஜயசீலன்** ஆகிய படைப்புக்களில், இளைஞர்களாகிய கதைத் தலைவர்கள், பெண், போகப் பொருளாகவும், அடிமையாகவும் நடத்தப்படுவதைப் பற்றிச் சிந்திக்கிறார்கள். **ஜயசீலன்** நாவலில், மிகச் சுருக்கமான அளவில் மட்டுமே இடம் பெற்றுள்ள இச் சிந்தனை,[14] அதற்கு முன்னெழுந்த **பத்மாவதி சரித்திரம்** என்ற படைப்பில், விரிவாகவும், விளக்கமாகவும் விவாதிக்கப்பட்டிருக் கிறது. தமிழின் முதல் புதினமாக எண்ணப்படும் **பிரதாப முதலியார் சரித்திரத்**திலேயே உரிமை பெற்ற பெண்கள் காட்டப்பட்டு விட்ட போதும், அச்சித்திரிப்பு, குறிக்கோள் நிலையிலேயே அமைகிறது. நடப்பியல் போக்கில் எழுதப்பட்ட நாவல்களில், பெண்ணுரிமைக்

---

13. பி. எங்கெல்ஸ், குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகிய வற்றின் தோற்றம், பக். 117, 118.

14. ஜயசீலன், ப. 188.

காகக் குரல் கொடுக்கும் முதற்படைப்பு **பத்மாவதி சரித்திரமே** எனலாம். நடப்பியல் அவலங்களையும், குறைபாடுகளையும் சித்திரிப்பதன் வாயிலாகப் பெண்ணுக்குச் சமத்துவம் வேண்டு மென்பதை அந்நாவல் அழுத்தமாகப் புலப்படுத்துகிறது.

குடும்ப வாழ்வில், பெண் தாழ்வாக நடத்தப்படுவதற்குக் காரணம், ''பிள்ளை பெறுவதையும், மடைத் தொழிலையும் தவிர வேறொன்றுக்குமே யோக்கியதையில்லாமல்...பெண்கள் சுதந்திரமில்லாதவர்களென்றும், எப்பொழுதும் பராதீனத்துக்கே அருகரென்றும், கேவலம் காமபாத்திரங்களென்றும் நாம் நினைத்து நடந்தும் நடத்தியும்''[15] வருவதே என்று **பத்மாவதி சரித்திரம்** நாவலில், நாராயணனும், கோபாலனும் நிகழ்த்தும் உரையாடலின் வழி மாதவையா குறிப்பிடுகிறார். கணவன், வெளிக் கடமைகளுக்கு உரியவனெனவும், மனைவி இல்லக் கடமைகளுக்கு உரியவளெனவும் ஏற்பட்ட வழக்கமே தவறென் றும்[16] ''...பெண்கள்தான் சமையல் முதலிய வீட்டு வேலைகளை யெல்லாம் செய்ய வேண்டுமென்று வைத்திருப்பதே பிசகு''[17] என்றும் அவர்கள் உரையாடுவது 1898 ஆம் ஆண்டின் காலச் சூழலிலேயே பெண்மைச் சமத்துவம் குறித்து மாதவையா கொண் டிருந்த முற்போக்கான மனப்பான்மையை வெளிப்படுத்துகிறது.

தொடக்கக் காலத் தமிழ் நாவல்களில், **நளினசுந்தரி** என்னும் ஒரு படைப்பு மட்டும், பெண்ணுக்குச் சமத்துவம் தேவையில்லை யெனவும், ஆணுக்கு அடங்கி அவனுக்குப் பணிசெய்து வாழ்வதி லேயே அவள் வாழ்வு நிறைவடைகிறதென்றும் அறிவுறுத்து கிறது.[18] இந் நாவலாசிரியர் சுப்பிரமணிய சிவா, பெண்களின் முன்னேற்றம் குறித்து மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டவரா தலின், பெண்ணுரிமைக் கோட்பாட்டை மறுக்கும் வகையில், அதனை உருவாக்கியுள்ளாரெனலாம். உரிமை கோரும் பெண்கள் அனைவரும் பாலுறவுச் சுதந்திரம் வேண்டுபவர்களே என்ற தவறான எண்ணத்தைத் தூண்டும் வகையில், இந் நாவலின் தலைவி **நளினசுந்தரி**, அவரால் உருவாக்கப்பட்டிருக்கிறாள். தான் பெற்றுள்ள உரிமைகளைத் தவறான வழிகளில் அவள் பயன்

---

15. **பத்மாவதி சரித்திரம்**, பக், 285, 286.
16. மேலது
17. மேலது
18. **நளினசுந்தரி**, பக். 139-140.

படுத்துவதாகவும், ஆண் நண்பர்களுடன் கட்டற்ற வாழ்வினை நடத்துவதாகவும் காட்டுவதன் வழியாகப் பெண்ணுரிமையை எதிர்க்கும் தன் போக்கினை நாவலாசிரியர், நியாயப்படுத்த முயல்கிறார்.

1930 ஆம் ஆண்டிற்குப் பிறகு எழுந்த தமிழ் நாவல்களில் சமத்துவ நோக்கம், மேலும் வலுப்பெறத் தொடங்குகிறது. பெண் பாத்திரங்களின் மன ஓட்டங்களிலும், கூற்றுக்களிலும் இச் சமத்துவ நோக்கம், இந்நாவல்களில் சித்திரிப்புப் பெறத் தொடங்குகிறது.

**தியாக பூமி** நாவலின் தலைவி சாவித்திரி, தன் கணவனையே தாய். தந்தை; குரு, தெய்வம் என அனைவராகவும் ஏற்க வேண்டுமென அவள் தந்தை சம்பு சாஸ்திரி, அவளுக்கு அறிவுறுத்தியிருக்கிறார்.[19] அவளும் அவ்வாறே நடந்து கொள்ள முயன்றபோதும், தன்னிடம் சிறிதுகூட அன்பின்றி அலட்சியமாக நடந்து கொள்ளும் கணவனின் போக்கு, அவளிடம் வெறுப்பைத் தூண்டுகிறது. ''கல்யாணம்னு பண்ணினுட்டா, புருஷன் எப்படி இருந்தாலும் அவனைக் கட்டிண்டுதான் மாரடிச்சாகணும்...நம் தேசத்திலே உன் மாதிரி எத்தனையோ பேர்''[20] என அவளைச் சார்ந்தோர் கூறும் ஆலோசனைகளை அவள் ஏற்கவில்லை. சமத்துவமற்ற குடும்ப அமைப்பில் அடிமையாக உழலுவதைவிடப் பொருளாதார உரிமை பெற்றுத் தனித்து வாழவே அவள் விழைகிறாள்.

**காந்தம்** என்ற படைப்பில் தொடக்கம் முதலாகவே சுதந்திர மனப் போக்குள்ளவளாகக் காட்டப்படும் கதைத் தலைவி காந்தம், ஆணைச் சார்ந்து அமைவதே பெண்ணின் வாழ்வென்ற கொள்கையை உறுதியாக மறுப்பவள். ''தெய்வம் பெண்களையும், ஆண்களைப்போல வாழத்தான் படைத்திருக்கிறது,...அடிமைகளாகக் கிடந்து தலையாட்டி மயக்கும் பொம்மைகளாக நடனமாடிக் குதித்து, குழந்தைகளைப் பெற்றுத் தள்ளிக் கொண்டு தன் துன்ப வாழ்வை வெளியிடச் சீவனற்ற யந்திரங்களாகச் சுழன்று,

---

19. தியாக பூமி, பக். 222, 223.

20. மேலது, ப. 168.

21. காந்தம், பக். 30-31.

உருண்டு மாய்வதற்கு அல்ல[21] என அவள் கொண்டிருந்த சமத்துவ மனப் போக்கினை நாவல் வெளிப்படுத்துகிறது.

இக்காலக்கட்டத்தில் வெளிவந்த வ. ரா.வின் **கோதைத்தீவு**, நடப்பியல் தன்மைக்கு மாறான உயர் கனவு நாவ (**utopian novel**) லாகும்.[22] இப்படைப்பு, பெண் விடுதலை குறித்த ஆசிரியரின் எண்ணங்களைக் குறிக்கோள் நிலையில் வெளியிட்ட போதும், பெண்மைச் சமத்துவமற்ற நிலையினை நடப்பியற் கண்ணோட்டத்திலும் சித்திரிக்கிறது. ''பெண்ணை இந்தத் தேசத்திலே மனுஷ ஜன்மம் கொண்டவளாகவே கருதவில்லை. அவள் ஆண்பிள்ளையின் சொத்தாகத்தான் பாவிக்கப்பட்டு வந்திருக்கிறாள்''[23] என்று கணபதிராயனும், பூபதிராயனும் நிகழ்த்தும் உரையாடலில் குறிப்பிடும் ஆசிரியர் வ. ரா., இவ்வாறு அடிமை நிலைக்குத் தாழ்த்தப்பட்ட காரணத்தினாலேயே பெண், கணவனுக்குத் துணையாக இருக்க இயலாமல், சுமையாக மாறிப் போகிறாளென்றும் அப்படைப்பின் வழியே தமது கருத்தை வெளிப்படுத்துகிறார்.[24]

**தனித்துவம் போற்றல் :** ஒரு பெண்ணைத் தேவதையாகவும், சாத்தானாகவும், இயந்திரமாகவும், கருவியாகவும், பணியாளாகவும், போகப் பொருளாகவும் எனப் பல நிலைகளிலும் ஏற்கத் தயாராக இருக்கும் ஆடவன், தனித்துவமுள்ள ஒரு மனிதப் பிறவியாக மட்டும் அவளை ஏற்கத் தயங்குகிறான்'' என்பார், டி. எச் லாரன்ஸ்.[25] பெண்ணுக்கு அமைந்திருக்கும் சிறப்பான ஆற்றல்களும், அவளின் தனிப்பட்ட ஆர்வங்களும், மரபு வழிபட்ட அவளது பங்கு நிலை காரணமாக நசித்துப் போய்விடலாகாதென்பது, பெண்ணியக் கோட்பாட்டின் இன்றியமையாத நோக்கங்களில் ஒன்றாகும்.

பெண்ணின் தனிப்பட்ட ஆளுமை வளர்ச்சிக்கு அதிக இடமில்லாத தொடக்கக்காலத் தமிழ் நாவல்களில், இந்நோக்கம், மிகுதியாகச் சித்திரிக்கப்படவில்லை. **பத்மாவதி சரித்திரம்**, **ஜயசீலன்**

---

22. இரா. தண்டாயுதம். **சமூக நாவல்கள்**, சு. வேங்கடராமன் (மொ. பெ. ஆ.), ப. 273.

23. **கோதைத் தீவு**, ப. 36

24. **மேலது**, ப, 35.

25. Quoted in Tara Tli Baig, India's Women Power, P. 38.

ஆகிய படைப்புகளில் முறையே நாராயணனும், ஜயசீலனும் தம் மனைவியரின் தனித்திறமைகளை மதித்துப் போற்றுவோர் என்ற அளவில் மட்டுமே அவை காட்டுகின்றன. காந்தம் நாவலில் தன் தனிப்பட்ட ஆர்வங்களைச் செயலாக்குவதற்குத் திருமண அமைப்பு தடையாகி விடுமோ என்ற அச்சத்தில், காந்தம் திருமணமின்றி வாழ எண்ணுகிறாள். அவள் தந்தை, அதற்கு உடன்பட மறுப்பதால் அவள் எண்ணம் நிறைவேறாமல் போகிறது.

**இழிவு படுத்தப்படுத்தலை எதிர்த்தல் :** சமூக வாழ்விலும், இலக்கியங்களிலும், வணிக நோக்கில் நடந்தப்படும் இதழ்களிலும் திரைப்படம், விளம்பரங்கள், சுவரொட்டிகள் ஆகிவற்றிலும் பெண், ஒரு பாலுறவுச் சின்னமாக மட்டுமே சித்திரிக்கப்பட்டு, இழிவுபடுத்தப்படுதலை எதிர்த்து, நாடெங்குமுள்ள பெண்ணுரிமை இயக்கங்கள், போராட்டங்களும், ஊர்வலங்களும் நடத்தி வருகின்றன. மக்கள் தொடர்புச் சாதனங்கள் பெருமளவில் பெருகியிராத இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுந்த நாவல்கள், அந்நோக்கத்தை அவ்வளவாகச் சித்திரிக்கவில்லை. விடுதலைக்கு முன்னெழுந்த நாவல்களில், வ.ரா. வின் **கோதைத்தீவு** மட்டுமே, இந்நோக்கத்தைத் தொட்டுக் காட்டியிருக்கிறது. இந்நாவலில் 'கோதைத்தீவு' என்னும் கனவுநிலைச் சமூகத்தைப் பெண் முதன்மைப்பட்ட சமூகமாகச் சித்திரிக்கும் வ.ரா. அத்தீவில் சிற்றின்ப நோக்குடன் பெண்ணைச் சித்திரிக்கும் முறையில் எழுதப்பட்ட பட்டினத்தார் பாடல்கள் தடை செய்யப்பட்டிருந்ததாகவும்,[26] பெண்ணை உயர்த்திப் பாடிய பாரதிக்கு அங்கு விழா எடுக்கப்படுவதாகவும்[27] காட்டுவதன் வழி; இந்நோக்கத்தைப் புலப்படுத்துகிறார்.

## 2. பெண்ணுரிமைச் சிந்தனை, செயலாக்கம் பெறும் முறைகள்

தமிழ் நாவல்களைப் பொறுத்தவரையில், பெண்ணின் உரிமை உணர்வு, தனிமனித நோக்கு, பொது நோக்கு என்னும் இரு நிலைகளில் செயலாக்கம் பெற்றிருப்பதைக் காண முடிகிறது. பெண், தன் உரிமை உணர்வைத் தனிக்குடும்பம் என்ற எல்லைக்குள் மட்டும் செயல்படுத்துகையில், அது தனிமனித நோக்குநிலை என்றும், பெண்ணினம் முழுவதற்குமான நலன் கருதியதாகப் பரந்த சமூக அடிப்படையில் உரிமை உணர்வு செயலாக்கம் பெறுகையில், அது பொதுநோக்கு நிலை எனவும் கொள்ளப்படுகிறது.

---

26 **கோதைத் தீவு, ப. 78**

27. **மேலது.**

தாம் வாழும் குடும்பச் சூழலுக்கேற்ப, அங்கு எதிர்ப்பட நேரும் சிக்கல்களின் தன்மைகளை ஒட்டியதாகத் தங்கள் உரிமை உணர்வைச் செயல்படுத்தும் பெண்கள், குடும்ப அமைப்புக்குள் இருந்துகொண்டே தம் உரிமையைச் செயல்படுத்துவதும் உண்டு; உரிமை உணர்வைக் காப்பதற்காகக் குடும்ப அமைப்பிலிருந்தே நிரந்தரமாய் விலகிச் சென்றுவிடுவதும் உண்டு. முதலில் குடும்ப அமைப்பிலிருந்து விலகிச் சென்றுவிட்டுப் பின், திரும்பவும் அதற்குள்ளேயே மீண்டுவிடும் பெண்களையும் நாவல்கள் காட்டுகின்றன.

**தனிமனித நோக்கிலான செயல்பாடு**

குடும்ப அமைப்பினுள் செயல்படுதல் : இந்தியச் சூழலில், பெண்ணுரிமைக் கோட்பாடு, தொடக்க நிலையில் அறிமுகம் செய்விக்கப்பட்டபோது, அதன் நோக்கம், குடும்ப வாழ்வின் தரத்தை மேம்படுத்துவதாக மட்டுமே அமைந்திருந்தது.[28] பொது வாழ்வில் பெண், ஆணுடன் போட்டிபோடும் நிலையோ, இல்லக் கடமைகளில் ஆணும் பங்கு பெறவேண்டுமென்ற கோரிக்கையோ, இவ்வியக்கம் அரும்பத் தொடங்கிய புதிதில் காணப் பெறவில்லை. இத் தொடக்கக் கட்டச் செயல்பாட்டினையே நாவல்களும் காட்டுகின்றன.

குடும்ப அமைப்புக்குள்—எவ்வித முரண்பாடும் போராட்டமுமின்றிப் பெண், தன் உரிமை உணர்வை வெற்றிகரமாய்ச் செயல்படுத்துவதைப் **பத்மாவதி சரித்திரம், ஜயசீலன்** ஆகிய நாவல்கள் சித்திரிக்கின்றன. இவ்விரு நாவல்களின் தலைவியர்க்கும், கணவன்மாரின் முழுமையான ஆதரவும், ஒத்துழைப்பும் கிடைக்கிறது. **பத்மாவதி சரிததிரம்** நாவலில், தன் மனைவி பத்மாவதிக்குக் கல்விப் பயிற்சியளித்து, உரிமை உணர்வு குறித்த சிந்தனைகளை அவளுக்கு ஊட்டுபவன், அவள் கணவன் நாராயணனே. வீட்டு அமைப்பினுள், அனைத்துத் துறைகளிலும் அவன் அவளுக்கு உரிமையளிக்கிறான். தன்னுடன், கூட்டங்களுக்கும், வெளி இடங்களுக்கும் அழைத்துச் செல்கிறான். **ஜயசீலன்** நாவலில், இயல்பிலேயே உரிமை உணர்வு படைத்தவளாக விளங்கும் சரஸ்வதிக்கு, அவள் கணவன் ஜயசீலனின் துணையும் கிடைக்கிறது. மனைவியை, வீட்டமைப்பினுள் ஒத்த மதிப்புடனும் அன்புடனும் அவன் நடத்துகிறான். அவன் ஆட்சித் தலைவரான பிறகு, அவன் துணையுடன் சரஸ்வதி, பொதுப் பணிகளிலும் ஈடுபட முடிகிறது.

---

28. Jana Matson Everelt, Op. eit., P. 66.

மேற்குறித்த இரு நாவல்களும், ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள், பெண்ணுரிமைச் செயல்பாட்டைச் சித்திரிக்கின்றன; மேலும் குடும்ப அமைப்பினுள் பெண்ணுரிமை என்பது எவ்வாறு செயலாக்கம் பெற வேண்டுமென இலட்சியப்படுத்தப்பட்ட நிலையில் காட்டுவதும், இப்படைப்புக்களின் நோக்கமாய் அமைந்திருக்கிறது.

**குடும்ப அமைப்பிலிருந்து விலகிச் செல்லுதல்:** குடும்ப அமைப்பினுள், தன் உரிமை உணர்வைச் செயலாக்க முயன்று, அது நிறைவேறாத நிலையில், அந்த அமைப்பிலிருந்தே குறிப்பிட்ட பெண் நிரந்தரமாக விலகிச் சென்றுவிடுவதைக் **காந்தம்** நாவல் காட்டுகிறது. இப்படைப்பில் இடம் பெறும் துணைப் பாத்திரமாகிய நீலவேணி, வயது பொருந்தாத திருமணத்தால் தன் வாழ்வையே பாழாக்கிவிட்ட கணவனின் செயலுக்கு எதிர்ப்புக் காட்டும் வண்ணம் வீட்டிலிருந்து நிரந்தரமாக வெளியேறுகிறாள். அவள், உரிமை உணர்வு பெறுவதற்குத் தூண்டுகோலாக அமைந்த தலைமைப் பாத்திரமாகிய காந்தம், குடும்ப அமைப்புக்குள் மீண்ட பின்பும் கூட, தான் அவ்வாறு செய்ய, நீலவேணி மறுத்து விடுகிறாள்.

**குடும்ப அமைப்பிலிருந்து விலகித் திரும்ப அதனுள் மீளல் :** பெண்கள், தாம் கொண்ட உரிமை உணர்வைச் செயல்படுத்தும் வேகத்தில், முதலில்குடும்பஅமைப்பிலிருந்து விலகிச்சென்றுவிட்டுப் பின்னாளில்அதற்குள்ளேயே மீண்டு விடுவதான சித்திரிப்பு, **தியாக பூமி, காந்தம்** ஆகிய நாவல்களில் அமைந்திருக்கிறது. இப்படைப்புக்களைப் பொறுத்தவரை, குடும்ப அமைப்பிலிருந்து விலகிச் சென்ற பெண்கள் தாமாக அதனுள் மீளவில்லை. வரதட்சிணை, சீர்வரிசை முதலிய பிரச்சினைகள் காரணமாக அவர்களுடன் மன வேறுபாடுற்ற கணவன்மார், மனம் மாறி வந்து அவர்களை அழைக்கையில், அதனை ஏற்று அவர்கள் குடும்ப அமைப்புக்குள் மீள்வதான சித்திரிப்பே இவற்றில் இடம் பெற்றிருக்கிறது.

**தியாக பூமி** நாவலில் கதைத்தலைவி சாவித்திரி. கணவனுடன் இறுதியில்இணைந்தாலும், அது, பெரியதொருபோராட்டத்திற்குப் பின்பே செயலாக்கம் பெறுகிறது. முன்பு பணத்தாசையால் தன்னை ஒதுக்கி வைத்த கணவன் ஸ்ரீதரன், மீண்டும் தன்னுடன் இணைய முன்வருவதற்குத் தற்பொழுது தன்னிடமுள்ள செல்வச் செழுமையே காரணமெனச் சாவித்திரி எண்ணுகிறாள். அக்காரணத்தினாலேயே மண உறவைத் திரும்பப்பெறும் தாம்பத்திய உரிமை கோரி, அவன் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்கை

யில். ''...உலகமெல்லாம் 'சுதந்திரம், சுதந்திரம்' என்று முழங்கிக் கொண்டிருக்கும் இந்நாளில் ஒரு பெண் பேதையைச் சட்டத்தின் பேரால் இத்தகைய கொடுமைக்கு ஆளாக்கலாமா?''[29] என்று நீதிபதியிடமே அவள் துணிவுடன் வாதிடுகிறாள். ஓர் ஆண், தன் மனைவியை ஒதுக்கி வைத்தால் அவளுக்கு ஜீவனாம்சம் அளிப்பதைப் போலத் தானும் தன் கணவனுக்கு ஜீவனாம்சம் தரத் தயாராக இருப்பதாகவும் அவள் குறிப்பிடு கிறாள்.[30] 1939 ஆம் ஆண்டின் காலச்சூழலில், பெண்ணுரிமைக் கோட்பாட்டின் உச்சக்கட்டமாக இவ்வாறானதொரு சிந்தனைப் போக்கினை ஆசிரியர் கல்கி அமைத்திருப்பது, வியத்தற்குரிய தாகும்.

மேற்குறித்த வகையில் நிகழ்ந்த சாவித்திரியின் வழக்கு சமூ கத்தில் ஏற்படுத்திய பரபரப்பை — மரபுவழிப்பட்ட பெண்களின் எதிர்ப்பையும், சுதந்திர மனப் போக்குடைய பெண்களின் ஆதர வையும் — சுட்டிக்காட்டவும் அந்நாவல் தவறவில்லை. வழக் கிற்குத் தீர்ப்புக் கூறும் நீதிபதியும் கூடச் சாவித்திரியின் தரப்பி லுள்ள நியாயத்தை உணர்ந்து அவளுக்காக மனம் இரங்கு கிறார். எனினும் அவளது கோரிக்கையை ஏற்கச் சட்டத்தில் இடமிலிலையென்பதால் அவள் கணவனுக்கு ஆதரவாகத் தீர்ப்பளிக்கிறார். இத் தீர்ப்பிலிருந்து விடுபடுவதற்காகவே, நாட்டு விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்டு, சாவித்திரி சிறை செல்கிறாள். அதே வேளையில் மனமாற்றம் பெற்ற அவள் கணவனும் விடுதலைப்போரில் கலந்துகொண்டு சிறைப் பட, சிறைச்சாலையில் அவர்கள் மனங்கள் கலந்ததாக அந்நாவல் நிறைவடைகிறது. கணவனுக்கு ஜீவனாம்சம் தருமளவுக்கு உச்சத்தில் சென்ற கதை நிகழ்வுக்கு, இவ்வாறானதொரு முடிவு செயற்கைத் தன்மையுடையதாகவே அமைந்திருக்கிறது.

**காந்தம்** நாவலில், வரதட்சிணைப் பிரச்சினை காரணமாக மணமேடையில் தாலியைக் கழற்றி வீசி விட்டு வெளியேறிய காந்தம், பல ஆண்டுகள் கழித்துத் தன் கணவன் சந்திரசேகரன், தன் செயலுக்காக வருந்தி மன்னிப்புக் கோரும் நிலைமையில் அவனோடு இணைந்து வாழ உடன்படுகிறாள். முன்பு கழற்றிய தாலியை அவளிடமே தந்து, தனக்கு அளிக்குமாறும் அவனைக் கேட்டுக்கொள்கிறாள்.

---

29. **தியாக பூமி, ப. 297.**

30. **மேலது.**

பெண்ணுரிமைச் செயலாக்கத்தை உச்ச அளவு வரையில் இந்நாவலாசிரியர்கள் காட்டியுள்ளபோதும், இறுதியில் அப்பெண்கள், குடும்ப அமைப்புக்குள் மீள்வதாகக் காட்டவே அவர்கள் விரும்புகின்றனர். நாவலுக்கு மகிழ்வான முடிவுதரும் நோக்கமும், குடும்ப அமைப்பே பெண்ணுக்குப் பாதுகாப்பானது என்று அவர்கள் கொண்ட கருத்தும், இதற்குக் காரணங்களாதல் கூடும்.

**பொதுநோக்கிலான செயல்பாடு :** பெண்ணுரிமைக் கோட்பாட்டின்பொதுநோக்கிலான செயல்பாடு, தமிழின் தொடக்ககால நாவல்களிலேயே காட்டப்பெற்றிருக்கிறது **பத்மாவதி சரித்திரம், ஜயசீலன்** ஆகிய நாவல்களின் தலைவியர், பெண்களின் முன்னேற்றத்துக்கான நடவடிக்கைகளில் தம்மை இணைத்துக் கொள்கின்றனர் மகளிர் மறுமலர்ச்சிக்காக நடைபெறும் கூட்டங்களில் பத்மாவதி பங்குபெறுவதைப் பத்மாவதி சரித்திரம் குறிப்பிடுகிறது. **ஜயசீலன்** என்ற படைப்பில், பெண்கல்வி வளர்ச்சியில் சரஸ்வதி ஈடுபடுகிறாளென்னும் செய்தி இடம் பெறுகிறது. பொதுநல நோக்கிலான இப்பெண்களின் செயல்பாடு மிகக் குறைந்த அளவுடையதாகவே இருப்பினும், இந்நாவல்கள் எழுந்த காலச் சூழலைக் கருத்தில் கொண்டு காணுகையில், இக் குறைந்தபட்சப் பங்கேற்பைக் காட்ட முற்பட்டிருப்பதும்கூட முற்போக்குச் சிந்தனையின் தெறிப்பாகவே கொள்ளுதற்கு ஏற்றதெனலாம்.

**தியாக பூமி** நாவலின் தலைவியாகிய சாவித்திரி, மகளிர் உரிமைக்கான பொது நடவடிக்கைகளில் நேரடியாகப் பங்கு பெறாவிடினும், தன் உரிமை காக்க அவள் நிகழ்த்தும் போராட்டம், சமூகத்தில் பிற பெண்களிடத்திலும் உரிமை உணர்வு கிளர்ந்தெழத் தூண்டுகோலாக அமைந்து விடுகிறது. நீதிபதியின் தீர்ப்பு, சாவித்திரிக்கு ஆதரவாக அமைய வேண்டுமெனக் கூட்டம் போட்டுப் பேச வேண்டுமெனச் சில மாதர் அமைப்புக்கள் திட்டமிடுவதையும் நாவல் காட்டுகிறது. தன் போராட்டம் பெண் குலத்தின் நன்மை குறித்த பொது நோக்கில் நிகழ்த்தப்பட்டதென்பதை ''நான் எனக்காக மட்டும் இந்தக் கேஸை நடத்தினேன் என்றா நினைக்கிறீர்கள்? பெண் குலத்துக்காகவே அல்லவா நடத்தினேன்? புருஷர்கள், ஸ்திரீகளுக்குச் செய்யும் அநீதிகள் வெளியாகட்டும் என்பதற்காகத்தான் இவ்வளவு கஷ்டப்பட்டேன்''[31] என்று சாவித்திரியும் குறிப்பிடுகிறாள். **காந்தம்** நாவலில், இளமை முதலாகவே பெண் குலத்திற்குத் தொண்டாற்றுவதில் விருப்பம் கொண்டிருக்கும் காந்தம், பின்னாளில் கணவனை விட்டுப் பிரிந்து

31. மேலது, ப. 333.

வந்த பின், தன் அத்தை வீட்டில் தங்கிப் பெண் கல்விக்காகவும், சமூக ஊழல்களைப் பெண்களுக்கு எடுத்துக்கூறி, அவர்களுக்கு உலகியலறிவு புகட்டுவதற்காகவும் பணியாற்றுகிறாள்.

வ. ரா.வின் **கோதைத்தீவு** என்னும் நாவல், இவ்வகையிலான பொதுநோக்கச் செயல்பாட்டை, மிக விரிவாகத் தனிப்பட்ட முறையில் சிறப்பாக எடுத்து விளக்குகிறது. கோதைத்தீவு என்ற பெயர் கொண்ட கற்பனையான சமுதாய அமைப்பின் ''வாழ்க்கைத் தத்துவமே பெண் சுதந்திரத்தை''[32] மையமிட்டதாய் அமைந்திருக்கிறது. மரபுவழிச் சமூகத்தில் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு மாற்றாக இப்புதிய சமூகம் பெண்களாலேயே உருவாக்கப்பட்டதை, அப்படைப்பு, பின்வருமாறு குறிப்பிடுகிறது.

''இந்தத் தீவுக்குத் துவக்கத்தில் நூறு பெண்கள் வந்தார்கள் ...ஆண் மக்கள் பெண்களைப் படுத்தும் பாட்டைப் பார்த்துப் பொறாதவர்களாய், இந்த நாட்டுக்குக் குடியேறி வந்தார்கள்... பத்து ஆண்டுகளுக்குப் பின்னர், பெண் விடுதலையில் நாட்டமுள்ள ஆண் பிள்ளைகள் இங்கு வந்தனர். அவர்கள் நூறு கன்னிமார் வகுத்த சட்டதிட்டங்களை ஒப்புக்கொண்டு வாழ்ந்து வந்து இவர்களுடன் மணம் செய்து கொண்டார்கள்.''[33]

நடப்பியற் சமூகத்திலுள்ள குறைகள் களையப்பட்டுப் பெண்ணுரிமைத் திட்டங்கள், இத்தீவில் வெற்றிகரமாய்ச் செயல்படுவதைக் கீழ்க்காணும் பல வகைகளில் வ. ரா. விவரித்துக் காட்டுகிறார்.

கோதைத்தீவில் கட்டாயத் திருமணம், சீதனம் முதலிய கொடுமைகள் இல்லை. திருமணங்கள் அவரவர் விருப்பப்படியே நிகழ்கின்றன. விதவை என்ற சொல், பெண்ணுக்கு மட்டுமே வழங்கப்படுவதால் அது தவிர்க்கப்பட்டுக் கணவனை இழந்த பெண் 'முளி' எனவும், மனைவியை இழந்த கணவன் 'மோழை' எனவும், ஒத்த நிலையில் அங்கே அழைக்கப்படுகின்றனர். மறுமணம் புரியும் உரிமை, இருபாலார்க்கும் அளிக்கப்படுகிறது.

குடும்ப வாழ்விலும், பொதுவாழ்விலும் ஆண், பெண் ஆகிய இருவர்க்கும் கோதைத்தீவில் ஒத்த பங்கு அளிக்கப்படுகிறது. அரசியல் பொறுப்பிலும், சமயக் கடமைகளிலும், போர்த் தொழில், பயிர்த்தொழில் ஆகியவற்றிலும் பெண்ணும் பொறுப்பேற்கிறாள். சமையல் முதலிய வீட்டுக் கடமைகள், ஆணுக்கும் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. ''சுதந்திரமுள்ள பெண்களுடன்

32. கோதைத் தீவு, ப. 84.
33. மேலது, ப. 70.

பிறவி முதல் பழகி வரும் ஆண் குழந்தைகள், திமிருடனும், பொய்க் கௌரவத்துடனும் வளர மாட்டார்கள்''[34] என்ற நோக்கத்துடன், இளமைப் பருவம் முதலாகவே ஆண் - பெண் குழந்தைகள் வேறுபாடின்றி வளர்க்கப்படுகிறார்கள். கல்வி நிலையங்களிலும் ஒன்றாகப் பயில்கிறார்கள். பெண்களை இழிவு படுத்தும் ஆடவர்கள், இச்சமூகத்தில் கடுந்தண்டனைக்கு ஆளாகி றார்கள். இச்சமூகத்தில் இழிவுபடுத்தும் இலக்கியங்களும் இத் தீவில் தடை செய்யப்படுகின்றன.

1945ஆம் ஆண்டின் காலச் சூழலிலேயே வ. ரா., தம் படை பில் குறிப்பிட்டிருக்கும் பெண்ணிய நோக்கிலான முன்னேற்றக் கருத்துக்கள், இன்றைய நிலையிலும் கூட முழுமையாகச் செய லாக்கம் பெறாதவையாக உள்ளன என்பது வருந்தத் தக்கதாகும்.

**பெண்ணுரிமைக் கோட்பாடும் சமய, இதிகாச மரபுச் செய்திகளுக்**

படைப்பாளிகள், தாங்கள் வலியுறுத்த விரும்பும் கருத்தும் களுக்கு அழுத்தம் தரும் வகையில், பழைய சமய, இதிகாச மரபுச் செய்திகளை எந்த மாற்றமுமின்றியோ, தம் கற்பனை கலந்து வேறுபட மாற்றியமைத்தோ பயன்படுத்தும் போக்கு, பொது வாகப் படைப்பிலக்கியங்களில் காணக்கூடிய ஒன்றாகும்.

இராமாயணத்தில் இடம்பெறும் அகலிகையின் கிளைக் கதை, மணிக்கொடி எழுத்தாளரான புதுமைப்பித்தனால் 'சாப விமோசனம்' எனச் சிறுகதை வடிவம் பெற்றுப் புதியதொரு கற்பனையை வெளிப்படுத்தியது போலவே, பிறிதொரு மணிக் கொடி எழுத்தாளராகிய வ.ரா.வின் வழியாகக் **கோதைத் தீவு** நாவலில், பெண்ணுரிமைக் கண்ணோட்டத்தில் மாற்றம் பெறு கிறது. கோதைத் தீவில் நிகழும் நாடகமொன்றில், அகலிகையின் வழக்கு மறு ஆய்வு செய்யப்படுவதாகவும், அகலிகையின் இளமை யைத் தன் தவ வாழ்வால் வீணாக்கியதோடு அவளைக் கல்லாகு மாறும் சபித்த கௌதமனே குற்றவாளி என்று தீர்ப்பு வழங்கப் படுவதாகவும், அப்படைப்பில் வ. ரா., கற்பனை செய்கிறார்.[35]

34. மேலது, ப. 71.

35. கோதைத் தீவு, பக். 99-108.

ஆண்டாளைப் பெண் விடுதலையின் முன்னோடியாகக் காட்ட முயலும் போக்கும், கோதைத் தீவு நாவலில் இடம் பெற்றிருக்கிறது.

மானிட வர்க்கென்று பேச்சுப்படில்

வாழகில் லேன்கண்டாய் மன்மதனே''[26]

என்று பாடிக் கடவுளைத் தன் கணவனாக ஆண்டாள் ஏற்றமைக்குப் பக்தியடிப்படையில் அல்லாத புதியதொரு காரணத்தை இந் நாவலில் காட்டுகிறார் வ. ரா. ஆண்களின் ஆதிக்கப் போக்கினையும், சிறுமைக் குணத்தையும் கண்டு மனம் நொந்து, அவர்களைப் புறக்கணிக்கும் நோக்குடனேயே கடவுளைத் தன் கணவனாக அவள் தேர்ந்து கொண்டதாக அவர் செய்துள்ள கற்பனை, நாவலில் இடம் பெற்றுள்ள பெண்ணுரிமைக் கருப் பொருளைச் சிறப்பிக்கும் நோக்குடனேயே அமைந்துள்ளதெனலாம்.[37] இக்காரணத்தினாலேயே. பெண் முதன்மை பெறும் சமூகஅமைப்பாக நாவலில் காட்டப்படும் தீவு, 'கோதைத் தீவு' என, ஆண்டாளின் பெயரால் அழைக்கப்பட்டதாகவும் அப்படைப்பு குறிப்பிடுகிறது.[38]

## முடிவுகள்

இந்தியப் பெண்ணுரிமை இயக்க வரலாற்றின் தொடக்க நிலையில், பெண்கள் மறுமலர்ச்சி பெற ஆடவர்கள் தூண்டு கோலாய் அமைந்தது போலவே, தமிழின் தொடக்கக்கால நாவல்களிலும், பெண்மைச் சமத்துவம் குறித்த கருத்துக்கள், ஆண் பாத்திரங்களின் வாயிலாகவே வெளிப்படுகின்றன. அவற்றைச் செயலாக்குபவர்களாகவும் அவர்களே அமைகின்றனர். தான், அடிமைப்பட்டுள்ள நிலையினைக் குறித்துப் பெண், தானே சிந்திக்கும் போக்கு, அடுத்தடுத்த காலச் சூழல்களிலேயே எழுச்சியுறத் தொடங்குகிறது.

விடுதலைக்கு முன் எழுந்த பெரும்பாலான நாவல்களில், பெண்ணின் அடிப்படை உரிமைகள் மீட்கப்பட வேண்டுமென்ற நோக்கமே முதன்மை பெற்றிருக்கிறது. பெண்ணுக்கு எல்லாத் துறைகளிலும் சமத்துவம் அளிக்கப்பட வேண்டுமென்பது, அதற்கடுத்த நிலையிலும், பெண்ணின் தனித்திறமைகள் மதிக்கப்பட

36. ஆண்டாள், நாச்சியார் திருமொழி, தையொரு திங்கள், 5.

37. கோதைத் தீவு, பக். 90-96

38. மேலது. ப. 95.

வேண்டுமென்பது சிறுபான்மையாகவும் நாவல்களில் எடுத்துரைக்கப்படுகிறது. இலக்கியங்களிலும், மக்கள் தொடர்புச் சாதனங்களிலும் பெண்ணை இழிவுபடுத்தும் போக்கு, கண்டிக்கப்பட வேண்டுமென்பது கோதைத் தீவு என்னும் ஒரு நாவலில் மட்டுமே இடம் பெற்றிருக்கிறது.

பெண்ணின் உரிமை உணர்வு, குடும்பம் என்ற களத்தில் செயலாக்கம் பெறுவதே நாவல்களில் பெருமளவில் இடம் பெற்றிருக்கிறது. மரபு வழிப்பட்ட குடும்ப அமைப்புக்கும், பெண்ணின் உரிமை உணர்வுக்கும் நிகழும் போராட்டத்தை நடப்பியற் போக்கில் காட்டாமல், குடும்ப அமைப்பினுள் அவளது உரிமை உணர்வு எந்தச் சிக்கலுமின்றிச் செயலாக்கம் பெறுவதாகத் தொடக்கக்கால நாவலாசிரியர்கள் குறிக்கோள் நிலையில் காட்ட முயன்றுள்ளனர். அதனை அடுத்த காலக்கட்டத்தில், பெண், தன் உரிமை உணர்வைச் செயல்படுத்தும் முயற்சியில் தவிர்க்க இயலாத சிக்கல்கள் நேருகையில், குடும்ப அமைப்பைத் துறந்து செல்வதாகச் சில நாவல்கள் சித்திரிக்கின்றன. அவற்றிலும், அவர்கள் மீண்டும் குடும்ப அமைப்பினுள் திரும்பி விடுவதாகக் காட்டி நாவலுக்கு நன்முடிவு தரவே படைப்பாளிகள் விரும்புகின்றனர். குடும்ப அமைப்பினுள் பெண்ணும் சமத்துவம் பெற வேண்டுமென்பதைக் காட்டுவதே அவர்களின் நோக்கமாக அமைகிறதேயன்றிக் குடும்பம் என்ற நிறுவனத்தையே மறுப்பதும், சிதைப்பதும் அவர்களின் நோக்கமாக அமையவில்லையென்பதும் நாவல்கள் வழியே புலப்படுகிறது.

# நிறைவுரை

விடுதலைக்கு முன் எழுந்த தமிழ் நாவல்கள், அவை எழுதப் பட்ட காலங்களில் நிலவிய சமூகச் சூழல்களுக்கேற்பப் பெண்கள் சார்ந்த பிரச்சினைகளை வெவ்வேறு போக்குகளில் வெளிப்படுத்தி யிருக்கின்றன.

தமிழின் தொடக்ககால நாவல்களில், இளமை மணக் கொடுமைகளும், அதற்கடுத்த நிலையில் எழுந்த படைப்புக்களில் விதவை நிலைத் துன்பங்களும் முன்னுரிமை பெற்றன. காலப் போக்கில், விதவையர்க்கு இழைக்கப்பட்டு வந்த தீங்குகள், குறையத் தொடங்கினாலும், விதவை என்ற சமூக மனத் தடை அகலாதிருப்பதை நாவல்கள் சுட்டிக் காட்டியிருக்கின்றன.

பெண் கல்வியின் தேவையைப் பிரச்சாரப் போக்கில் வற்புறுத் தும் தன்மை, ஆரம்பக் கால நாவல்களில் மிகுதியாகவும், அடுத் தடுத்து எழுந்த நாவல்களில் குறைவாகவும் அமைந்திருக்கிறது.

பெண்ணின் விடுதலை இயக்க—அரசியல் பங்கேற்பினை மிகக் குறைந்த அளவில்,—ஆணுக்குத் துணை நிற்கும் பங்காக மட்டுமே நாவல்கள் சித்திரித்திருக்கின்றன.

பெண்ணிடமிருந்து வரதட்சிணை பெறும் வழக்கத்தை விடவும், ஆணிடமிருந்து பொருளைப் பெற்றுப் பெண்ணைப் பொருந்தா மண உறவுக்கு வற்புறுத்தி விலைப்படுத்தும் அவலமே விடுதலைக்கு முன்னுள்ள நாவல்களில் மேலோங்கிக் காணப்படு கிறது.

தமிழின் தொடக்கக்கட்ட நாவல்களில் கற்புக் கோட்பாடு மிக அழுத்தமாக வற்புறுத்தப்பட்ட போதும், பொருந்தா மண உறவி லிருந்து விலகுவதாலும், விதவை மறுமணத்தாலும் கற்பு பாதிக்கப் பட்டு விடாது என்ற சிந்தனையும் அவற்றில் பதிவாகியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

விடுதலைக்குப் பின்—அதிலும் குறிப்பாக, மிக அண்மைக் காலத்திலேயே தனித்த ஒரு கோட்பாடாக முதிர்ச்சி பெற்று வரும் பெண்ணுரிமைச் சிந்தனை பற்றிய துணிவான பல கருத்துக்களை, இந் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே தமிழ்ச் சமூக நாவலாசிரியர்கள் வெளியிட்டிருப்பது வியப்பிற்குரியதாகிறது.

இளமை மணம், பெண்கல்வி மறுப்பு, விதவை மறுமண மறுப்பு, வரதட்சிணை தந்து பெண்ணை மணமுடிக்க முந்துதல், கற்புக் கோட்பாட்டை இறுக்கமுடன் விதித்துப் பெண்ணை அதற்கு இரையாக்குதல், பெண்ணுரிமைச் சிந்தனையை ஏளனமுடன் அணுகும் மனப்போக்கு ஆகிய அனைத்துக்குமே காரணம், தனித்துவமுள்ள ஒரு மனிதப் பிறவியாகப் பெண்ணைக் கருதாது, சார்பு நிலையுடையவளாகவே அவளை எப்போதும் எண்ணுதலும் குடும்பக் கடமைகட்கும், போகத்திற்கும் உரிய பொருளாக மட்டுமே அவளைக் கருதுதலுமேயாகும். இவ்வுண்மையினையே விடுதலைக்கு முன்னெழுந்த நாவல்கள், குறிப்பாகவும், வெளிப்படையாகவும் உணர்த்துகின்றன. அவற்றின் சித்திரிப்பு முறைகள் வேறுபட்டாலும், அவை தரும் முடிவுகள் இவ்வுண்மையை நோக்கியே ஒருமுகப்படுவதைக் காண முடிகிறது. ஆள்வோர் அமைத்துள்ள சட்ட வழிமுறைகள், பெண்களின் பிரச்சினைகளை ஓரளவுக்கே தீர்க்க முடியுமென்பதையும், மனித மனப் போக்கில் விளைந்தாக வேண்டிய மாற்றமே இவற்றுக்குச் சிறந்த தீர்வாக முடியுமென்பதையும் நாவல்கள் அழுத்தமாக எடுத்துரைக்கின்றன.

இளமைமண ஒழிப்பு முதல், பெண்ணுரிமைச் சிந்தனையைத் தூண்டுவது வரை—பெண்கள் விழிப்புணர்வு பெறுவதற்கான பல நடவடிக்கைகளிலும், ஆண்களின் பங்கையும் நாவல்கள் எடுத்துக் காட்டியிருக்கின்றன. ஆண் உறவினரின் ஆதரவு கிடைக்காத நிலையில், கல்வி மறுக்கப்பட்டும், (விதவை) மறுமணமின்றியும், பெண் துன்புற நேர்வதையும், பெண்ணின் அரசியல் பங்கேற்புக்கு ஆணின் துணை தேவைப்படுவதையும் அவை சுட்டிக்காட்டத் தவறவில்லை. இந்தியக் குடும்ப அமைப்பில் ஆணின் தலைமைத் தன்மை நீடிப்பதையும், பெண் வாழ்வில் நேரும் சிக்கல்கள், ஆணின் முடிவைப் பொறுத்தே கட்டுப்படுத்தப் படுவதையுமே நாவல்கள் வெளிப்படுத்தியிருக்கின்றன என்று கொள்ளலாம்.

கைம்மை, இளமை மணம், வரதட்சிணை ஆகிய தீமைகள், சமூகத்தில் உயர்குலத்தவராய்க் கருதப்பட்ட பிரிவினரிடத்திலேயே தொடக்கத்தில் நிலவி வந்தன என்பதையும், காலப் போக்கில், பிற இனத்தவரிடையேயும் அவ்வழக்கங்கள் செல்

வாக்குப் பெறத் தொடங்கின என்பதையும் நாவல்கள் உணர்த்து கின்றன. பொருளாதார நிலையில், நடுத்தர உயர்வர்க்கப் பிரிவு களைச் சார்ந்த பெண்களின் சிக்கல்களே நாவல்களில் பெரிதும் முதன்மை பெற்றிருக்கின்றன. வறுமைக் கோட்டுக்குக் கீழே பசி யாலும், பற்றாக்குறையாலும் அவதிப்படும் பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்களும், கூலிவேலை செய்யும் உழைக்கும் பெண் களின் போராட்டமும், விடுதலைக்கு முன்னெழுந்த தமிழ் நாவல் களில் போதிய அளவு இடம் பெறவில்லை.

இக்கட்டுரைத் தொடரில் இடம் பெற்ற மகளிர் சார்ந்த ஆறு கருத்து நிலைகளையும் வெளிப்படுத்துவதில், தொடக்கக்கால நாவல்கள் புலப்படுத்திய குறிக்கோள் நிலையிலான சித்திரிப்பு, காலப்போக்கில் நடப்பியல் போக்குடைய சித்திரிப்பாகப் பரிணாம வளர்ச்சியுற்றிருப்பதையும் காண முடிகிறது. நாவல் என்ற இலக்கிய வடிவம், தமிழுக்குப் புதியதாய் இருந்த காலக் கட்டத் தில் அது கருத்து வெளியீட்டுச் சாதனமாகவே பெரிதும் கொள்ளப் பட்டிருந்ததென்பதும், காலம் செல்லச் செல்ல எழுத்தாளர்கள், அதன் கலைக் கூறுகளை உணரத் தொடங்கி விட்டதால், நடப் பியல் தன்மையுடன் கூடிய ஒரு கலை வடிவமாக அதனைக் கையாளத் தொடங்கியிருப்பதும், இதற்குரிய காரணங்களாதல் கூடும்.

இந்நூற்றாண்டின் துவக்க நிலையில், இந்நாட்டில் நிகழ்ந்து வந்த சீர்திருத்த இயக்கங்கள், நாவலாசிரியர்கட்குத் தூண்டு கோலாக அமைந்து, அவர்தம் படைப்புக்களுக்கு மறுமலர்ச்சி வேகத்தையும், எழுச்சியினையும் ஊட்டியிருப்பதைத் தொடக்கக் கால நாவல்கள் வழி அறிய முடிகிறது. சமூக மாற்றத்தைத் தம் எழுத்துக்களின் வழியே சாதிக்க வேண்டுமென்ற முனைப்புடன், அப்படைப்பாளிகள், சீர்திருத்தவாதிகளைப் போலவே செயல்பட் டிருப்பதை அக்காலத்தில் எழுந்த நாவல்கள் உணர்த்துகின்றன. இக்காரணத்தினாலேயே அன்றைய சூழலில் மேலோங்கியிருந்த சமூகச் சீர்திருத்த இயக்கமான பெண் மறுமலர்ச்சி இயக்கம், விடுதலைக்கு முன்னுள்ள நாவல்களில் முதன்மை தந்து சித்திரிக் கப்பட்டிருக்கிறது.

இன்றைய சூழலில், ‘பெண்ணியம்’ என்பது சமூகவியல் கோட்பாடாகவும், திறனாய்வுக் கோட்பாடாகவும் பல பரிமாணங் களில் வளர்ச்சி பெற்றுவருகிறது. நடப்பிலுள்ள சமூகநியதிகளை—குடும்ப அமைப்பு முறைகளை எந்த மாற்றமுமின்றி—உள்ளவாறே

ஏற்றுக் கொண்டு, பெண்ணுக்கு எதிரான மரபார்ந்த கொடுமைகளை மட்டும் மாற்ற வேண்டுமெனக் குரல் கொடுக்கும் **மிதவாதப் பெண்ணியம்**, தந்தை வழிச் சமூக அமைப்பே பெண்ணடிமையின் தோற்றுவாய்க்குக் காரணமெனக் கூறி, வர்க்க ரீதியான சுரண்டலுடன் அதை இணைத்துக் காணும் **மார்க்சிய (சோசலிச)ப் பெண்ணியம்**, பால் அடிப்படையில் ஆணை உயர்த்தி வைத்து அவனுக்கு மேலாண்மை தரும் குடும்ப அமைப்பையே உடைத்தாக வேண்டுமெனக் கூறும் **தீவிரவாதப் பெண்ணியம்** எனப் பல பிரிவுகளாக இன்று இக்கோட்பாடு வகைப்படுத்தப்பட்டு வருகிறது எனினும், ''அனைத்துப் பெண்களுக்கும், எல்லாக் காலங்களிலும் பொருந்தக் கூடிய ஒரு பொதுவான வரையறையை இதற்குச் சொல்ல இயலாது. 17 ஆம் நூற்றாண்டில் பெண்ணுரிமை என்ற சொல் முதன்முதலில் உபயோகப்படுத்தப்பட்டபோது அது என்ன அர்த்தத்தைத் தந்ததோ அதனின்றும் இப்போது அது முற்றும் மாறுபட்டதாகவே இருக்கின்றது. வர்க்கப் பின்னணி, கல்வித் தகைமை, உணர்வுநிலை இவை போன்றவற்றைப் பொறுத்து உலகின் பல்வேறு பகுதிகளிலும் ஒரு தேசத்துக்குள்ளேயும் பல்வேறு வகையாகப் பேசப்படலாம்'' என்று தேவதத்தா குறிப்பிடுவது போல, விடுதலைக்கு முன்னுள்ள காலக் கட்டத்தில் நிலவிய சமூக, பண்பாட்டுச் சூழல்களுக்கும், தேவைகளுக்கும் ஏற்பத் தொடக்கக்கால நாவலாசிரியர்களும்—தங்கள் படைப்புக்களின் வழியே, பெண்கள் சார்ந்த மறுமலர்ச்சிச் சிந்தனைகளை—அவை மிதவாதமாகவே இருப்பினும்—மக்கள் அரங்கிற்குக் கொண்டு சென்றிருக்கின்றனர். பெண்கள் சார்ந்த பல பிரச்சினைகளும், மிகவும் தீவிரம் பெற்றுப் பன்முகத் தாக்குதலோடு, கடுமையாக அவர்களைப் பாதிக்கும்—விடுதலைக்குப் பின்னுள்ள இன்றைய சமூகச் சூழலில், மார்க்சிய (சோசலிச), தீவிரவாதப் பெண்ணியப் படைப்பிலக்கியங்களும் வெளிவருதல் என்பது காலத்தின் கட்டாயமாகிறது.

## குறிப்புக்கள்

1. ''பெண்ணியல் : ஒரு வரலாற்றுப் பார்வை'', தேவதத்தா, 'பெண்ணியம்', சு. சண்முகசுந்தரம் (தொ. ஆ), பக். 9-10.

# முதன்மைச் சான்று மூல நாவல்கள்

| எண் | முதற்பதிப்பின் ஆண்டு | புதினம் | ஆசிரியர் | ஆய்வில் ஒப்புநோக்கப்பெற்ற பதிப்பு |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1. | 1896 | கமலாம்பாள் சரித்திரம் அல்லது ஆபத்துக்கிடமான அபவாதம். | பி. ஆர். ராஜமையர் | திங்கள் பிரசுரம்; சென்னை, 1972 |
| 2. | 1898 | பத்மாவதி சரித்திரம் | அ. மாதவையா | வானவில் பிரசுரம், சென்னை, 1978 |
| 3. | 1900 | தீனதயாளு | பண்டித எஸ். எம். நடேச சாஸ்திரி | வானவில் பிரசுரம், சென்னை, 1980 |
| 4. | 1903 | முத்து மீனாக்ஷி | அ. மாதவையா | வானவில் பிரசுரம், சென்னை, 1981 |
| 5. | 1903 | விஜய மார்த்தாண்டம் | அ. மாதவையா | சுதேசமித்திரன் ஆபீஸ், 1922 |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. | 1914 | நளின சுந்தரி அல்லது நாகரிகத் தடபுடல் | சுப்பிரமணிய சிவா | வானவில் பிரசுரம், சென்னை, 1984 |
| 7. | 1915 | ஜயசீலன் | மீனாக்ஷி சுந்தரம்மாள் | மாக்மில்லன் கம்பெனி லிமிடெட், சென்னை |
| 8. | 1917 | சுந்தரி அல்லது அந்தரப் பிழைப்பு | வ. ராமசாமி ஐயங்கார் (வ.ரா) | பவானி பிரசுரம், சென்னை, 1946 2ஆம் பதிப்பு |
| 9. | 1925 | சந்திரிகையின் கதை | சுப்பிரமணிய பாரதியார் | பாரதி பிரசுராலயம், சென்னை, 1948 |
| 10. | 1929 | சாருலோசனா | வை. மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 11. | 1929 | கோபால ரத்னம் | வை. மு கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 12. | 1930 | வீரவஸந்தா அல்லது சுயேச்சையின் பரிபவம் | வை. மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 13. | 1931 | ஸாரமதி | வை. மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 14. | 1931 | கமலவல்லி அல்லது டாக்டர் சந்திரசேகரன் | டி.பி. இராஜலக்ஷ்மி அம்மாள் | டி.வி. பாலகிருஷ்ண நாயுடு, சென்னை |
| 15. | 1932 | தேசபக்தன் கந்தன் | கா.சீ. வேங்கடரமணி | சுவேதாரண்ய ஆச்ரமம், சென்னை |
| 16. | 1932 | ஸ்ரீதரன் | திருமதி என். சுவாமிநாதன் (மீனாக்ஷி சுந்தரம்மாள்) | ஆசிரியர், சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 17. | 1934 | யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன் | நாரண துரைக்கண்ணன் (ஜீவா) | ஆனந்த போதினி காரியாலயம், சென்னை, 1943, 2ஆம் பதிப்பு |
| 18. | 1939 | தியாக பூமி | கல்கி | மங்கள நூலகம் சென்னை, 1978 |
| 19. | 1940 | உணர்ச்சி வெள்ளம் | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை, 1947 |
| 20. | 1944 | மலர்ந்த இதழ் | வை. மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை, 1953 |
| 21. | 1944 | விஜயம் | வ. ராமசாமி ஐயங்கார் (வ. ரா.) | ஜோதி நிலையம், சென்னை |
| 22. | 1945 | அபராதி | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 23. | 1945 | கோதைத் தீவு | வ. ராமசாமி ஐயங்கார் (வ. ரா.) | புத்தக நிலையம், திருச்சி |
| 24. | 1945 | காந்தம் | கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார் (கா. ஸ்ரீ. ஸ்ரீ.) | கலைமகள் காரியாலயம், சென்னை |
| 25. | 1947 | பெண் | அகிலன் | பாரி புத்தகப் பண்ணை, 1980, 7ஆம் பதிப்பு |

# துணைச் சான்று மூல நாவல்கள்

| எண் | ஆண்டு | புதினம் | ஆசிரியர் | ஆய்வில் ஒப்புநோக்கப்பெற்ற பதிப்பு |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1. | 1879 | பிரதாப முதலியார் சரித்திரம் | வேதநாயகம் பிள்ளை | வானவில் பிரசுரம், சென்னை, 1979 |
| 2. | 1887 | சுகுண சுந்தரி | வேதநாயகம் பிள்ளை | வானவில் பிரசுரம், சென்னை, 1979 |
| 3. | 1893 | பிரேம கலாவத்யம் | ஸீ. வை. குருஸ்வாமி சர்மா | வானவில் பிரசுரம், சென்னை, 1980 |
| 4. | 1898 | மீதி இருள் | நாகர் கோவில் அருமை நாயகம் | கிறித்தவ லிட்ரேசர் சொஸைட்டி, சென்னை |
| 5. | 1900 | ஞானலோசனி எனும் ஓர் பதிவிரதையின் சரித்திரம் | நடராஜ அய்யர் | எக்கின் பாதம் அண்டு கம்பெனி, சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. | 1902 | திக்கற்ற இரு குழந்தைகள் | பண்டித எஸ். எம். நடேச சாஸ்திரி | வானவில் பிரசுரம், சென்னை, 1978 |
| 7. | 1903 | மனோரஞ்சனி | எஸ். பி. இராஜாராம் | சன் ஆஃப் இந்தியா பிரஸ், சென்னை |
| 8. | 1903 | கமலாக்ஷி சரித்திரம் | தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை | ஆர். எ. சிவசாம்பு, சென்னை |
| 9. | 1904 | விவேகரஸ வீரன் கதை | பாலசுப்பிரமணிய பிள்ளை | ஆசிரியர், திருவனந்தபுரம் |
| 10. | 1906 | கௌரி | பண்டிதை, விசாலாக்ஷி அம்மாள் | மினர்வா பிரஸ், சென்னை |
| 11. | 1906 | பங்கஜவல்லி | திருமயிலை, இராமலிங்க முதலியார் | தி ஸன் ஆஃப் இந்தியா பிரஸ், சென்னை |
| 12. | 1907 | ஞானரஞ்சனி | பண்டிதை, விசாலாக்ஷி அம்மாள் | வைஜயந்தி பிரஸ், சென்னை |
| 13. | 1907 | காமாக்ஷி | பிரணதார்த்திஹர சிவா | கணேஷ் அண்டு கோ, சென்னை |
| 14. | 1908 | சுஜாதா | பண்டிதை, விசாலாக்ஷி அம்மாள் | கார்டியன் அச்சுக்கூடம், சென்னை |
| 15. | 1908 | ஞானாம்பாள் | கஜாம்பிகை அம்மாள் | கார்டியன் அச்சுக்கூடம், சென்னை |
| 16. | 1909 | விராஜினி | பண்டிதை, விசாலாக்ஷி அம்மாள் | கார்டியன் அச்சுக்கூடம், சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 17. | 1910 | விஜய சுந்தரம் | தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை | அரோரா பிரஸ், சென்னை |
| 18. | 1911 | தருமசீலன் | மு. சொ சுந்தரேசன் செட்டியார் | சைவ சித்தாந்த அச்சியந்திர சாலை, தேவகோட்டை |
| 19. | 1912 | மீனாக்ஷி அல்லது ஒரு பிராமணக் குடும்பத்தின் விசித்திர கதை | .........(ஒரு வனவாசியால் இயற்றப்பட்டது) | மணவாள நாயகர், சென்னை |
| 20. | 1912 | நாயகனை வஞ்சித்த நாரி பட்ட பாடு | ............................ | ஸ்ரீ பத்மநாப விலாச அச்சுக்கூடம், சென்னை |
| 21. | 1912 | இந்துலீகா | டி. எஸ் ராஜம் ஐயர் | டி. கே. கிருஷ்ண ஐயர், நாகை |
| 22. | 1912 | தியாகராஜன் | இரங்கூன், ச. தா. மூர்த்தி முதலியார் | களத்தூர் முனிசாமிப் பிள்ளை (ப.ஆ.) சென்னை |
| 23. | 1913 | ஞானாம்பிகை | தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை | கார்டியன் அச்சுக்கூடம், சென்னை |
| 24. | 1913 | கருங்குயில் குன்றத்துக் கொலை | டி. எஸ். டி. சாமி | கார்டியன் அச்சுக்கூடம், சென்னை |
| 25. | 1914 | பொற்றொடி | குருமலை, சுந்தரம் பிள்ளை | இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை, 4 ஆம் பதிப்பு |

| | | | | |
|---|---|---|---|---|
| 26. | 1914 | சங்கரசுந்தரி | டி. வி. அய்யாசாமி ஐயர் | மகமடன் பிரஸ், மதுரை, |
| 27. | 1914 | தங்கக்கிளி | ................................ | வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ், தஞ்சாவூர் |
| 28. | 1914 | சுகிர்தா | திருமதி. ஜி. குமரேசன் | டி.எ.சி. பிரஸ், சேலம் |
| 29. | 1915 | மதுசூதனா | பி.சி. சண்முக சுந்தரம் பிள்ளை | ஸ்ரீ ராசம்சந்திர விலாசம் பிரஸ், மதுரை |
| 30. | 1915 | நளினாக்ஷி | கே.பி. சேஷாத்திரி ஐயங்கார் | ஸ்ரீரங்கா அண்டு கோ, சென்னை |
| 31. | 1916 | மத்தாப்பு சுந்தரம் அல்லது தாசிகளின் செய்கை | எம். கிருஷ்ண மூர்த்தி ஐயர் | அமிர்தவர்ஷணி அச்சுக்கூடம், கும்பகோணம் |
| 32. | 1917 | கோசிலாம்பாள் | எம். மாணிக்க வாசகம் பிள்ளை | சண்முகவிலாஸ் புக் டிப்போ, சென்னை |
| 33. | 1918 | உட்டாணி அல்லது கற்பின் வெற்றி | மாயவரம் எஸ்.எ. இராம ஸ்வாமி அய்யர் | இராஜேஸ்வர முதலியார், சென்னை |
| 34. | 1920 | காணாமற்போன கண்மணி | பு.வே. சபாபதி முதலியார் | ஸி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை |
| 35. | 1921 | கோகிலாம்பாள் கடிதங்கள் | மறைமலையடிகள் | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1957, 3ஆம் பதிப்பு |

| | | | | |
|---|---|---|---|---|
| 36. | 1921 | ராஜாம்பாள் | பி. அப்ரகாம் | ஆசிரியர், சென்னை |
| 37. | 1922 | சபேசன் அல்லது சுதந்திர ரக்ஷகன் | அரங்கசாமி ஐயங்கார் | திருநாவுக்கரசு அச்சுக் கூடம், ஆரணி |
| 38. | 1922 | காதலா கருணையா | சு. அ. சுப்பராய பிள்ளை | இண்டர்நாஷனல் கம்பெனி, சென்னை |
| 39. | 1922 | அமிர்தசாகரன் அல்லது கோடீசுவரனுடைய குமாரன் | எஸ். எஸ். அருணகிரி நாதன் | இ. மா. கோபாலகிருஷ்ண கோன், மதுரை, 1930 |
| 40. | 1923 | மதுராம்பாள் | டி. எஸ். ஸ்ரீனிவாசன் | பிரிட்டிஷ் பிரஸ், சென்னை |
| 41. | 1925 | மெகாதகன் அல்லது மாயாசித்தன் | முத்துக்குமாரஸ்வாமிப் பாவலர் | தி. இராஜகோபால முதலியார், சென்னை |
| 42. | 1927 | சாம்பசிவம் ஞானாமிர்தம் அல்லது நன்னெறிக் களஞ்சியம் | யாழ்ப்பாணம், அ. நாகலிங்கம் | எஸ். லாஸர் அண்டு சன்ஸ், கோலாலம்பூர் |
| 43. | 1928 | மோகனாம்பாள் அல்லது காதலரின் வெற்றி | க. ஷண்முக முதலியார் | ஸ்ரீபானுமதி அச்சுக்கூடம், சூளை, சென்னை |
| 44. | 1929 | சுந்தரகமலா | பி. கே. ஈஸ்வர ஐயர் | டி. எஸ். சுப்ரமணியம், கும்பகோணம் |
| 45. | 1930 | சாமளநாதன் | வை. மு. கோதைநாயகி | ஜகன் மோகினி, சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 46. | 1896 | கமலம் | திருமதி எஸ். சத்திய நாதன் (ஆங்கில மூலம்), சாமுவேல் பவுல் (மொ.பெ.ஆ.) | கிறித்துவ லிட்ரரி சொஸைட்டி, சென்னை |
| 47. | 1898 | சகுணா | திருமதி எஸ். சத்திய நாதன் (ஆங்கில மூலம்), சாமுவேல் பவுல் (மொ.பெ.ஆ.) | கிறித்துவ லிட்ரரி சொஸைட்டி, சென்னை |
| 48. | 1904 | தில்லைக் கோவிந்தன் | அ. மாதவையா (ஆங்கில மூலம்), வே. நாராயணன் (மொ.பெ.ஆ.) | தினமணி காரியாலயம், சென்னை, 1979 |
| 49. | 1909 | சத்தியானந்தன் | அ. மாதவையா (ஆங்கில மூலம்), சரோஜினி பாக்கிய முத்து (மொ.பெ.ஆ.) | கிறித்துவ இலக்கியச் சங்கம் 1979 |
| 50. | 1915 | கிளாரிந்தா | அ. மாதவையா (ஆங்கில மூலம்), சரோஜினி பாக்கியமுத்து (மொ.பெ.ஆ.) | கிறித்தவ இலக்கியச் சங்கம் 1976 |
| 51. | 1931 | விசாலாட்சி அல்லது கட்டு நீங்கிய காரிகை | இ. சிவம் | ஆசிரியர், காரைக்குடி |
| 52. | 1931 | மோகன ரஞ்சனி அல்லது சமூகத் தோற்றம் | சகோதரி கிரிஜாதேவி | டாக்டர் பாலகிருஷ்ணன், சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 53. | 1931 | ஜெயகாந்தம் அல்லது சாரதா சட்டம் | ஈ. அப்பாதுரை ஐயர் | பி.வி. கன்னப்ப முதலி, மதுரை |
| 54. | 1931 | இராஜா சுந்தரம் | எஸ். வேலாயுதம் பிள்ளை | ஆசிரியர், திருவனந்தபுரம் |
| 55. | 1932 | கண்யசீல-கனக பூஷணம் அல்லது தாய்ப்பாஷாபிமான சதிபதி | டி. பி. கனகராஜ் | பப்ளிசிட்டி அண்ட் சர்வீஸ் பிரஸ், சிரம்பான் |
| 56. | 1932 | ஜானகியின் மறுவிவாகம் | ஆர். ஸ்ரீனிவாசன் | கே. முருகேச முதலியார், சென்னை |
| 57. | 1933 | தென்னூர்க் கோகிலம் அல்லது தெருவில் வீழ்ந்த குறிப்புப் புத்தகம் | இ. சிவம் | ஆசிரியர், காரைக்குடி |
| 58. | 1933 | சொர்ணவல்லி | அஞ்சா நெஞ்சன் | சீர்திருத்தப் பதிப்பகம், காரைக்குடி |
| 59. | 1935 | சந்திரிகா | குகப்பிரியை | அல்லயன்ஸ், சென்னை, 1946 |
| 60. | 1935 | விமலா அல்லது விதவை மணம் | கே.எஸ். வெள்ளைச்சாமி பிள்ளை | ஆசிரியர், திருநெல்வேலி |
| 61. | 1936 | காலக் கதிரவன் அல்லது அடிமைகள் வெற்றி | வி. ராமநாதன் | அழ. சித. வீரப்ப செட்டியார், கல்லுப்பட்டி |
| 62. | 1936 | இன்பஜோதி | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 63. | 1936 | தாசிகள் மோசவலை அல்லது மதிபெற்ற மைனர் | மூவலூர், இராமாமிர்தத் தம்மாள் | ஆசிரியை, குற்றாலம் |
| 64. | 1937 | சந்திர மண்டலம் அல்லது அதிருஷ்ட மழை | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 65. | 1938 | விதவையின் கண்ணீர் | கே. வெங்கடராவ் | மாருதி பப்ளிஷிங் கம்பெனி, சென்னை |
| 66. | 1938 | சொற்பன உலகம் | வி. இராமநாதன் | சாரதா பப்ளிஷிங் ஹவுஸ், தேவகோட்டை |
| 67. | 1938 | கள்வனின் காதலி | கல்கி | சின்ன அண்ணாமலை பதிப்பகம், சென்னை, 1954 |
| 68. | 1938 | கானகத்தில் மறைந்த காரிகை அல்லது தமயந்தி | சுப. மாணிக்கவாசகன் | கண்டவிராயன்பட்டி |
| 69. | 1938 | கம்லா-கண்ணன் காதற் கடிதங்கள் | செய்யூர் எஸ். சார நாயகி அம்மாள் | எம். எஸ். ராமுலு கம்பெனி, சென்னை |
| 70. | 1939 | வத்ஸகுமார் | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 71. | 1939 | புரட்சிப்பெண் (பலாத்காரம்) | சாண்டில்யன் | வானதி பதிப்பகம், சென்னை, 1978 |
| 72. | 1939 | தாசியின் மோசம் அல்லது கற்பின் கமை | ஆ. சக்திவேற்பிள்ளை | ஹரிசமய திவாகரம் பிரஸ், சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 73. | 1941 | தயாநிதி | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 74. | 1941 | ஜீவநாகரத்தினம் | எ.எல். அருமூர்த்தி செட்டியார் | ஆசிரியர், சென்னை |
| 75. | 1942 | ஞானதீபம் | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 76. | 1942 | கலாநிலையம் | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 77. | 1942 | சின்னச்சாம்பு | வ.ரா. | தமிழ்நாடு புத்தக நிலையம், சென்னை, 1962 |
| 78. | 1948 | குமாஸ்தாவின் பெண் அல்லது கொலைகாரி யின் குறிப்புக்கள் | சி.என். அண்ணாதுரை | கே.ஆர். நாராயணன், சென்னை, 1953 2 ஆம் பதிப்பு |
| 79. | 1943 | மதுரகீதம் | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 80. | 1946 | வெளுத்த வானம் | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 81. | 1946 | ஸவிதா | ஆர்வி | கலைமகள் காரியாலயம், சென்னை, 1955 2ஆம் பதிப்பு |
| 82. | 1947 | தெய்வீக ஒளி | வை.மு. கோதைநாயகி | ஜகன்மோகினி, சென்னை |
| 83. | 1947 | சாகாவரம் | ய. லக்ஷ்மிநாராயணன் | கலைமகள் காரியாலயம், சென்னை |
| 84. | 1947 | கள்ளோ காவியமோ | மு. வரதராசன் | பாரி நிலையம், சென்னை, 1970, மறுபதிப்பு |

## பயன்பட்ட நூல்கள்


எங்கெல்ஸ், பி., குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ (ஆண்டு இல்லை), மூன்றாம் பதிப்பு (மொழியாக்க நூல்)

சிவத்தம்பி, கா., நாவலும், வாழ்க்கையும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1978

,, ,, இலக்கியமும் கருத்து நிலையும், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1982

சின்னையா செட்டியார், மு., வியாசங்களும், உபந்நியாசங்களும், விவேகபாநு அச்சியந்திர சாலை, மதுரை, 1913

சீதாலட்சுமி, வே., தமிழ் நாவல்கள் (அகர வரிசை) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985

தண்டாயுதம், இரா., சமூக நாவல்கள், சு. வேங்கடராமன் (மொ. பெ. ஆ.), தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1979

தோதாத்ரி, எஸ்., ஜெயகாந்தன் ஒரு விமர்சனம், அன்னம் வெளியீடு, சிவகங்கை, 1976

பரிமேலழகர் (உ. ஆ.), திருக்குறள், பாரதி பதிப்பகம், சென்னை, 1963

பாக்கியமுத்து, தி., (ப. ஆ.) **நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி**, கிறிஸ்துவ இலக்கியச் சங்கம், சென்னை, 1979

,, ,, **தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்**, கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1981

வானமாமலை, நா., (ப. ஆ.) **தமிழ் நாவல்கள் ஒரு மதிப்பீடு**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1977

வேங்கடசாமி நாட்டார், ந.மு., (உ.ஆ.), **சிலப்பதிகாரம்**, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடு, பாகனேரி, 1968

வேங்கடசாமி ரெட்டியார் (ப.ஆ.), **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்**, திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை. 1981, 2ஆம் பதிப்பு

வையாபுரிப்பிள்ளை, எஸ். (தொ.ஆ & ப. ஆ.), **சங்க இலக்கியமும், பாட்டும் தொகையும் தொகுதி I & II**, பாரி நிலையம், சென்னை, 1967

............................. **இயக்கவியல் பொருள் முதல்வாதமும், வரலாற்றுப் பொருள் முதல்வாதமும்— தொடக்கநூல்**, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1970

............................. **பதினெண்கீழ்க்கணக்கு**, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1970

............................. **மார்க்சியமும், பெண் நிலை வாதமும்**, பொன்னி வெளியீடு, சென்னை, 1988

Altekar, A. S., The **Position of women in Hindu Civilization**, Motilal Banarsidass, Delhi, 1983, Reprint

Baig, Tara Ali (Ed.), Women of India, The Publications Divisions, Delhi, 1958

Baig, Tara Ali India's Woman Power, S. Chand Co., Pvt. Ltd., 1976

Chattopadhayay, Kamaladevi, Indian Women's Battle for Freedom, AbhinavPublications, New Delhi, 1983

Cormack, Margaret, The Hindu woman, Asia Publishing House, Bombay, 1961

Desai, Neera, Woman in Modern India, Vora & Co., Publishers Private Ltd., Bombay, 1977, 2nd Edition.

Everett, Jana Matson, Women and Social Change in India, Heritage, New Delhi, 1981

Gupta, A. R.. Women in Hindu Society, Jyotsna prakashan, New Delhi, 1982, 2nd Edition

Hate, Chandrakala, A., Changing Status of woman' Allied Publishers private Ltd., Bombay, 1969

Hooja, S. L., Dowry System in India-A Case Study, Asia press, New Delhi, 1969

Kapadia, K. M., Marriage and Family in India, Oxford University press, Bombay, 1966, 3rd Edition

Kapur, Promilla, The Life and world of Call-girls in India, Vikas publishing House Pvt. Ltd., New Delhi, 1976

Kuppuswamy, B., Social Change in India, Vikas Publishing House Pvt. Ltd., New Delhi, 198?, 6th Edition

Mehta, Sushila, Revolution and the Status of Women in India, Metropolitan, New Delhi, 1982

Nanda, B.R (Ed), Indian women from purdah to Modernity, Vikas Publishing House Pvt. Ltd., New Delhi, 1976

Natarajan, S., A Century of Social Reforms in India, Asia Publishing House, Bombay, 1959

Radhakrishna Sharma, Nationalism, Social Reform and Indian women, Janaki Prakashan, Patna, 1981

Sengupta, Padmini, The Story of women of India, Indian Book Company, New Delhi, 1974

Shridevi, S., A Century of Indian Womanhood, Rao and Raghavan, Mysore, 1965

................................ National Seminar on Education and Employment for Women in India, Mother Teresa Women's University, Publication II, Kodaikanal, 1985


## இதழ்க் கட்டுரைகள்


குரு, எஸ்., ''வை.மு. கோதைநாயகி அம்மாள்'', தினமணி, 23-9-1988

சீனிவாசன், டி. ஆர்., ''சிறை சென்ற முதல் பெண்மணி'' தினமணி, 30-9-1988

சுப்புலட்சுமி அம்மாள், ''என் கல்வி'' குமரிமலர், 1943 (பக். 82-91)

| | |
|---|---|
| மரகதவல்லி, மு., | மாதர் மறுமணம், மலர் 2, இதழ் 9, 1938 |
| ............................ | ''வரதட்சிணை-எங்கே, எப்படி இது பிறந்தது'' சுமங்கலி, 20-11-1987 |
| Gandhi, M. K., | Young India, 5-8-1926 |

## ஆய்வேடுகள்

[அச்சில் வெளிவராதது]

| | |
|---|---|
| அப்துல் ரசாக், அ., | ''இந்திய விடுதலை இயக்கமும், தமிழ் நாவல்களும்'', மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் பட்ட ஆய்வேடு, 1979 |

[நூலாக வெளிவந்தவை]

| | |
|---|---|
| அருணாசலம், சபா., | தமிழ் நாவல்களில் காந்தியத் தாக்கம், காளத்தி நூலகம், தேவகோட்டை, 1981 |
| Nannithamby, Loganayagy, | Women in Modern Tamil Literature (1880 — 1960), University of Malaya publication, Kualalumpur, 1969 |

## அகராதிகளும், கலைக்களஞ்சியங்களும்

| | |
|---|---|
| Bram, Leon L., Robert S. philips & Norma H. Dickey (Ed), | Funk and Wagnalls New Encyclopaedia Vol XXVII, U.S.A., (Noyear) |
| Geddie William (Ed), | Chamber's Twentieth Century Dictionary, W&R Chambers Ltd., London, 1952 |
| Gurnin, Robert p., Charles E. Swanson & Phillp W. Goetz (Ed.) | The New Encyclopaedia Britannica, Vol. XII. Chicago 1986 |
| ............................ | Tamil Lexicon, Vol. II, part II, University of Madras, Madras, 1927. |

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழ் நாடக மலர் (தொ நூ.) | 60-00 |
| 2. | ஆய்வுச் சிக்கல்களும் தீர்வுகளும் (தொ.நூ.) | 85-00 |
| 3. | Mysticism of Love in Saiva Tirumurais | 50-00 |
| 4. | எண்பத்து மூன்றில் தமிழ் பகுதி-2 (தொ.நூ.) | 30-00 |
| 5. | The Contributions of the Tamils to Indian Culture : Vol-IV-Religion&Philosophy (தொ. நூ.) | 80-00 |
| 6. | Vol.III-Socio-Cultural Aspects (தொ.நூ.) | 90-00 |
| 7. | Vol II - Art & Architecture (தொ.நூ.) | 30-00 |
| 8. | Vol I-Language&Literature (தொ.நூ) | 18-00 |
| 9. | எண்பத்து மூன்றில் தமிழ்-பகுதி I (தொ.நூ ) | 47-00 |
| 10. | சிவகிரி குமர சதகம் (சு.ப ) | 39-00 |
| 11. | புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை (சு.ப.) | 27-00 |
| 12. | தேரையர் அந்தாதி (சு.ப.) | 33-00 |
| 13. | குசலவர் சுவாமி கதை (சு.ப.) | 36-00 |
| 14. | குணவாகடம் (சு ப.) | 40-00 |
| 15. | தோட்டுக்காரி கதை (சு ப) | 28-00 |
| 16. | சங்கத் தமிழரின் மனிதநேய மணி நெறிகள் (அ சொ.) | 24-00 |
| 17. | உலகத் தமிழ் மாநாட்டுக்கட்டுரைகள் அடைவு | 35-00 |
| 18. | Selected poems of Bharathidasan: Translation: Tamil - Telugu (மொ.பெ.) | 60-00 |
| 19. | Tamil-Kannada | 60-00 |
| 20. | Tamil - Malayalam (மொ.பெ) | 60-00 |
| 21. | Tamil - English (மொ பெ) | 60-00 |
| 22. | பாரெலாம் பரந்த தமிழர் (தொ.நூ) | 25-00 |
| 23. | காண்டேகரும் கா.ஸ்ரீ.ஸ்ரீ யும் | 18-00 |
| 24. | Chieftains of the Sangam Age | 20-00 |
| 25. | A Comparative Study of Tamil and Japanese (அ. சொ) | 15-00 |
| 26. | தமிழும் பிற துறைகளும் (தொ.நூ) | 35-00 |
| 27. | பெண்ணியம் (அ சொ) | 25-00 |
| 28. | திருமுறை இலக்கியம் | 50-00 |
| 29. | அழகியல் சிந்தனைகள் | 30-00 |
| 30. | இலக்கியத்தின் நோக்கமும் பயனும் (தொகுதி) | 65-00 |
| 31. | பெ. நா அப்புசாமியின் அறிவியல் கட்டுரைகள் | 75-00 |
| 32. | முத்தாரம்மன் கதை | 85-00 |
| 33. | சந்திரபதன் கதை | 40-00 |
| 34. | கன்னிலாடி நரசிங்க நாயக்கர் வளமடல் | 20-00 |
| 35. | கருணை அம்மன் அந்தாதி | 22-00 |
| 36. | ஒப்பிலக்கியம் கொள்கைகளும் செயல் முறைகளும் | 15-00 |